**தமிழகத்தின் தற்காலிகத் தலைவலிகள்**

ஆசிரியர் : முனைவர் க. பூரணச்சந்திரன்



முதற்பதிப்பு : மே 2014

பதிப்பு : Thulir Software Technologies

Chennai

# முன்னுரை

மின்புத்தகமாகவே நான் முதன்முதலாக வெளியிடும் நூல் இது. இதில் நமது தமிழ்ச்சமூகம் பற்றி நான் எழுதிய குறிப்புகள் அடங்கியுள்ளன. இவையாவுமே 2011-2014 காலப்பகுதியில் 'சிறகு' இணைய இதழுக்கென எழுதப்பட்டவை. இவற்றை வெளியிட்ட அந்த இதழின் ஆசிரியர்கள் அனைவருக்கும்-குறிப்பாக திரு. சாகுல் ஹமீது, திரு. சௌமியன் ஆகியோருக்கு என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கட்டுரைத் தொகுதி பொதுமக்கள் வாசிப்புக்கு-குறிப்பாக இளைஞர்கள் சிந்தனைக்குப் பெரிதும் பயன்படும் என்று கருதுகிறேன். இன்றைய பிரச்சினைகளை நான் தற்காலிகமானவையாகவே கருதுகிறேன் என்பதால் நூலுக்கு இந்தத் தலைப்பு இட்டிருக்கிறேன். எதிர்காலம் நலமாக இருக்கும் என நம்புவோம்.

இதனைச் சீரானமுறையில் மின்புத்தக வடிவத்தில் ஆக்கித்தந்த துளிர்சாஃப்ட் நிறுவனத்திற்கு என் நன்றிகள் உரியன.

**க. பூரணச்சந்திரன்**

**திருச்சி**

# உள்ளடக்கம்

## பொருளடக்கம்

# 1. தமிழகத்தின் தலைவலிகள்

இன்று இந்தியாவில் தமிழ்நாடும் தமிழும் இரண்டாந்தர நிலையைத்தான் பெற்றிருக்கின்றன என்பதை அரசியல் அறிவோ இலக்கிய அறிவோ பொது அறிவோ இல்லாதவன் கூடப் புரிந்துகொள்ள முடியும். உண்மையைச் சொன்னால் இலங்கைத் தமிழர்களை அழித்த பெருமக்கள், அதேபோல ஏதாவது செய்து தமிழகத் தமிழர்களையும் அழிக்கப்பார்க்கிறார்களோ என்ற அச்சம்தான் நம் முன்னால் எழுகிறது.

தமிழகத்தின் முன்னால்தான் எத்தனை எத்தனை பிரச்சினைகள்? காவிரியில் சொட்டுத் தண்ணீர்கூடத் தரமுடியாது என்று கர்நாடகா சொல்கிறது. முல்லைப் பெரியாறு அணையில் பிரச்சினை செய்கிறது கேரளம். இவர்கள் யாருக்கும் உச்சநீதி மன்றம், அதன் தீர்ப்புகள் இவை பற்றிய கவலைகள் சற்றும் இல்லை. பாலாற்றில் அணைகட்டுவதாக ஆந்திரம் குண்டுபோட்டுக் கொண்டிருக்கிறது. (ஒருவேளை) தமிழகம் சற்றே தவறினால் மட்டும் கதறுகிறார்கள் இங்கிருக்கும் அரசியல்வாதிகள் அனைவரும். கூடங்குளத்தின் ஜனநாயகப் போராட்டத்தை அரசு பயங்கரவாதம் ஏறத்தாழ ஒடுக்கிவிட்டது. இதில் இங்குள்ள தமிழர்களுக்கும் பிரக்ஞை இல்லை. எல்லா இடங்களிலும் தமிழன் பின்னுக்குத் தள்ளப்பட்டுக்

கொண்டிருக்கிறான். தமிழக மீனவர் பிரச்சினை எத்தனை எத்தனை ஆண்டுகளாக நீடிக்கிறது? அது பற்றி எந்த அரசாவது கவலைப்பட்டுத் தீர்க்க முயன்றதுண்டா?

சிங்களத்திற்குத் தரும் ஆதரவின் அளவு சொல்லமுடியாதது. இதில் காங்கிரஸ் அரசாங்கம், பிஜேபி அரசாங்கம் என்ற வேறுபாடே இல்லை. ஆனால் இந்திய அரசாங்கம் தமிழக மீனவர்களைக் காப்பாற்ற எந்த ஆதரவும் தருவதில்லை என்பதைக் கண்கூடாகத்தான் கண்டு வருகிறோம். கச்சத்தீவு அருகே மீன்பிடிக்கத் தமிழ் மீனவர்களுக்கு உரிமையில்லை என்று உச்சநீதி மன்றமும் மத்திய அரசும் சொல்லிவருகின்றன. அப்புறம் எங்கிருந்து அவர்கள் தமிழ் மீனவர்களைக் காப்பாற்றுவது?

வடநாட்டு மதவாதக் கட்சிகள் தமிழ் சமஸ்கிருதத்திலிருந்து கிளைத்த மொழி என்று இன்னும் பொய்சொல்லி வருகிறார்கள். அது அப்படியல்ல என்பதை பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, கால்டுவெல் காலம் முதலாக நாம் திருப்பிச் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறோம். ஆனால் அவர்கள் அதை ஏற்கத் தயாராக இல்லை. தமிழுக்குச் செம்மொழி அந்தஸ்து கொடுத்த முறை மிகக் கேவலமானது. ஆயிரம் ஆண்டு பழமையான மொழி என்று சொல்லிக் கொடுத்தார்கள். அதையும் கேவலமான முறையில் பெற்றுக்கொண்டு நாங்கள்தான் செம்மொழித் தகுதி வாங்கினோம்

என்று சவடாலுக்குப் பயன்படுத்திக்கொண்டார்கள் ஒரு கட்சியினர். ஆயிரம் ஆண்டுப் பழமை என்றால் தெலுங்கும் கன்னடமும் கூடச் செம்மொழிகள்தான். ஆனால் தமிழோடு நேரடியாகத் தொடர்பற்ற மத்திய திராவிட மொழியான தெலுங்கே குறைந்தபட்சம் தமிழைவிட ஆயிரம் ஆண்டு பிற்பட்டது என்பதில் எந்தவிதச் சந்தேகமும் இல்லை. இலக்கியங்களையும் கல்வெட்டுகளையும் பார்ப்பவர்கள் இதை நன்றாகப் புரிந்துகொள்ளமுடியும்.

தமிழில் உள்ள இலக்கிய ஆக்கங்கள் காலந்தோறும் திட்டமிட்டே அழிக்கப்பட்டன என்பதை வரலாற்றைப் பார்ப்பவர்கள் உணரமுடியும். இதில் தமிழகத்தில் வந்து குடியேறிய தெலுங்கர்கள், கன்னடர்கள், மலையாளிகளின் பங்கு மிக அதிகம். ஆற்றங்கரைப்பகுதியில் இருந்தால் ஆடிப்பெருக்கில் ஓலைச்சுவடிகளைப் போட்டுவிடுவார்கள். (ஆனால் தமிழகத்தின் ஆதிக்கத்தில் மட்டும் அவர்கள்தான் இருப்பார்கள்!) ஆற்றங்கரைப் பகுதி அல்ல என்றால் மார்கழிமாதக் கடைசிநாள் 'போகி'யன்று (இந்த போகித்திருநாள் எப்படி எக்காலத்தில் உருவானது என்பதைப் பார்க்கவேண்டும்) பழைய ஓலைகளைக் கொளுத்தவேண்டும் என்று கொளுத்திவிடுவார்கள். இப்படி அனலுக்கும் புனலுக்கும் சாதாரணமக்கள் வாரிவழங்கியவை போக, ஆட்சியாளர்களான அயலக மக்கள் தமிழக ஆட்சியைக் கைப்பற்றி, தமிழுக்கு வாழ்வே தராமல் அழித்த முறையை நாடறியும். சரி, இதுவரை அழிந்தவை

போக மீதமிருக்கும் தமிழ் இலக்கியப் படைப்புகளே வியப்பளிக்கும் வகையிலான விரிவும் பண்பும் கொண்டவை என்பதை விளக்கினால், வடநாட்டவரிடமிருந்து எந்த பதிலையும் பெறமுடியாது. ஓரளவேனும் படித்தால், படித்து அந்த இலக்கியப் பண்பாட்டையும் கருத்துகளையும் உள்வாங்கினால் அல்லவா தெரிந்துகொள்ள முடியும்? இதற்கு நம் அரசியல் அமைப்பு இடம் தரவில்லை. ராஷ்டிர பாஷை என்று நாம்தான் இந்தியைப் படிக்கவேண்டுமாம்! பிற '**இந்தி**'யர்கள் தமிழையோ வேறு எந்தத் தென்னிந்திய மொழியையோ தெரிந்து கொள்ளவே மாட்டார்களாம்.

நாம்தான் இந்திய மொழிகள் அனைத்திலிருந்தும் மொழிபெயர்த்து விழுந்து விழுந்து படித்துக்கொண்டிருக்கிறோம். வடக்கில், உதாரணமாக இந்தியில், வங்காளியில், மராட்டியில் அப்படிச் செய்வதில்லை. அவர்களுக்குத் தமிழ் போன்ற மொழிகள் பற்றிக் கவலையே இல்லை. தமிழ் படித்தால் அவர்களுக்கு என்ன கிடைக்கப் போகிறது? வேலை கிடைக்கப் போகிறதா? பணம் கிடைக்கப் போகிறதா? இல்லை, வேறுவிதமான மதிப்பு ஏதாவது கிடைக்கப்போகிறதா? தாய்க்குச் சோறு போடுவதற்கே காசு எதிர்பார்க்கும் லோகாயத உலகத்தில் தமிழ் போன்றதொரு மொழியைப் படி என்பதற்கு நாம் என்ன காரணம் சொல்ல முடியும்?

தமிழின் நவீன வளம் பிற இந்திய மொழிகளோடு போட்டியிடும் அளவுக்கு இல்லை. ஆகவே அவர்களுக்கு நவீன வளத்திற்காகக்கூட தமிழைப் படிக்கவேண்டிய அவசியம் இல்லை. அவர்கள் ஐரோப்பிய ஆங்கில இலக்கியங்களைத் தேவையான அளவு படித்துக்கொள்கிறார்கள். பிறகு தங்கள் இலக்கியங்களை அவற்றிற்கு இணையாக உருவாக்க முயற்சி மேற்கொள்கிறார்கள். ஒரு வகையில் சொன்னால், அவர்கள் நவீன, நவீனத்துவ, பின்நவீனத்துவ இலக்கியம் தொடங்கி, பின்னால் செல்கிறார்கள். நம்மைப்போல சங்க காலத்தில் தொடங்கி இன்றுவரை வருவதில்லை. தமிழில் நவீன சிந்தனை முறை இல்லை, தமிழ்நாட்டில் நவீன வாழ்வியல் இல்லை என்பது வடநாட்டவரின் பொதுக்கருத்தாக இருக்கிறது. இப்படிப்பட்ட மண்ணிலிருந்து எப்படிப்பட்ட செவ்வியல் இலக்கியங்கள் தோன்றியிருக்க முடியும் என்பது அவர்கள் வாதம்.

இன்னொன்றும் புத்தியில் படுகிறது. ஒருவர் கேட்டிருந்தார், ஜாதி இன்றி நம்மை எப்படி அடையாளப்படுத்திக் கொள்வது என்று. ஜாதி, மதம் எல்லாவற்றையும் மீறியதுதான் மொழி. செட்டியாருக்கும், முதலியாருக்கும், பிள்ளைமாருக்கும், தேவேந்திரகுல வேளாளருக்கும், பறையருக்கும், புலையருக்கும் எல்லாருக்குமான மொழி தமிழ்தான். நாம் யாவரும் ஊறி வளர்ந்த மொழி அதுதான். முஸ்லிமாக இருந்தாலும் கத்தோலிக்கக் கிறித்துவராக இருந்தாலும் பௌத்தராக ஜைனராக இருந்தாலும் பேசும் மொழி தமிழ்தான். இதை

மனத்தில் கொண்டால்தான் நாளைக்குத் தமிழ் இருக்கும். இல்லையென்றால் ஜாதி இருக்கும், மதம் இருக்கும், தமிழ் இருக்காது.

ஆனால் இப்படிப்பட்ட மனப்பான்மையை ஆதியிலிருந்து வளர்த்துவிட்டார்கள். சைவர்கள் என்றால் திருவாசகம், தேவாரம் படிப்பார்கள். ஆனால் தாயுமானவரை, வள்ளலாரைக்கூடப் படிக்கமாட்டார்கள். இந்த மனப்பான்மை காரணமாகத்தான் ஆறுமுக நாவலர் காழ்ப்புணர்ச்சியோடு "அருட்பா அல்ல மருட்பா" என்று வாதிட்டார். அதுபோல ஸ்ரீரங்கம் ஜீயமடம் என்றால் தப்பித் தவறி நாலாயிரம் படிப்பார்கள், தேவாரத்தைக் கண்ணாலும் பார்க்கமாட்டார்கள். கிறித்துவக் கல்லூரி என்றால் 'தமிழுக்குக் கிறித்துவக் கொடை' என்று கருத்தரங்கம் நடத்துவார்கள். முஸ்லிம் கல்லூரி என்றால் 'முஸ்லிம்களின் கொடை' இருக்கவே இருக்கிறது. நல்லவேளை, இன்னும் முதலியார்களின் தமிழ்க்கொடை. செட்டியார்களின் தமிழ்க் கொடை, பள்ளர்களின் தமிழ்க்கொடை என்றெல்லாம் ஆரம்பிக்கவில்லை. ஆனால் பார்ப்பனர்களின் தமிழ்க்கொடை பற்றி மட்டும் இடைவிடாமல் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். பாரதி இல்லையென்றால் தமிழ் ஏது, உ.வே. சா. இல்லையென்றால் சங்க இலக்கியம் ஏது என்று ஆர்ப்பரிக்கிறார்கள். ஆனால் இந்த எச்சசொச்சங்கள் வாயளவில்தான், பிராமணருக்கு இன்றும் அனைத்தும் வேதத்தின் கிளைகள்தான், சமஸ்கிருதத்தின்

எச்சங்கள்தான். தமிழர்கள் போய் விபூதி வாங்கி கண்ணில் தூவிக் கொள்ளட்டும். அல்லது நன்றாக நாமத்தைப் போட்டுக்கொள்ளட்டும்.

எவ்வளவு நுட்பமாக ஊடகங்கள் பிராமணத்துவத்தை தமிழுக்குள் கொண்டு வருகின்றன என்பது பற்றி எவருக்கும் கவலையில்லை. நான்கைந்து ஊடகங்கள் வடநாட்டுத் தொடர்களை (சீரியல்களை) மட்டுமே ஒளிபரப்புகின்றன. தமிழில் தொலைக்காட்சித் தொடர்கள் தயாரிக்கக்கூட வக்கற்றவர்களுக்கு ஊடகம் எதற்கு? அந்த வடநாட்டுத் தொடர்களில் பார்த்தால் வடநாட்டு மங்கையர் நிறைய நகைகளைப் பூட்டிக்கொண்டு அடிமைகளாக ஆனால் ஆக்ரோஷத்தோடு பேசிக்கொண்டு வலம் வருவார்கள். ஆண்கள் ஷெர்வானி அணிந்து ஜமீன்தார்களாக. மொட்டைப் பெண்மணிகள் (விதவைகள் இப்படித்தான் இன்றும் இருக்கிறார்களாம்), முக்காடு போட்டவண்ணம் இன்னும் அதிகாரம் செய்துகொண்டு வலம் வருகிறார்கள். எவ்வளவு பிற்போக்கான கருத்துகளை அவை பரப்புகின்றன? ஏன் இவற்றிற்கு எதிர்ப்பு சற்றும் இல்லை? தமிழகத்தில் இவையெல்லாம் போய் எத்தனை காலம் ஆயிற்று? எதற்கு இவை இப்போது, இங்கே? எல்லா ஊடகங்களிலும் ஜயல**ஷ்**மி (லட்சுமிகூட கிடையாது!) எந்திரம், அனுமான் எந்திரம், பஜ்ரங்பலி மந்திரம், எல்லாம் விலைக்கு. பத்தாயிரம் ரூபாய்செலவு செய்து இவற்றை வாங்கினால் பத்துகோடி சம்பாதித்துவிடலாம் என்று பிரச்சாரம்.

தமிழ் எதிர்காலத்தில் பிழைக்க வேண்டுமென்றால், தமிழ்நாட்டில் இதுவரை தோன்றியிருக்கின்ற தனித்தமிழ் இயக்க மரபு, தமிழ்ச் சீர்திருத்த மரபு, மார்க்சிய மரபு ஆகியவற்றை ஏற்று-இவற்றில் ஒன்றையாவது ஏற்று-தமிழர்கள் உருப்படவேண்டும். இல்லை என்றால் தமிழும் இல்லை, எதிர்காலத்தில் தமிழ் நாடும் இல்லை.

நாம் சங்ககாலத்திலேயே வடமொழி வந்து கலந்துவிட்டதை மறுக்கவில்லை. வடநாட்டு மரபுகள் தெரிந்திருந்ததைப் பற்றியும் மறுக்கவில்லை. அவையெல்லாம் காலத்தின் கோலம். ஆனால், இந்தியாவில் இன்றும், சமஸ்கிருதத்தை முற்றிலும் புறந்தள்ளி ஒரு மொழி தன் கருத்தை வெளிப்படுத்த முடியும் என்றால் அது தமிழ்தான். அருகருகில் இருந்தால் கலப்பு என்பது இயல்பு என்று நாம் பேசுகிறோம், ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் சமஸ்கிருதவாதிகள் இன்றும்கூட, சமஸ்கிருதத்தைத்தான் பிற மொழிகள் ஏற்றுக்கொண்டன, சமஸ்கிருதத்தில் கலப்பு ஏற்படவேயில்லை என்று தான் சொல்லிக்கொண்டு திரிகிறார்கள். அறிவியல் மனப்பான்மை சற்றும் இல்லாமல் அவர்கள் உளறுவதை எல்லாம் இந்திய அரசாங்கம் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறது.

சேரன் செங்குட்டுவன் வடநாட்டுக்குப் படையெடுத்துச் சென்றிருக்க முடியாது, அக்காலத் தமிழருக்கு அவ்வளவு நிலவியல் அறிவும் படைபலமும் கிடையாது என்று ஒரு பார்ப்பன வரலாற்றாசிரியர்

வாதிட்டார். ஆனால் வடநாட்டு வேடனான வால்மீகிக்கு மட்டும் இந்தியாவின் தெற்கு எல்லை தாண்டி இலங்கை வரை நிலவியல் அறிவு இருந்ததாம். இராமன் பாலம் கட்டினானாம். இலங்கையை ஒரு நாடு என்றே குறிப்பிடாத, **ஒரு நகரம்** என்றே குறிப்பிடுகின்ற வால்மீகி எந்த இலங்கையைப் பேசுகிறார் என்ற கேள்வியைக்கூட மூட ஜனங்கள் கேட்கத் தயாராக இல்லை. இப்படித்தான் இந்துத்துவம் திணிக்கப்படுகிறது மூளை இல்லாமல் நம்மீது. தமிழ் அரசியலிலும் பண்பாட்டிலும் இந்துத்துவம் கலந்து கேலிக்கூத்தாக்கிவிட்டது.

ஆனால் குறை நாம் முன்பு கூறிய மூன்றுவித மரபுகள்மீதும் இருக்கிறது. (தனித்தமிழ் மரபு, சீர்திருத்த மரபு, மார்க்சிய மரபு). இவை எந்த பாதிப்பை நம் பாமரத்தமிழ் மக்கள்மீது ஏற்படுத்தின? இவற்றின் தாக்கம் ஏன் அவர்கள்மீது கொஞ்சம்கூட இல்லை? ஏன் அவர்கள் வடமொழிப் பெயர்களாகப் பார்த்துப் பார்த்துத் தங்கள் குழந்தைகளுக்கு வைக்கிறார்கள்? (சாதாரணமான, ராமசாமி, கிருஷ்ணன், காமாட்சி போன்ற பெயர்கள்கூட இப்போது இல்லை. அனன்யா, நமீஷா, காமேஷ் என்பதுபோல-நிச்சயமாக ஒரு ஷ இருந்தால்தான் பெயருக்கு இப்போது மதிப்பு). ஏன் அவர்கள் தங்கள் குழந்தைகள் டாடி மம்மி என்று ஒரு சொல் பேசிவிட வேண்டும் என்பதற்காகக் கொஞ்சமும் தரமற்ற வணிகப்பள்ளிகளிலும் கொண்டு போய் லட்சரூபாய் நன்கொடை கொடுத்துச் சேர்க்கிறார்கள்?

ஒரு காலத்தில் சீர்திருத்தம் பேசிய, இங்கர்சாலையும் பெர்னாட் ஷாவையும், ரஸ்ஸலையும் அறிமுகப்படுத்திய திராவிட இயக்கம் என்ன ஆயிற்று? எங்கே போயிற்று அது? ஏன் மூடநம்பிக்கையில் மூழ்கிக் கொண்டிருக்கிறார்கள் அனைவரும்? வள்ளலாரும், அயோத்திதாசரும் பெரியாரும் காட்டிய மரபுகள் எல்லாம் நசித்துப் போய், இன்று சமூக உணர்வே அற்ற வெகுஜன அரசியலும், எந்த அழகியல் உணர்வும் அற்ற வெகுஜன ஊடக அரசியலும் நிகழ முடிகிறது?

இன்றும் மேற்கத்திய தத்துவ, இலக்கிய-எந்த வரலாற்றை எடுத்தாலும் தொடங்குவது சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாடில் தொடங்கித்தான் அத்தனையையும் பேசுகிறார்கள். நியாயமாக இந்தியாவின் கொடை என்று பேசத்தொடங்கினால் தொல்காப்பியரிலிருந்துதான் தொடங்க வேண்டும். ஆனால் தொல்காப்பியரின் கால்தூசும் பெறாத பாணினியிலிருந்து தொடங்குவார்கள்.

எல்லாவற்றையும் விட இன்று நம்மை அதிர்ச்சிக்குள்ளாக்குவது அரசு பயங்கரவாதம்தான். அந்தோனியோ கிராம்சி அந்தக் காலத்திலேயே இதைப்பற்றிச் சொன்னாலும் நாம் சற்றும் அதைப்பற்றிக் கவலைப்படாமல்தான் இருந்தோம். தமிழ் இனம் அழிக்கப்பட்ட நிலை, அதை இந்தியா இன்றுவரை ஆதரிப்பது, கூடங்குளப் போராட்டம் போன்ற ஒரு ஜனநாயகப் போராட்டத்தைக்கூட தண்ணீர்,

உணவுப் பொருள், பிற அத்தியாவசியப் பொருள்கள் இவற்றையெல்லாம் தடுத்து, தீவிரவாதம் என்ற முத்திரைகுத்தி அரசே பிரச்சாரம் செய்வது-இதெல்லாம் எதற்காக? நாட்டு நன்மைக்காக அரசா? தன் மனம்போன போக்கில் இயங்குவதற்காக அரசாங்கமா? இன்றும் கூசாமல், ராஜீவ் காந்தியைக் கொலை செய்ததற்காக (இலங்கைத்?) தமிழர்களுக்கு இந்த தண்டனை வேண்டியதுதான் என்று எழுதுகிறார்கள் நம் தமிழகக் கட்சிக்காரர்கள். இதே ரீதியில் பார்த்தால், ஒரு சீக்கியன் இந்திரா காந்தியைக் கொலைசெய்ததற்காக சீக்கிய இனத்தை அழித்துவிட்டார்களா? ஒரு சீக்கியரான மன்மோகனைத்தானே பிரதமராக்கி வைத்திருந்தார்கள்?

ஏதோ எழுதத் தொடங்கினால் இன்றைய நிலை எங்கெங்கோ இழுத்துக் கொண்டு செல்கிறது. இன்றைய தமிழின் வாழ்வும் வளமும், வெறும் மொழி சம்பந்தப்பட்டவை அல்ல. தமிழர்-மனிதர் சம்பந்தப்பட்டவை. இன்றைய தமிழ் நாட்டின் மூடத்தனம் மாறவில்லை. சாதிக்கலப்பு மணங்கள் நிகழவேயில்லை. பயப்பட வேண்டியிருக்கிறது. கிராமங்களில் தேநீர்க்கடைகளில் இன்னும் தனி டம்ளர்கள். தீண்டாமை. பெண்களை அடிமைகளாகவே தமிழ்த் திரைப்படங்கள் சித்திரித்து, அதுவே தமிழர்களின் பொதுப்புத்தியாக மாறிவிட்டது. இவற்றிற் கெல்லாம் மாற்றுகள் என்ன? இந்தச் சமூகப் பிரச்சினைகள் ஒருபுறம் என்றால், சுற்றுச்சூழல் மாசுபாடு, குடிநீர் கிடைக்காமை, விவசாயத்தின் தோல்வி, மணல் கொள்ளை, விவசாய

நிலங்கள் பிளாட் போட்டு விற்கப்படுதல், என்றெல்லாம் அண்மைக்கால இழிவுகளைப் பட்டியல் போட்டுக்கொண்டே போகலாம். தாதுமணல் கொள்ளையில் ஆளும் கட்சியே ஈடுபட்டுச் சந்தி சிரிக்கிறது. இதைக் கண்டுகொள்ள ஆளேயில்லை.

நான் சொல்ல வருவது, இந்தப் பிரச்சினைகள் எல்லாம் தனித்தனியானவை அல்ல. எல்லாம் ஒன்றுக்கொன்று சங்கிலித்தொடர்களாகப் பின்னியிருப்பவை. நிலம் மொட்டை அடிக்கப்படுவதற்கும், ஆங்கிலப்பள்ளியைத் தமிழன் நாடுவதற்கும், கர்நாடகா தண்ணீர் தர மறுப்பதற்கும், கூடங்குளம் முடக்கப்படுவதற்கும், எல்லா வற்றிற்குமே ஓர் உள்ளார்ந்த, இடையறாத தொடர்பிருக்கிறது, அதைப்பற்றித் தமிழ்மீது, தமிழ்நாட்டின்மீது அக்கறைகொண்டவர்கள் சிந்திக்கவேண்டும் என்பதுதான் அடிப்படை.

## 2. தமிழ் நாகரிகத்தின் எதிர்காலம்

தமிழ் நாகரிகத்தின் எதிர்காலம் பற்றிப் பலர் கவலையோடும் அக்கறையோடும் விவாதிக்கிறார்கள். பொதுவாக நாம் ஏற்றுக்கொள்ளக்கூடிய பல விஷயங்களை அவர்கள் சொல்லவும் செய்கிறார்கள். அவற்றைப் பகுத்துப்பார்த்தால், பெரும்பாலும்

1. உலக/ இந்திய நாகரிகத்திற்குத் தமிழகத்தின் பங்கு ஏற்றுக்கொள்ளப்படாத நிலை

2. இந்தியாவில் தேசிய நலனுக்கு உகந்த கூட்டாட்சிகள் அமையாத நிலை-தமிழ்த் தேசியம் உருவாகாத நிலை

3. ஆங்கிலத்தின் ஆதிக்கம்/ அதன் பின்னணியிலுள்ள உலகமயமாக்கல்

4. செம்மொழிப் பிரச்சினை

5. ஆதிக்கத்தை எதிர்க்கும் அரசியலும் அதனோடு இணைந்த தமிழ்மேம்பாடும் என்ற பொருள்களில் அடங்குகின்றன.

சிலருக்கு தமிழனுக்கு இனவுணர்வில்லையே என்ற கவலை காணப்படுகிறது. ஆனால் அவர்களிடம் ஒருசில தவறான புரிந்துகொள்ளல்களும் கட்சிச் சார்புகளும் இருக்கின்றன.

உதாரணமாக இன்றைய ஆட்சிக்கு முந்திய ஆட்சி தமிழகத்தில் அமைந்தபோது, ஒருவர், தமிழ்ப்பகைவர்களின் கையிலிருந்து 'கேள்' (நண்பர்)களின் கைகளுக்கு ஆட்சி மாறியிருக்கிறது என்றார். தமிழ்ப்பகைவர், கேளிர் என்பதை மிகவும் சுருக்கிப் பார்க்கும் தன்மை இது. இக் 'கேள்'களின் ஆட்சியில்தான் என்றைக்குமே தமிழை வீழ்த்தி ஆங்கிலம் மேன்மைபெற வழிவகுக்கப்பட்டது என்பதையும், உலகமயமாக்கல் தமிழகத்தில் விரிவுபெறப் பாதைகள் திறந்துவிடப்பட்டன என்பதையும் மறந்துவிடுகிறார்கள் இவர்கள். அழிக்கும் கொள்ளிகளில் எந்தக் கொள்ளி பெரியது என்ற ஆராய்ச்சி தேவையில்லை.

என்னைப் பொறுத்தவரை இத்தனை கேள்விகள் தேவையில்லை. அடிப்படைப் பிரச்சினைகள் மூன்றுதான்.

1. தமிழனின் இனவுணர்வின்மையும் தனது நாகரிகம் பற்றி அறியாமையும்.

2. இன்றைய தமிழ்க் கல்வித்துறை, இலக்கியத் துறைகளின் போக்கு.

3. அமெரிக்காவின் ஆதிக்கப்போக்கும், அதற்குக் கருவியாக இருக்கின்ற உலகமயமாக்கமும் அதன் விளைவுகளும். இவற்றைச் சற்றே விரிவாகப் பார்க்கலாம்.

தமிழனின் இனவுணர்வின்மை வரலாற்றுப் பிரசித்தி பெற்றது. ‘தமிழன் என்றொரு இனமுண்டு, தனியே அவர்க்கொரு குணமுண்டு’ என்று பாடினார் நாமக்கல் கவிஞர். அவர் குறிப்பிடும் தமிழனின் தனிக்குணம், என்றைக்குமே அவனுக்கு இனவுணர்வு கிடையாது என்பதுதான்! மனிதனிடம் **‘ இயல்பாகக் காணப்படவேண்டிய இனப்பற்று’** அல்லது மற்ற மாநிலத்தவர்களிடம் காணப்படும் இனப்பற்று என்பது இன்றைக்குத் தமிழர்களிடம் இல்லை. இயல்பாக வரவேண்டியதை எப்படிக் கற்றுக்கொடுப்பது? ஏன் தமிழர்களிடம் இயல்பாகவே தமிழின்மீது அக்கறை இல்லை?

தமிழ்நாடு ஏறத்தாழ கி.பி. பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கமுதலாக அந்நியக் கலாச்சாரத்தின் ஆட்சிக்குட்பட்டு அதன் ஆற்றல்கள் மங்கிவிட்டன. தெலுங்கும் மராட்டியும் கன்னடமும் சமஸ்கிருதமும் தமிழ்நாட்டின் ஆட்சிமொழிகளாகி அதை மயக்கி விட்டன. இனவுணர்வின்மையின் அடிப்படைக் காரணம் இதுதான்.

ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளாக அடிமையாக இருக்கும் ஓரினம் எப்படி ஐயா இனவுணர்வோடு இருக்க முடியும்? முதலில் துருக்கர் ஆட்சி, பிறகு விஜயநகர ஆட்சி, பிறகு தெலுங்கு, கன்னட நாயக்கர் ஆட்சி, ஒரு சில பகுதிகளில் மராட்டியர் ஆட்சி, பிறகு டச்சுக்கார, போர்ச்சுகீசிய, பிரெஞ்சுக்கார ஆட்சி, பிறகு ஆங்கிலேயர் ஆட்சி என எழுநூறு ஆண்டுகளாக அடிமையாக இருந்தவன் தமிழன்.

அண்டையிலுள்ள கன்னடநாடோ ஆந்திரமோ கேரளமோ இவ்வளவுநாள் அடிமைப்பட்டிருந்ததில்லை. அவை தமிழகத்தை ஆதிக்கம் செலுத்தும் நாடுகளாகவே பலகாலம் இருந்துள்ளன. 1947இல் விடுதலை பெற்ற பிறகாவது தமிழ் இன அக்கறை ஏற்பட்டிருக்கவேண்டும். அது ஏற்படாதவாறு ‘தேசிய’ நலனில் அக்கறை காட்டிய காங்கிரஸ் பார்த்துக்கொண்டது. அதற்குப்பிறகு வந்த திராவிடக் கட்சிகள் சொந்த நலத்தையும் சொத்தையும் பெருக்குவதற்குக் காட்டிய அக்கறையில் நூற்றில் ஒருபங்கு கூடத் தமிழரைப் பற்றியோ தமிழைப் பற்றியோ காட்டியதில்லை. இப்போது சொல்லவே தேவையில்லை, சொந்தநலத்தைப் பெருக்கிக் கொள்வதற்குத்தான் பன்னாட்டுக் குழுமங்களுக்குப் பாவாடை விரிக்கிறார்கள். அதுகூடப் பரவாயில்லை, அவர்களுக்காகத் தமிழகத்தின் விலைமதிப்பற்ற இயற்கையைச் சுரண்டி (கிரானைட் முதல் தண்ணீர் வரை) விற்றுவிடுகிறார்கள்.

இந்தநிலையில் இன்று இருக்கும் தமிழுணர்வு என்பதே எனக்கு ஆச்சரியமாகத் தான் இருக்கிறது. இதைப் பற்றிக் கவலைப்படுவது மிகை என்றும் தோன்றுகிறது.

வரலாறு என்பது ஆதிக்கத்திலுள்ளவர்கள் புனையும் கட்டுக்கதை என்பார்கள். விடுதலை பெற்ற பிறகு இன்றுவரை பள்ளிகளில் நடத்தப்படும் வரலாறு என்பது உலக நாகரிகத்திற்கோ இந்தியப்

பண்பாட்டிற்கோ தமிழனின் கலாச்சாரப் பங்களிப்பை உணர்த்துவதாக அமையவில்லை. வெறும் கேலிக்கூத்தாக இருக்கிறது அது.

இருந்தாலும் தமிழுக்கும் ஒரு தனிக்குணம் இருக்கிறது. எவ்வளவு மோதல்கள், அழிவுக்காரணிகள் வந்தாலும் அவற்றையெல்லாம் தாண்டி தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் தன்மை. இந்தத் தன்மையால்தான் தமிழ் இன்னும் பிழைத்திருக்கிறது. தமிழ்ச் சமுதாயத்தின் முயற்சியால் அல்ல. தமிழனுக்குப் பொது நலனில் என்றுமே அக்கறை கிடையாது. பல நூற்றாண்டு அடிமைத்தனத்தின் காரணமாக அவனுக்கு எப்போதும் மாற்று நாகரிகம், மாற்று மொழி, மாற்றார் மேல் ஒரு வாய்பிளந்த தாழ்வுணர்ச்சி. அந்தத் தாழ்வுணர்ச்சியின் காரணமாக அன்றுமுதல் இன்றுவரை பிறருக்கு வாழ வழியமைத்துக் கொடுத்தும், தன்னையும் தன் இனத்தையும் தாழ்த்திக் கொண்டும் இருக்கிறான். ஆகவே ஒரு கன்னடனின், அல்லது இந்திக்காரனின் இனவுணர்வு அவனுக்கு எங்கே வரப்போகிறது? ஆனால் இதனால் தமிழ் அழிந்துவிடப் போவதில்லை. அதன் ‘தக்க வைத்துக்கொள்ளும் சக்தி’ அதைக் காப்பாற்றும்.

அல்லது இப்படிப்பட்ட இனவுணர்வற்ற மக்களின் மொழி அவர்களுடைய சிந்தனையின்மையால், உணர்வின்மையால்

அழிந்துபோகுமானால் அதை எப்படித் தான் காப்பாற்றுவது? ஒரு மொழியைக் காப்பாற்றுவது தனிமனித வேலையல்ல. போகட்டுமே! உலகில் எத்தனையோ நாகரிகங்கள் இருந்து காலப்போக்கில் அழிந்து போயிருக்கின்றன. ஓர் இனத்தைச் சேர்ந்த மக்களிடையே வெற்று உலகாயதப்போக்கு சார்ந்த கேளிக்கை மனப்பான்மையும் வெற்றுப் பிழைப்புவாதமும் தோன்றிவிடும் போது அந்த நாகரிகம் அழிந்துதான் தீரும் என்பதை வரலாறு பலமுறை காட்டியிருக்கிறது. இன்று தமிழர்களிடையே இத்தகைய மனப்பான்மைதான் காணப்படுகிறது.

தமிழர்களின் இனவுணர்வின்மைக்குக் காரணமாக நாம் அடுத்த பிரச்சினையாகிய தமிழ் இலக்கிய உலகு, கல்வித்துறை இரண்டிலும் காணப்படும் நடுத்தரத் தன்மையைப் பற்றி விவாதிக்கலாம். இந்த நடுத்தரத்தன்மை நம்மை மிகவும் அச்சுறுத்துகின்ற ஒன்று. எல்லாநிலைகளிலும் ஆழமான அறிவற்றவர்களும், பிழைப்புவாதிகளுமே புகுந்து உயர்தரத்தினை எதிர்க்கவும், மோசமான தரத்திலுள்ள (சிறந்தவை என்ற மகுடம் சூட்டி அவர்களால் பாராட்டப்படுகின்ற) விஷயங்களைப் புகுத்தவும் செய்கிறார்கள். அவர்களுடைய பாசிசம் நம்மைப் பேசவிடாமல் ஆக்கிவிடுகின்றது. இன்றைய கல்வி தனியார் மயமாகி, கண்டவரெல்லாம் பல கல்வி நிறுவனங்களை நடத்தத் தொடங்கிய நிலை, கல்வியின் தரத்தை மிகவும் மோசமாக்கிவிட்டது.

உதாரணமாக நான் ஆராய்ச்சித் துறையின் மோசமான நிலை பற்றிச் சில ஆண்டுகளுக்கு முன்னர் கட்டுரை படித்தபோது (அது தமிழ் நேயத்தில் வெளிவந்தது) அதற்குக் கிடைத்த எதிர்வினைகள் அச்சமூட்டுவனவாக இருந்தன.

பிறமொழிகளில் தரப்படுத்தும் நிறுவனங்கள் நன்கு செயல்படுகின்றன. சான்றாக அலியாஸ் ஃப்ராங்காய் நிறுவனம் வகுத்துள்ள ஃபிரெஞ்சினைத்தான் கற்பிக்க, பேசமுடியும். அதன் தரத்தினை நிர்ணயப்படுத்தி இருக்கிறார்கள் அவர்கள். ஆனால் தமிழைத் தரப்படுத்த எந்த நிறுவனம் இருக்கிறது? என்னவிதமான தமிழ் தொலைக்காட்சிகளில் ('கேள்' களின் தொலைக்காட்சிகள் உட்பட) பயன்படுத்தப்படுகிறது? ஏன் இப்படித் தமிழைக் கடித்துத்துப்புகிறார்கள்? (இந்திமொழியையோ உருதுவையோ பயன்படுத்தும் தொலைக்காட்சிகளில் இப்படியில்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும். இந்தி நான் அறிந்த மொழி என்பதால் இதனை அனுபவபூர்வமாகச் சொல்லமுடியும்). தமிழைத் தரப்படுத்துவதற்காக ஏற்பட்ட தமிழ்ப்பல்கலைக்கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் போன்றவை வெறும் கற்பிக்கும் நிறுவனங்கள் ஆகிவிட்டன.

தூய தமிழ்வாதிகளும் அவர்களால் இயன்ற அளவு தமிழைத் தொலைத்துக் கொண்டிருக்கிறார்கள். தொலை நோக்கற்று

வெறும்வார்த்தை அளவிலேயே நின்று சொல்லாடிக் கொண்டிருக்கிறார்கள். சொற்களைவிடக் கருத்து முக்கியம் என்பதையும், மொழியின் அமைப்பு முக்கியம் என்பதையும் அவர்களுக்கு யார் உணர்த்துவது?

கல்விநிறுவனங்கள் மோசமான வியாபார நிறுவனங்கள் ஆகிவிட்டன. சான்றாகத் தமிழை ஒழுங்காகக் கற்பிக்கும் ஆசிரியர்களும் ஆர்வத்துடன் கற்கும் மாணவர்களும் பெரும்பாலும் இன்று இல்லை. முன்பெல்லாம் இருந்ததைவிட இன்று பி.லிட், எம்.ஏ(தமிழ்) படிக்கும் மாணவர்கள் (தொலைக்கல்வி, அஞ்சல்வழிக்கல்வி உட்பட) மிக அதிகம். ஆனால் எல்லாரும் எப்படியாவது ஒரு ‘ஓலை’ வாங்கிவிட்டால் ‘வேலை’ கிடைத்துவிடும் என்ற நோக்கில் வருகிறார்களே அன்றி ஆர்வத்தோடும் பற்றோடும் தமிழ் கற்பதற்கு அல்ல. அதனால் பிஎச்.டி படித்தவனுக்குக்கூட பிழையின்றித் தமிழ் எழுதத் தெரியாது என்று சொல்லும் நிலை இன்றைக்கு.

அடுத்தபடியாக, இன்னொரு பிரச்சினையையும் இங்கு ஆராயலாம். கடந்த ஐம்பதாண்டுகளாக-இன்றுவரை தமிழ் ஆசிரியர்களாக இருப்பவர்கள் கண்டிப்பாக ஏதேனும் ஒருநிலையில் பார்ப்பனர்களை எதிர்கொள்ளவேண்டி வந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

நான் யோசித்துப்பார்ப்பதுண்டு: பார்ப்பனர்களுக்கு (பார்ப்பன மனப்பான்மை கொண்ட பிற சாதியினருக்கும்தான்) ஏன் தமிழின்பேரில் இவ்வளவு பகைமையுணர்ச்சி? வேறு பல காரணங்கள் இருந்தாலும், ஒரு முக்கியக் காரணம் அவர்களுடைய பிழைப்புவாதம் என்று தோன்றுகிறது. "பிழைப்புக்காக நான் எல்.கே.ஜி. முதலாகவே ஆங்கிலமோ, பிரெஞ்சோ, என்ன மொழியாவது படித்து அமெரிக்காவுக்குப் போவேன், நீ ஏன் அதை எதிர்க்கிறாய்" என்று கேட்கிறது பிழைப்புவாதம். முன்பு சமஸ்கிருதம் படித்தால் பிழைப்பு, அப்போது சமஸ்கிருதம் தேவபாஷை. இப்போது ஆங்கிலம் படித்தால் பிழைப்பு. ஏனென்றால் அது ‘எம்என்சி’க்களுடைய (பன்னாட்டு நிறுவனங்களுடைய) ‘உலக’ பாஷை. "அதைப் படிப்பதை விட்டுத் தமிழ் தமிழ் என்று பேசி என்ன லாபம்? முதலில் வயிற்றுப் பிழைப்பைப் பார். பிறகுதான் கலாச்சாரம், மண்ணாங்கட்டி எல்லாம்."

இன்னொரு காரணம் ஆதிக்கம். முன்பு சமஸ்கிருதம் என்ற பேரைச்சொல்லி, கடவுளின் பேரைச் சொல்லி ஆதிக்கம் செய்ய முடிந்தது. இப்போது அது முடியவில்லை. ஆகவே ஆதிக்கத்திற்கு உகந்த ஆங்கிலத்தைக் கையிலெடுத்துக்கொண்டார்கள். மேலும் முட்டாள்கள் இருக்கும் வரைதானே ஆதிக்கம் செய்யமுடியும்? இவ்வளவு நூற்றாண்டுகளாகத் தமிழர் அடிமைப்பட்டுக் கிடந்தபோது பார்ப்பனர்களின் நிலை என்ன? யார் ஆட்சிக்கு வந்தாலும்

அவர்களுக்குக் குடைபிடித்து வாழ்த்துப்பாடித் தங்களை உயர்த்திக் கொண்டது ஒன்றுதான். இப்படித் துதிபாடியே பிழைப்புநடத்திப் பிறர்மீது ஆதிக்கம் செலுத்திவந்த கூட்டத்தை ‘இப்போது உன் ஆதிக்கத்தை விட்டுவிடு’ என்று சொன்னால் ஏற்றுக்கொள்ளுமா? இன்றைக்கு அதன் பிழைப்புக்கு ஏற்றமாதிரியாகப் பன்னாட்டுக் குழுமங்கள் இருக்கின்றன. "இங்கே இடஒதுக்கீட்டை நீ அமுல்படுத்தினால் என்ன? நாங்கள் அமெரிக்கா போவோம், ஜெர்மனிக்குப் போவோம், ஜப்பானுக்குப் போவோம். அப்படிப் போவதற்கு வாய்ப்பாக உதவுகின்ற அகில இந்திய மேலாண்மைநிறுவனங்கள் (ஐஐஎம்கள்), இந்தியத் தொழில்நுட்ப நிறுவனங்கள்(ஐஐடிகள்) போன்றவற்றில் நீ இட ஒதுக்கீடு கொண்டுவந்தால் எதிர்ப்போம். சாதாரண பஞ்சாயத்துப் பள்ளியில் படிப்பவனுக்கு நீ இட ஒதுக்கீடு தந்தால் எங்களுக்குக் கவலையில்லை. அதில் படிப்பவன் எவனும் எங்களுக்குப் போட்டியாக வரப்போவதில்லை. ஆனால் உயர்நிறுவனங்களுக்கு வராதே."

முட்டாள்களாக மக்களை வைத்திருப்பதற்கு என்ன என்ன வழிமுறைகள் உண்டோ அத்தனையையும் கையாளத் தயாராக இருக்கிறார்கள் இன்றைய பார்ப்பன அறிவுஜீவிகள். உதாரணமாக தலித்துகளோடு சேர்ந்துகொண்டு "நாங்கள் ஒன்றும் தப்பு செய்யவில்லை, எல்லாம் பார்ப்பனர்அல்லாத

மேல்சாதிக்காரர்கள்தான் உங்களை ஒடுக்குகிறார்கள்" என்பது போன்ற வாதங்களைச்சொல்லித் தங்கள் நிலையைத் தக்க வைத்துக்கொள்ளப் பார்க்கிறார்கள்.

தமிழ் நாகரிகம் இருக்கட்டும். கொஞ்சம் உலகத்தைப் பற்றியும் கவலைப்பட்டாக வேண்டும். உலகத்தில்தானே தமிழ்நாடு இருக்கிறது? உலகத்தை இன்று மிகவும் அச்சுறுத்துகின்ற விஷயங்கள் இரண்டு. ஒன்று சுற்றுச்சூழல் மாசுபாடு. இன்னொன்று மாற்று ஆற்றலுக்கு வழிவகுக்காமல்/ வழியற்ற நிலையில் அணுக்கூடங்களைப் பெருக்கிச்செல்வது. அறிவுஜீவிகள் உட்பட எவரும் இவையிரண்டையும் தீவிரமான பிரச்சினைகளாகவே எடுத்துக்கொள்ளவில்லை. ஒரு தனிப்போராட்டம் கூடங்குளத்தில் தொடர்ந்து ஓராண்டுக்குமேல் நிகழ்ந்துவந்தபோதும் தமிழக அறிவுஜீவிகள் அதைக் கண்டுகொள்ளவில்லை. இந்திய அளவில் அதன் செல்வாக்கு பரவவில்லை. கட்சிகளோ அவதூறு செய்தன. இம்மாதிரிச் சுற்றுச்சூழல் மாசுபாடுகளால் இன்னும் ஐம்பது வருடங்களேனும் உலகமே பிழைத்திருக்குமா, அல்லது அழிந்துவிடுமா என்னும் கேள்விகள் எழுந்துள்ளன. முதலில் உலகத்தைக் காப்பாற்றுங்கள், பிறகு தமிழ் நாகரிகத்தைப் பிறர் ஏற்றுக்கொள்வதைப் பற்றிக் கவலைப்படலாம்.

**அமெரிக்காவின் ஆதிக்கத்தை,**

**அதற்குச் சார்பான பன்னாட்டுக்குழுமங்களின் ஆதிக்கத்தை,**

**அதற்குச் சார்பான உலகமயமாக்கல் கொள்கையை,**

**அதற்குச் சார்பான பார்ப்பனியத்தை,**

**அதற்குச் சார்பான இன்றைய இந்திய-தமிழக அரசியல்வாதிகளை,**

**அவர்களது சாதி, பண அடிப்படையிலான அரசியலை,**

எதைவேண்டுமானாலும் ‘இனாமாக’ அல்லது "மலிவுவிலையில்" வழங்கி ஆட்சியைப் பிடிக்கும் அவர்களது பேர அரசியலை-

இவற்றையெல்லாம் முதலில் எப்படி எதிர்த்து வீழ்த்துவது என்று யோசியுங்கள். பின்னால் தன்னால் நல்லது நடக்கும்.

# 3. சுற்றுச்சூழலும் வளர்ச்சியும்

## சுற்றுச்சூழலின் அடிப்படை

நம்மைச்சுற்றியுள்ள நிலம், நீர், காற்று, வானம், காடுகள், விலங்கினங்கள், செடிகொடிகள், மரங்கள், மக்கள்கூட்டம் எல்லாம் இடையறாத தொடர்பு கொண்டவை. அமீபா முதலான மிகச்சிறிய உயிரிகளிலிருந்து யானை திமிங்கிலம் ஆகிய பேருயிர்கள்வரை, மிகச் சிறிய தாவரங்களிலிருந்து பல்லாண்டுகள் வாழக் கூடிய மிகப்பெரிய தாவரங்கள் வரை இன்றியமையாத தொடர்புச் சங்கிலியால் பிணைக்கப்பட்டுள்ளன.

இவை அனைத்தும் தமக்குள் ஒன்றுக்கொன்று அனுசரணையாக வாழும் நிலையை, மனிதர்கள் உள்ளிட்ட எல்லாப் பிராணிகள், விலங்குகள், தாவரங்கள் அனைத்தின் நல வாழ்வைக்கொண்ட மாசுபடாத இயற்கை நிலையை, ஒரு நல்ல சுற்றுச்சூழல் என்கிறோம்.

அனைத்து இயற்கைக்கூறுகளும்-அவை அஃறிணை ஆனாலும், உயர்திணை ஆனாலும்-ஒன்றை ஒன்று சார்ந்திருக்கும் தன்மைதான் சுற்றுச்சூழலின் அடிப்படைத் தன்மையாகும்.

சான்றாக, நிலத்தின் வளத்தைக் காத்து, செடிகொடி மரங்களுக்கு உணவு தயாரித்தல், ஒளிச்சேர்க்கை போன்ற பலசெயல்களுக்கு நீர்

உதவுகிறது.

செடிகொடி தாவரங்கள் காற்றைத் தூய்மையாக்குகின்றன. பிற தாவரங்களுக்கும் விலங்கினங்களுக்கும் மனிதனுக்குமான உணவைத் தயாரிக்கின்றன.

நிலம் மக்களுக்கும் விலங்குகளுக்கும் காடுகளுக்கும் தாவரங்களுக்கும் பிற எல்லா உயிரினங்களுக்கும் உணவளிக்கிறது. அதற்கு ஈடாக நிலம் தனது தேவைகளை அவற்றிடமிருந்து பெற்றுக்கொள்கிறது.

இது ஒரு சுழற்சிச்செயல். இதில் ஏதேனும் ஒரு சுழற்சிக் கண்ணியில் மாறுபாடு ஏற்படுமானால் அது இயற்கையைக் கேடுறச் செய்வதுடன் இயற்கையின் ஒரு பகுதியான (ஆனால் தாங்கள் இயற்கையின் ஒருபகுதி என்பதை மறந்து விட்ட) மக்களையும் பெரும் பாதிப்புக்கு உள்ளாக்குகிறது.

## இயற்கையை வெல்ல இயலுமா?

நமது வளங்கள், செல்வங்கள் யாவுமே இயற்கையிலிருந்துதான் வருகின்றன. இயற்கையிலிருந்து பல்வேறு வகைகளில் பயன்பெற்று வருகிறோம் நாம், ஆனால், மனிதர்களின் பேராசைக்கு எல்லையே இல்லை. தானாக இயற்கையிலிருந்து கிடைக்கும் நன்மைகளால் திருப்தி அடையாமல், அல்லது தமது சிறிய முயற்சிகளால்

கிடைக்கும் பயன்களினால் திருப்தி அடையாமல், இயற்கையைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்து, அதைச் சுரண்டி, பாழாக்கி, அதனால் மகிழ்கிறார்கள் மனிதர்கள்.

இயற்கையோடு ஒத்துவாழவேண்டும் என்ற எண்ணமும் இல்லாமல், இயற்கை தங்களைப் பாதுகாக்கும் பெரும் சாதனம் என்ற எண்ணமும் இல்லாமல். **‘ இயற்கையோடு போராடுவது’ ‘இயற்கையை வெல்லுவது’தான் வாழ்க்கை என்று அலைகிறார்கள். இதனால் அறிவியல் வளர்ச்சி** என்ற பெயரில் பெரும் சீர்கேடுகள் பல ஏற்படுத்தக்கூடிய பொருட்களை உருவாக்குகிறார்கள்.

**புதிய வளர்ச்சிக் கொள்கை!**

‘புதிய வளர்ச்சிக் கொள்கை’யை இன்று உலகநாடுகள் யாவும் பின்பற்றுகின்றன. இதன் அடித்தளம் நவீன அறிவியல் அறிவும், பொருளாதார வளர்ச்சியும், வணிகரீதியாகப் பொருள்குவித்தலும் ஆகும்.

ஆனால் இவற்றிற்காக எவ்வளவு வேகமாகவும் பரந்த அளவிலும் இப் பூவுலகின் பல்வேறுபட்ட வாழ்க்கைத்தன்மையை (பயோடைவரிசிட்டி), உயிரினங்களை அழித்துக் கொண்டிருக்கிறோம்? பொருளாதார வளர்ச்சி என்பதன் பெயரால் இயற்கையின் பல்வேறுபட்ட தன்மை பலியிடப்பட்டு விட்டது.

பெரும்பாலான நகர்ப்புற மனிதர்கள் இயற்கையிலிருந்தும் சக மனிதர்களிடமிருந்தும் முற்றிலும் அந்நியப்பட்டுப் போய்விட்டார்கள். அடித்தள மனிதர்களோ வாழ்க்கைக்கான மூல வளங்களை இழந்து நகர்ப்புறங்களுக்கு அடிமைகளாகக் குடிபெயர்ந்து தங்களை அன்றாடக்கூலிக்கு விற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

இதன்விளைவாக ஏற்பட்டதே சுற்றுச்சூழல் அபாயம், மனிதனின் பேராசை இயற்கைக்குச் சாவுமணி அடிக்கிறது. பூமித்தாய் வேகமாகச் சுடுகாடுநோக்கிப் பயணம் செய்கிறாள். அவளது காடுகள் செத்துக் கொண்டிருக்கின்றன. அவளது மண் அரிக்கப்பட்டுக்கொண்டிருக்கிறது. அவளது நீர் வற்றிக்கொண்டிருக்கிறது.

**முதல் உலகநாடுகளின் வளர்ச்சிமாதிரி (growth model)**

காடு நிலம் நீர் இவற்றை அழிப்பதன்மூலம் நாம் நமது வாழ்வின் ஆதாரங்களை அழித்துக்கொண்டிருக்கிறோம். முன்னேற்றம், வளர்ச்சி என்ற பெயரில் மக்களின் வாழ்க்கையே காணாமற் போய்க்கொண்டிருக்கிறது. இந்த வளர்ச்சி முறையில் (growth model) இயற்கைமீதான வன்முறை பின்னிப்பிணைந்துள்ளது.

ஐரோப்பாவில் உதித்த இந்த அறிவியல் புரட்சி, இயற்கையைச் சுரண்டுவதற்கான ஒரு உபயோகப் பொருளாக மட்டுமே பார்க்கிறது. அதனால் இயற்கையின் சீர்குலைப்புக்கும் சுரண்டுதலுக்கும் எதிரான தார்மீகக் கட்டுப்பாடுகள் உடைத்தெறியப் பட்டுவிட்டன.

பொருளாதாரத்துறை அடிப்படைத் தேவைகளின் பூர்த்தி, வளங்களின் நிர்வாகம் என்ற அடிப்படையில் பழங்காலத்தில் இருந்தது. தொழிற்புரட்சியும் அதற்குப் பின்வந்த வணிகப் பெருக்கமும் இலாபத்தை அதிகரிக்கக்கூடிய பொருள் உற்பத்திக்கான ஒரு துறையாக அதை மாற்றிவிட்டன. தொழில்மயப்படுத்தல் இயற்கை வளங்கள்மீது அளவற்ற தாகத்தை ஏற்படுத்தி விட்டது. நவீன அறிவியல் இத்தகைய சுரண்டலைச் சாத்தியமானதாக, ஏற்புடையதாக, விரும்பத்தக்கதாக ஆக்கிவிட்டது. மேற்கத்தியச்சார்பில் உருவான இத்தகைய அறிவியல்-பொருளாதாரக் கொள்கை மூன்றாம் உலகநாடுகள் போன்ற பிற கலாச்சாரங்கள் மீதும் திணிக்கப்பட்டுவிட்டது. ஐரோப்பிய, அமெரிக்க முன்னேற்றத்தின் (?)வடிவமே அனைவர்க்கும் பொருத்தமானது என்று தீர்மானிக்கப்பட்டு விட்டது.

காலனிய அதிகாரம் உச்சகட்டத்திலிருந்த காலத்தில் அதிகார வளர்ச்சி, தொழில்மயம் ஆகியவை ஏற்பட்டபோது அவற்றை நிறைவுசெய்யும் நாடுகளாகக் காலனியாதிக்கத்துக்கு உட்பட்டிருந்த நாடுகள்

பயன்பட்டன. அறிஞர் ரோசா லக்சம்பர்க் குறிப்பிடுவதுபோல, மேற்கு ஐரோப்பாவில் தோன்றிய தொழில் வளர்ச்சி, அடிமைப்பட்டிருந்த நாடுகளின் நிலையான ஆக்கிரமிப்பையும், இயற்கைப் பொருளாதாரத்தின் அழிவையும் இன்றியமையாதது ஆக்கிவிட்டது.

**மரங்களும் காடுகளும்-பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பு**

இதற்கு ஒரு சான்றாக, இந்தியாவில் பிரிட்டிஷ் காலனி ஆதிக்கம் தொடங்கியபோது எப்படி இயற்கைச் சீர்குலைவு ஏற்பட்டது என்பதை மட்டும் காண்போம்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் முதன்முதலில் ஆக்கிரமித்தது காடுகளைத் தான். காடுகள் இயற்கையில் வகிக்கும் பாத்திரம், நாட்டுநலனில் அது வகிக்கும் பங்கு பற்றி அவர்களுக்குத் துளியும் அக்கறையில்லை. காடுகள் மிகுதியாக இருந்தபோது ஆங்கில ஆதிக்கம் தன் தொழில்மயமாக்கத்திற்கு வேண்டிய தேவையை எளிதில் பெற்றது. அப்படியே எல்லையற்றுத் தொடரும் இந்தச் சுரண்டல் என்று அவர்கள் நம்பியதாகத் தெரிகிறது.

பல இடங்களில் சாலைகள் அமைக்கவும் இரயில்பாதைகள் அமைக்கவும் வேளாண்மைக்கும் காடுகள் இடைஞ்சல் என்று கருதி அழிக்கப்பட்டன. தேக்கு மரங்களுக்கு இராணுவத்தில் பயன்பாடு

மிகுதி என்பதால் கிழக்கிந்தியக் கம்பெனி தேக்குமரங்களை ஒட்டுமொத்தமாக அழித்தது.

1807ஆம் ஆண்டுச் சட்டத்தால் அதிகாரம் அளிக்கப்பட்ட கேப்டன் வாட்சன் என்னும் அதிகாரி தேக்குமரங்களைப் பத்தாயிரக்கணக்கில் கொன்று குவித்தான். ஏறத்தாழ அரைநூற்றாண்டுக்காலம் காடுகள் வீணாக்கப்பட்ட பிறகுதான் 1865இல் இந்தியாவில் முதல் வனச்சட்டம் இயற்றப்பட்டது. இச்சட்டத்தினால் காடுகளின் ‘அறிவியல் பூர்வமான நிர்வாகம்’ தொடங்கியது. அதாவது மக்களின் உரிமை இழப்பும் காடுகளின் வீழ்ச்சியும் சட்டபூர்வமாகத் தொடங்கியது.

பணமதிப்புமிக்க மரங்கள் மட்டுமே அரசின் கவனத்தை ஈர்த்தன. காட்டின் பல்வேறு சமுதாயங்களுக்கும் (மரங்கள், விலங்குகள், பூச்சிகள், நீர்நிலைகள், சுருக்கமாகச் சொன்னால் காட்டின் biodiversity என இன்று வழங்கப்படுகின்ற யாவுக்கும்) உள்ள உறவு, நீர், மண் போன்றவற்றிற்கிடையிலுள்ள சிக்கலான சங்கிலித்தொடர்புகள் போன்ற யாவும் புறக்கணிக்கப்பட்டன. இதனால் இந்திய நாடு சுதந்திரம் அடைவதற்குள் அதன் சுற்றுச்சூழல், காடுகள் அமைப்பு சரிசெய்ய முடியாதவாறு அழிந்தது. பழங்குடி மக்களையும் இது நேரடியாகத் தாக்கியது.

தொழில்துறைக் கண்ணோட்டத்தின்படி, வணிகமதிப்பில்லாத தாவரஇனங்கள் களைகள்தான். ஆனால் உண்மையில் இந்தக் "களைகள்"தான் இயற்கையின் நீர் மற்றும் பிற சத்துச் சட்டகங்களின் ஆதாரங்களாக விளங்குபவை. 1878இலும் 1927 இலும் வனச்சட்டங்கள் புகுத்தப்பட்டதை அடுத்து இந்தியாவெங்கும் அநேக சத்தியாக்கிரகங்கள் நடைபெற்றன.

புதிதாகச் சுதந்திரம் பெற்றநாடுகளில் இந்தவகை வளர்ச்சி புதிய காலனிகளைத் தோற்றுவித்தது. வளர்ச்சி என்பது காலனியச் செயல்பாட்டின் தொடர்ச்சி ஆயிற்று. சுதந்திரம் பெற்ற தொடக்கத்தில், வளர்ச்சிச் செயல் முறைகளை நீடிப்பதன் மூலமும் அவற்றைப் பரவலாக்குவதன் மூலமும் நாடுகளின் பொருளாதாரநிலை உயரும் என்ற எண்ணம் நேரு போன்ற தலைவர்களுக்கு மேலோங்கியிருந்தது.

ஆனால் ஒருசில பத்தாண்டுகளிலேயே உண்மையான பிரச்சினையே "வளர்ச்சி"தான் என்பது புரியத்தொடங்கியது. பொருளாதார வளர்ச்சி என்பது, எந்த ஏழைமக்களுக்கு வளர்ச்சி மிகத்தேவையோ அவர்களிடமிருந்தே வளங்களை அபகரிக்கும் புதியகாலனிய முறை ஆயிற்று. அதனால் உள்நாட்டு மேட்டுக்குடியினர் நலன், தேசிய நலன், தேசிய மொத்த உற்பத்தி(Gross National Product) போன்றவற்றின் பெயரால் நாட்டின் சுரண்டல் செய்யப்படலாயிற்று.

இதனைச் சிறப்பாகச் செய்துமுடிக்க அதிகாரத்தில் உள்ளோர்க்கு மிகவலுவான, தொழில்நுட்பங்கள் கைகொடுத்தன. இதனால் ஏழைகள் இன்னும் ஏழைகளாயினர். பணக்காரர்கள் இன்னும் பணக்காரர்கள் ஆயினர். தொழிலற்ற விவசாயிகள் நகர்ப்புறங்களுக்கு இடம் பெயர்ந்தனர். அல்லது கொத்தடிமைகளாக மாறி அவதிக்குள்ளாயினர்.

## புதிய வளர்ச்சிமாதிரி என்பது என்ன?

நவீன அறிவியலின், தொழில் வளர்ச்சியின், வணிக வளர்ச்சியின் கண்ணோட்டப்படி, சுத்தமாக ஓடிக்கொண்டிருக்கும் ஓர் ஆறு பயனற்றது. அதை "வளர்ச்சி" யடையச் செய்யவேண்டும்.

வளர்ச்சியடையச் செய்வது என்பதற்கு ஓர் உதாரணம், அணைகட்டி அதன் நீர்வளத்தைப் பயன்படுத்துவது. அணைகட்டி, மின்சாரம் எடுக்கலாம். அது முன்னேற்றம். ஆனால் அங்கு வாழும் மக்கள் இடம்பெயர்ந்து செத்தால் பரவாயில்லை. அதன் அருகிலுள்ள தொழிற்சாலையின் கழிவுப் பொருட்கள் அதில் கலந்து, அதை "முன்னேற்றினால்" தான் ஆறு பயனுள்ளதாக மாறும்.

இவ்வாறே, இயற்கையான காடுகளும் வியாபாரநோக்கில் ஓரினப்பயிர்களாக மாற்றப்படும்வரை பயனற்றவை.

இப்படி ஆதிக்கத்தின் புதியவடிவங்களோடு நவீனமயமாக்கல் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டது. நீர் உணவு தீவனம் எரிபொருள் இவற்றின் பற்றாக்குறையோடு அதிகரிக்கிறது. சூழலியல் பேரழிவு அதனுடன் சேர்ந்து உலகத்தின் தெற்குநாடுகளில் பெரும் வறுமையை உருவாக்கியுள்ளது.

### தேசியப் பொருளாதாரம்

தேசிய மொத்த உற்பத்தி (GNP -ஜிஎன்பி) உயர்ந்தால் நாட்டின் செல்வச் செழிப்பு அதற்கேற்றாற்போல் உயர்கிறது என்று பழைய பொருளாதார வல்லுநர்கள் கருதினார்கள். இன்று மரபான பொருளாதார வல்லுநர்களுக்குக்கூட அந்தக் கோட்பாடு பயனற்றுவிட்டது என்பது தெரியும். முன்னேற்றத்தின் அளவுகோல் என்ற முறையில் நாணயப் பொருளாதார உற்பத்திப் பொருட்கள், சேவை ஆகியவற்றை மட்டுமே அது கணக்கில் கொள்கிறது. இவை பெரும்பாலான மக்களுக்குப் பயன்படுவதில்லை. பணமும் அதிகாரமும் எங்கு குவிந்துள்ளதோ அங்கேயே இவை போய்ச்சேர்கின்றன.

தேசிய மொத்த உற்பத்தி, சூழலின் பேரழிவால் ஏற்படும் புதிய சுமைகள், அதனால் ஏற்படும் செலவுகள், மக்களின் வாழ்க்கை நிலை வீழ்ச்சி போன்ற வற்றைக் கணக்கில் கொள்வதே இல்லை.

"கண்ணை விற்றுச் சித்திரம் வாங்கிடில் கைகொட்டிச் சிரியாரோ?" என்று பாரதியார் பாடினார். அறிவியல் வணிக தொழில் முன்னேற்றங்கள் அதைத்தான் செய்கின்றன. அதிக வளங்களையும் சக்திகளையும் பயன்படுத்தும் தீவிர உற்பத்திச் செயல்முறைகள், தொடர்ந்து அதிக வளங்களைச் சுரண்டு வதை உறுதிசெய்கின்றன. இத்தகைய வள அழிப்புகள் அடிப்படையான சூழல் செயல்முறைகளைப் பாதித்து, சக்திகளை மீண்டும் புதுப்பிக்க இயலாதவாறு ஆக்கிவிடுகின்றன.

**புதுப்பிக்க இயலாமை (entropy)**

உதாரணமாக, ஒரு காடு, தன் நிலை சீராக இருக்கும்வரை பல்வேறு வளங்களைக் குறைவில்லாமல் அளித்துவரும் தன்மையுடையது. ஆனால் தொழில் ரீதியாகவும் வர்த்தகரீதியாகவும் காடுகள் மீண்டும் புத்துயிர்ப்பு பெறக்கூடிய சக்தியையும் மீறி, மரங்கள் கட்டுப்பாடின்றி வெட்டிவீழ்த்தப்படுகின்றன. காடுகள் மீண்டும் புதுப்பிக்க இயலாதவாறு மாறிவிடுகின்றன.

சிலசமயங்களில் ஒரு குறிப்பிட்ட வளத்தின் சுரண்டல், அதனோடு தொடர்புடைய வேறு இயற்கைவளங்களுக்கு அபாயத்தை ஏற்படுத்துகிறது. இதனாலும் இயற்கையின் புத்துயிர்ப்புத் தன்மைக்கு அபாயம் ஏற்படுகிறது. உதாரணமாக நீர்ப்பிடிப்புப் பகுதிகளில் மரங்கள் ஏராளமாக வெட்டப்படுதல், காட்டின் சுற்றுச்சூழலைப்

பாதிப்பதோடு, ஆற்றுநீரின் வளத்தையும் பாதிக்கும். அதிக வளங்களை-அதிக மூலப்பொருட்களைப் பயன்படுத்தக்கூடிய தொழிற் சாலைகள், சுற்றுச்சூழலைப் பாதிப்பதோடு, நீர், நிலம், காற்று ஆகியவற்றையும் மாசுபடுத்துகின்றன.

**ஒரு சிறிய கணக்கு**

உணவு வேளாண்மைக் கழகம் 'நாளன்றிற்கு ஒருவருக்கு 3600 கலோரி உணவு தேவை' என்று சொல்லுகிறது. உலகிலுள்ள ஒவ்வொருவரும் ஒரு வாரத்திற்கு 40 மணிநேரம் (5x8=40) உழைப்புச்சக்தியை அளிக்கின்றனர் என்று வைத்துக் கொள்வோம். மரம், புதைபடிவ எரிபொருள், நீர் மின்சக்தி, பிற எரிபொருள்சக்தி, அணுசக்தி ஆகியவற்றிலிருந்து மனிதனின் உழைப்பால் விடுவிக்கப்படும் உலகளாவிய சக்தி ஒரு நாளுக்கு தற்போது **எட்டுலட்சம் கோடி வாட்** ஆகும். இது உலகத்தின் உணவுத் தேவையைப்போல் இருபது மடங்கு ஆகும். ஆக இருபது மடங்கு மூலவளம் இன்று வீணாக்கப்படுகிறது.

உணவுத்தேவையேயன்றிப் பிற எரிபொருள்களும் தேவைகளும் இதே 3600 கலோரி அளவுக்கு ஒருமனிதனுக்கு தேவைப்படுகிறது என்று வைத்துக் கொண்டாலும், பத்துமடங்கு மூலவளம் வீணாக்கப்படுகிறது என்றுதான் பொருள்.

ஆனால் இங்குப் போட்ட கணக்கின்படி எல்லா மக்களுக்கும் கலோரி அளவு சராசரியாகக் கிடைப்பதில்லை. அமெரிக்கா ஐரோப்பா போன்ற ஆதிக்க நாடுகளிலுள்ளவர்கள் ஒருநாளுக்கு ஒருலட்சம் கலோரிக்கு மேலும் வீணாக்கு கிறார்கள். மூன்றாம் உலக நாடுகளிலுள்ள எத்தனையோ ஏழைபாழைகள் 300 கலோரிக்கும் வழியின்றி எலும்புக்கூடுகளாக வாழ்கிறார்கள்.

இப்படிச் சக்தியை வீணாக்குவதற்காகத்தான் நாம் இயற்கையைத் தேவையின்றி அழித்துக்கொண்டிருக்கிறோம். இதைத்தான் வளர்ச்சி என்கிறோம். **வளர்ச்சி நோக்கும் வறுமை நோக்கும்**

இன்றைய நவீன பொருளாதாரம் இன்னொரு விதத்திலும் தவறானது. இக்கோட்பாட்டின்படி, வறுமை இருவகைப்படுகிறது.

1. இருக்கும் ஆற்றல் போதாது - ஆற்றல் கிடைக்கவில்லை என்பவர் வறுமையில் வாடுபவர்கள்.

2. இருப்பதைப் பயன்படுத்தாமல் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டு கலாச்சார ரீதியாகப் "போதுமென்ற மனமே பொன்செய்வது" என்றிருப்போரும் வறுமையில் வாடுபவர்கள் தான்.

இரண்டாவது வகை மனிதர்கள் வறியவர்கள் அல்ல. ஆனால் வளர்ச்சிக் கொள்கையாளர்கள் இவர்களையும் வறியவர்கள் என்கிறார்கள். காரணம், இவர்கள் சுயகட்டுப்பாட்டுடன் தங்கள்

தேவைகளைப் பூர்த்திசெய்துகொண்ட போதிலும் சந்தைமூலம் விநியோகிக்கப்படும் வணிகப்பொருட்களை நுகராமல், சந்தைப் பொருளாதாரத்தில் பங்கெடுத்துக் கொள்ளாமல் இருப்பதுதான்.

உதாரணமாக கொக்கோகோலா குடிக்காமல் தங்கள் தோட்டத்தின் இளநீர் அல்லது பதநீரைக் குடிப்பவர்கள் வறியவர்கள். சிமெண்ட் கட்டடங்களில் வசிக்காமல் மண், மூங்கில் கட்டடங்களில் வசிப்பவர்கள் வறியவர்கள். செயற்கை இழைத்துணி அணியாமல் பருத்தியாடை அணிபவர்கள் வறியவர்கள்.

உண்மையான பொருளாதாரரீதியில் சரியான வாழ்க்கை வாழ்பவர்கள் இவர்கள்தான். ஆனால் போதுமென்று கருதுகின்ற இந்த நல்வாழ்க்கையை வறுமையென்று கருதுகின்ற இன்றைய "வளர்ச்சிப் போக்கு" இவர்களையெல்லாம் வறியவர்கள் பட்டியலில் சேர்த்து வேறுவகையான "வளர்ச்சியை" அடைந்தாக வேண்டுமென நிர்ப்பந்தப்படுத்துகிறது. இந்த நிர்ப்பந்தம்தான் வறுமையை உண்மையில் உருவாக்குகிறது.

## வளர்ச்சிநோக்கு உருவாக்கும் வறுமை

அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக்கொண்டு, திருப்தியுடன் வாழ்ந்து வந்த மக்களிடமிருந்து நில-நீர் வளங்களைப் பணப்பயிரின்

அதிகரிப்பும், பதப்படுத்தப்பட்ட உணவின் பெருக்கமும் கைப்பற்றின.

இயற்கையின் சீற்றங்களைவிட, தொழில்மயமாக்கம், உலகமயமாக்கம், தனியார் மயமாக்கம் போன்றவைதான் அதிகமான மக்களின் பட்டினிக்கும் பசிக்கும் காரணமாகியுள்ளன. ஏற்றுமதிரீதியான உயர் தொழில்நுட்பப் பயிர்கள் ஏன் பட்டினியை விளைவிக்கின்றன என்பதற்குப் பல காரணங்கள் உண்டு. கடன், அருகிவரும் நிலம், நீர், தொழில் நுட்பம், ஆகியவை ஏற்றுமதிக்காக ஒதுக்கப்படுகின்றன. பட்டினியால் வாடும் மக்களுக்கு உணவளிக்கமறுத்து ஏழைகளைச் சுரண்டும் நிறுவனங்களின் கையில் இலாபம் குவிகிறது. இதற்கு நல்ல தோர் உதாரணம் எதியோப்பியா.

எதியோப்பியாவில் வறுமையை (கலாச்சார நோக்கில், அங்கிருந்த "திருப்தியான எளிய வாழ்க்கையை") ஒழிக்கத் தோன்றிய "வளர்ச்சி" தான் அங்கு உண்மையான வறுமையை உருவாக்கியது.

எதியோப்பியாவிலுள்ள ஆவாஷ் பள்ளத்தாக்கின் வளமான பாரம்பரியப் புல்வெளிகளை வர்த்தக வேளாண்மைக்கென அந்நிய நிறுவனங்களின் உதவியுடன் மாற்றியமைத்தபோது அங்கு வசித்த ஆப்பிரிக்கப் பழங்குடியினர் கட்டாய இடப்பெயர்ச்சிக்கு உள்ளாயினர். அதனால் அப்பகுதியின் சுற்றுச்சூழல் பாதிக்கப்பட்டு அவர்களது கால்நடைகளும் பட்டினிகிடக்க நேர்ந்தது.

முதலில், காலனியாதிக்க நோக்கில் இயற்கைவளங்கள் வீணடிக்கப்பட்டாலும் தொழில் உழைப்பு முழுவதுமாகப் பயன்படுத்தப்பட்டது; இயற்கைச்செல்வம் வீணடிக்கப்பட்டாலும் உழைப்பின் வளத்தை அதிகரிப்பது புத்திசாலித்தனமாகத் தோன்றியது. ஆனால் இந்தக் காலனியாதிக்க நோக்கு, அனைத்து நாடுகளுக்கும், அனைத்துச் சூழல்களுக்கும் ஏற்றது என்று நினைப்பதுதான் அநியாயம்.

உதாரணமாக, அதிக எண்ணிக்கையில் தொழிலாளர்கள் குறைந்த ஊதியத்திற்குக் கிடைக்கும் நிலையிலும், தொழிலாளர்கள் எண்ணிக்கையைக் குறைக்கத் தொழில்நுட்பங்கள் ஏன் புதிதுபுதிதாக அறிமுகப்படுத்தப்படுகின்றன? ஏற்கெனவே வளங்கள் குறைவாக உள்ள பகுதிகளில் அதிகமான வளங்களைப் பயன்படுத்தும் தொழில்நுட்பங்கள் புகுத்தப்பட்டு விட்டன. பாரம்பரியச் சமுதாயங்கள், தங்களுக்கு அவசியமற்ற தேவைகளைப் புறக்கணிக்கின்றன என்ற வகையில் "முன்னேறாமல்" இருந்தாலும், அடிப்படைத் தேவைகளைப் பொறுத்த மட்டில் அவைதான் உண்மையான வளமிக்க சமூகங்கள்.

சான்றாக, அமேசானிலுள்ள பூர்விகக் குடிமக்களின் வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்ற அங்குள்ள காடுகளே போதுமானவை. அவர்களுக்குப் பாலி யெஸ்டர் உடைகளும் கொக்கோகோலாக்களும்

தேவையில்லை. அங்குப் புகுத்தப்பட்ட "வளர்ச்சி"தான் வறுமையை உண்டாக்கியது.

இந்தியாவில் சத்தீஸ்கட் மாநிலம்-பஸ்தார் மாவட்டத்திலுள்ள கோண்டு பழங்குடிகளுக்கும், மலேசியாவின் ஷாரவாக் வாசிகளுக்கும் இதேநிலைதான் ஏற்பட்டது.

**கருத்துப்புகுத்தல்**

உள்ளூர்த் தொழில்நுட்பங்கள் பிற்போக்கானவை, உற்பத்தித்திறன் அற்றவை என்று முத்திரை குத்தப்படுகின்றன. உலகளாவியசக்திகள் ஆதிக்கம் செலுத்தும் சந்தைப்பொருளாதாரத்தின் மூலவளத்தேவைகள், கடும் அரிப்பை ஏற்படுத்துகின்றன என்பதைப் பலரும் அறிவதில்லை. அதனால் வளர்ந்துவரும் நாடுகளின் பத்திரிகைகளும், திரைப்படங்களும், தொலைக்காட்சி போன்ற ஊடகங்களும் இப்படிப்பட்ட வளர்ச்சியை ஆதரிக்கின்றன, நியாயப்படுத்துகின்றன. சென்செக்ஸ் எண் உயர்வதில் நாடே உயர்ந்துவிட்டது என்று பெருமைப்படும் வித்தகர்கள் இவர்கள்தான்.

சூழலியல் ரீதியான அழிவை ஏற்படுத்தும் பொருளாதார நடவடிக்கைகள் மூலம் சமத்துவமின்மை பெருகுகின்றது. இத்தகைய சமத்துவமின்மையை முதலாளித்துவம் நியாயப்படுத்துகிறது. போட்டியில் ஈடுபடாதவர்களும் தோல்வியடைபவர்களும் வாழத்

தகுதியற்றவர்கள் என்னும் டார்வின் தத்துவத்தை அது பயன்படுத்துகிறது. இந்தக் கோட்பாட்டை வலியுறுத்தும் வகையில் "வாழ்க்கையில் வெற்றி பெறுவது எப்படி?", "அதிகச் செல்வம் சேர்ப்பது எப்படி?" "அள்ள அள்ளப் பணம்" போன்ற நூல்கள்தான் இப்போது எழுதப்படுகின்றன, அவற்றை வணிக நிறுவனங்கள் வெளியிடுகின்றன. வணிகப் பத்திரிகைகளிலும் இத்தகைய கட்டுரைகள்தான் வெளியிடப்படுகின்றன (அதிக "வரவேற்பையும்" பெறுகின்றன) என்பதும் இன்று நோக்கத்தக்கது.

# 4. படிப்பு என்பது இதுவா?

ஆதித்தியா தொலைக்காட்சியில் ஒரு வேடிக்கை நிகழ்ச்சி. (அதன் பெயர்- 'சொல்லுங் கண்ணே, சொல்லுங்க' என்று ஞாபகம்.) நடத்துபவர் ஒரு நகைச்சுவை நடிகர். அவர் தன்னைச் சுற்றிக் கூடியிருக்கும் கூட்டத்தில் "அரிசி எங்கிருந்து வருகிறது?" என்று கேட்கிறார். பல பேர்-சுமார் இருபத்தைந்து முப்பது வயது முதல் பதினைந்து வயதுப் பிள்ளைகள் வரை கூடியிருக்கிறார்கள்-அது தொழிற்சாலையில் செய்யப்படுகிறது, மரத்தில் காய்க்கிறது என்பது மாதிரி பதில் சொல்கிறார்கள். (கொஞ்சம் பெரியவர்கள் ஒன்றிரண்டு பேர்தான் அது நெல்லிலிருந்து வருகிறது, நெல் பயிரிடப்படுகிறது என்ற மாதிரி சரியான பதில் சொல்கிறார்கள்.)

"பாரதியார் யார்?" என்று கேட்கிறார் நம் கேள்வியாளர். இந்தியாவின் ஜனாதிபதியாக இருந்தவர் என்று பதில் வருகிறது. நம் பிள்ளைகளின் படிப்பை அளவிட இந்த நிகழ்ச்சியை விடச் சரியான ஒரு அளவுகோல் கிடையாது. நம் கல்வி முறை பற்றித் தெரிந்துகொள்ள இந்த நிகழ்ச்சியைப் பார்க்கும்படி அனைவருக்கும் பரிந்துரை செய்கிறேன்.

ஏறத்தாழ ஆறாண்டுகள் பள்ளியிலும், முப்பத்திரண்டு ஆண்டுகள் கல்லூரியிலும் ஓரிரண்டாண்டுகள் பல்கலைக்கழகத்திலும் என்று

ஆசிரியப்பணி புரிந்ததன் காரணமாக இன்றைய கல்விநிறுவனங்கள், பல்கலைக்கழகங்கள், கல்வித் திட்டம் போன்றவை பற்றி நன்றாகவே அறிந்து கொள்ளக்கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டிருக்கிறது. அதனை முன்னிட்டுச் சில கருத்துகளைப் பகிர்ந்து கொள்ள நினைக்கிறேன். என்னைப் பொறுத்தவரை, எனது ஆசிரிய வாழ்க்கையை மாணவர்களைச் சிந்திக்கத் தூண்டுவதற்காகவே பயன்படுத்தியிருக்கிறேன்.

இன்றைய கல்வி சமூகத்துக்கோ, தனிப்பட்ட மனித வாழ்க்கைக்கோ பயன்படுவதாக இல்லை. அறமதிப்புகள், வாழ்க்கை மதிப்புகள் போன்றவை பற்றி இன்றைய கல்விக்குக் கொஞ்சமும் அக்கறை இல்லை. மனிதர்களைப் பிழைப்புக்குப் பாடுபடும் எந்திரங்களாக மாற்றவே இது உதவி செய்கிறது.

சின்னஞ்சிறுவர்களை திருச்சி சேர்ந்த கிராமப்புறப் பகுதியில் ஒரு முறை கேள்வி கேட்டேன். (கொஞ்சம் செம்மைப்படுத்தியிருக்கிறேன்)

நீ என்ன ஆக விரும்புகிறாய்?

டாக்டராக அல்லது எஞ்சினியராக.

எதற்காக?

நிறையப் பணம் சம்பாதிப்பதற்காக.

நிறையப் பணம் சம்பாதித்த பிறகு?

வசதியோடு சந்தோஷமாக இருக்கப்போகிறேன்.

பிறகு?

அவ்வளவுதான். அப்புறம் என்ன?

(இதை ஒரு ஜோக்-ஆகவும் மாற்றிச் சொல்வார்கள்)

இந்தக் கூற்றுகளில் காணப்படும் சில உள்விவகாரங்களைப் பார்ப்பது அவசியம். அதெப்படி ஒருவனுக்கே மருத்துவனாகவும் பொறியியல் துறையில் செல்லவும் ஏற்புடைமை இருக்கும்? இரண்டுமே இல்லாமல் வேறு துறையில் செல்லும் பொருத்தப்பாடும் இருக்கலாம். ஒவ்வொரு மனிதனுடைய ஆளுமையும் ஒவ்வொரு விதமானது.

தனிப்பட்ட நோக்கில் பார்த்தால், ஆளுமையை உருவாக்குவதுதான் கல்வி. சமூகநோக்கில் பார்த்தால், சமூகத்தில் அமைதியாக வாழ்வதற்கு உதவுகின்ற அறமதிப்புகளை, அன்புமயமான மனப்பான்மையைத் தரவேண்டியது கல்வி. பிழைப் புக்கு வழிசெய்வது என்பது கல்வியின் ஏதோ ஒரு கூறு மட்டுமே.

உளவியலில் மனப்பாங்குகள், திறன்கள் (attitudes and aptitudes) பற்றி நிறையப் பேசுவார்கள். ஏன் ஒருவன் தன் மனப்பாங்கிற்கும் திறமைக்கும் ஏற்ப ஓர் ஓவியனாகவோ கலைஞனாகவோ பத்திரிகைக்காரனாகவோ விவசாயியாகவோ அறிவியலாளனாகவோ தச்சனாகவோ ஆகக் கூடாது? சில சிறுவர்களுக்குக் கைவினைகளில் திறன் இருக்கலாம். சிலருக்கு அருவமான சிந்தனைத் திறன் இருக்கலாம். சிலருக்குப் பருமையான பொருட்களைச் செய்வதில் ஆர்வம் இருக்கலாம். எல்லாவற்றையும் புறக்கணித்து மனிதர்களை வெட்டிச் செதுக்கி மருத்துவராகவோ பொறியியலாளராகவோ அல்லது அரசாங்க வேலைக்காரனாகவோ ஆக்குவதில் என்ன லாபம்?

இன்னும் அடிப்படையாக, எல்லாருமே பணம் சம்பாதிக்கும் வேலைகளில்(!) ஈடுபட்டு விட்டால், உணவு எப்படி வரும்? நீர் எப்படிக் கிடைக்கும்? உணவின்றி எப்படி உயிர்வாழ முடியும்?

இவையெல்லாம் இன்றைய கல்வித்திட்டம் ('கரிகுலம்' என்று ஆங்கிலத்தில் சொல்வார்களே, அது) பாழாகிவிட்டதைத்தான் எடுத்துக்காட்டுகிறது. (பாடத்திட்டம் (சிலபஸ்) என்பது வேறு. அது ஒவ்வொரு பாடத்திலும் என்ன படிக்கவேண்டும் என்பதை நிர்ணயிக்கும் விஷயம்.)

இன்று கற்பிக்கும் முறைகள் எப்படி இருக்கின்றன? எப்படியாவது மாணவன் 1200 மதிப்பெண்களுக்கு ஒரு 1100 மதிப்பெண்ணாவது வாங்கிவிடவேண்டும். புரிந்து கொண்டு படிக்கத் தேவையில்லை. தேர்வில் கேட்கப்படும் கேள்விகளுக்குச் சரியான விடை எழுதி விட்டால் போதும். அதற்கு நிறைய மனப்பாடம் செய்யவேண்டும். அதற்குப் பயிற்சி அளிக்க எத்தனையோ தனிப்பட்ட டியூஷன்கள், கோச்சிங் முறைகள். பழங்காலத்தில் பாடம் நடத்துதல், போதித்தல் (டீச்சிங்) என்று சொல்வார்கள். இப்போது 'டீச்சிங்' போய் 'கோச்சிங்' வந்து விட்டது. ஒரு விளையாட்டு வீரனுக்கு, நடிகனுக்கு, சர்க்கஸ்காரனுக்குப் பயிற்சி அளிப்பதுபோல, பத்தாம் வகுப்பிலும் பன்னி ரண்டாம் வகுப்பிலும் பிறகு கல்லூரியிலும் பல்கலைக்கழகங்களிலும் பயிற்சி (கோச்சிங்).

ஒரு பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்பு படிக்கும் மாணவனின் நிலையைச் சிந்தித்தால் பாவமாக இருக்கிறது. காலையில் 6 முதல் 7 வரை வேதியிய லில் டியூஷன், 7 முதல் 8 வரை இயற்பியலில் டியூஷன், காலை எட்டு முப்பதிலிருந்து மாலை ஐந்தரை வரை பள்ளியில் 'கோச்சிங்'. மாலை 6 மணி முதல் 8 மணிவரை கணக்கு டியூஷன். 8 முதல் 9 வரை உயிரியலில் டியூஷன். வரலாறு, பொருளாதாரம், கலாச்சாரம், மொழி போன்ற பிற பாடங்களைப் படிக்கத் தேவையில்லை. விளையாட்டு அறவே தேவையில்லை, உடற்பயிற்சி தேவையில்லை, உடலை நன்றாக வைத்துக்கொள்ள

வேண்டிய கல்விகள்-உணவு, சுகாதாரம் போன்றவை பற்றித் தேவையில்லை, அற மதிப்புகள் பற்றிய கல்வி தேவையில்லை.

பாடத்தை நடத்துவதோ புரிந்துகொள்வதோ கிடையாது. மாதிரித் தேர்வுகள் எழுதி எழுதி என்ன கேள்வி தேர்வில் கேட்டாலும் எந்திரத்தனமாகச் சரியான விடையளிக்கும் ஒரு 'ரோபாட்'டாக மாணவன் மாறிவிடவேண்டும். நிறைய மதிப்பெண் வாங்கவும் வசதியான வாழ்க்கை வாழவும் கனவு காணவேண்டும் (அப்துல்கலாம்). அவற்றை வாங்கத் தயங்கினால், முடியாவிட்டால், இருக்கவே இருக்கிறது பாசிட்டிவ் திங்கிங்-"உன்னால் முடியும் தம்பி" என்ற மனப்பான்மையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு இருக்கவே இருக்கிறார்கள் அப்துல்கலாம் முதல் நித்யானந்தா வரையிலான போதகர்கள்.

இப்படிப்பட்ட கல்வி யாருக்குப் பயன்படுகிறது? பெரிய முதலாளிகளுக்கு. அவர்கள் கொள்ளையடிப்பதற்கு. அவர்கள் தூக்கி எறியும் எச்சில்களை இந்தக் கல்வி முறையில் படித்தவர்கள் பொறுக்கித் தின்பதற்கு. உலகத்தை அழிப்பதற்கு.

இப்படிப்பட்ட கல்வியின் விளைவுதான் மனிதத்தன்மையற்ற பெரிய தலைவர்கள்-மன்மோகன் சிங்குகள் உருவாவதற்கு வழிசெய்கிறது. வெளிநாடுகளின் பன்னாட்டு நிறுவனங்களுக்கு நம் நாட்டை விலைபேசுவதற்கு இவர்கள் தயங்குவதில்லை. நம் நாட்டு மக்கள்

செத்தாலும் சரி, பன்னாட்டு நிறுவனங்களுக்கு வழிவிட வேண்டும். அந்நிய முதலீடு வேண்டும். அதுதான் வளர்ச்சி. இப்படிப்பட்ட மனிதத் தன்மையற்ற கல்வி பெற்றதனால்தான் கூடங்குளம் போன்ற அணுஉலைகளின் அபாயங்களைப் பற்றி நன்கறிந்த விஞ்ஞானியான அப்துல்கலாம் அதற்கு ஆதரவாக பிரச்சாரம் செய்கிறார். வசதியான வாழ்க்கைக்கு கனவு காணச்சொல்லிச் சின்னஞ் சிறுவர்களைத் தூண்டுகிறார்.

ஆசிரியர்களும் இப்படிப்பட்ட பயனற்ற அறமதிப்புகளற்ற கல்விமுறைக்குப் பழக்கப்பட்டு விட்டார்கள். மாணவர்களுக்கு டியூஷன் நடத்திக், கொள்ளையடித்தது வரை லாபம் என்ற வியாபார மனப்பான்மைக்கு உட்பட்டுவிட்டார்கள்.

பழங்காலத்தைவிட இப்போது நன்றாகப் பாடம் நடத்தும் திறன் பெற்ற ஆசிரியர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் டியூஷன் நடத்தும் வாழ்க்கை முறைக்கு ஒருவகையில் தள்ளப்படுகிறார்கள். அரசு சார்ந்த கல்வி நிறுவனங்களில் ஓரளவு ஆசிரியர்களுக்கு நல்ல ஊதியம் அளிக்கப்படுகிறது. ஆனால் தனிப்பட்ட கல்வி நிறுவனங்களில் ஐந்தாயிரம், ஏழாயிரம், எட்டாயிரம், பத்தாயிரம் வரைதான் ஊதியம். வேறு வேலை கிடைக்காதவன்தான் இந்த வேலைக்கு வரமுடியும்.

தேர்வு, அதற்கு வினாத்தாள் தயாரிக்கும் முறை, திருத்தும் முறை போன்றவையும் சீர்கெட்டுவிட்டன. விடைத்தாள் திருத்துவதற்கு நல்ல ஊதியம் அளிக்கப்படுகிறது. ஆனால் பணி கேவலமானது. ஒரு நாளுக்கு ஒருவர் முப்பது விடைத்தாள் வரைதான் நியாயமாகத் திருத்தமுடியும். ஆனால் அரசுத்தேர்வு மையங்களிலேயே எழுபது முதல் நூறுவரை திருத்தச் சொல்லுகிறார்கள். திருத்தும் ஆசிரியர் படிக்காமலே எல்லாவற்றிற்கும் நாற்பது, நாற்பது, நாற்பது என்றே பெரும்பாலும் மதிப்பெண் அளித்துச் செல்கிறார். இந்தத் திருத்தும் நாடகத்தில்தான் நான் 1100 வாங்கினேன், நான் முதல் ரேங்க் பெற்றேன், நான் 1150 வாங்கினேன் என்று பிரதாபம். இந்த மாணவி முதல் மதிப்பெண் பெற்றார், இந்த மாணவி இரண்டாம் தகுதி பெற்றார் என்றெல்லாம் பத்திரிகைகளிலும் தொலைக்காட்சிகளிலும் விளம்பரம். அவர்களுக்குப் படிக்கச் சலுகைகள். ஐந்தாண்டுகள் கழித்துப் பாருங்கள், என்ன ஆனார்கள் அவர்கள்?

அரசு பள்ளிகள் மேல் முற்றிலும் மக்களுக்கு நம்பிக்கை இல்லை. இதற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கின்றன. ஆனால் அரசு பள்ளிகளை விட மோசமாக நடத்தப்படுகின்ற தனியார் நிறுவனங்களில் எல்கேஜியில் சேர்ப்பதற்கு ஐம்பதாயிரம், ஒரு லட்சம் என்று கட்டணம் தரத் தயாராக இருக்கிறார்கள். இது நமது மக்களின் மனக்கோளாறு.

கல்வி முற்றிலும் வணிகமயமாக்கப்பட்டுவிட்டது. இன்றைய கல்வியின் 'தாதா'க்கள் (இதுதான் சரியான சொல்-இதை நாகரிகமாக கல்வித் தந்தை, தாளாளர் என்று சொல்லிக்கொள்வார்கள்) எல்லாம் கள்ளச்சாராய வியாபாரிகளாகவோ, கருப்பு மார்க்கெட்காரரர்களாகவோ, பொறுக்கிகளாகவோ, ரவுடிகளாகவோ, கட்சிக்கு விலை போய் மலிவாக நிலங்களை வளைத்துப்போட்டவர்களாகவோ இருப்பவர்கள். இவர்களுக்கு உயர்ந்த மதிப்புகள் பற்றியோ உயர்ந்த வாழ்க்கை பற்றியோ ஒன்றும் தெரியாது. எப்படியாவது நிலங்களைக் கொள்ளையடித்து, நல்ல உள்கட்டமைப்பு வசதிகள் கொண்ட பெரியபெரிய கட்டடங்களைக் காட்டி நிறைய கேபிடேஷன் (தலைக்கூலித்) தொகை வசூல் செய்வார்கள். இதைத்தவிர அந்த ஃபீஸ், இந்த ஃபீஸ் என்று ஏராளமாக மாணவர்களிடம் பிடுங்கிக்கொண்டு முன்கூறியபடி ரோபாட்டுகளாக உருவாக்குவார்கள். இந்த மாணவர்களுக்கு நம் சமூக அமைப்பு, பொருளாதாரம், கிராமப்புற வாழ்க்கை முறைகள், கலாச்சாரம் பற்றி எல்லாம் ஒன்றும் தெரியாது. சிறுவயதிலேயே மம்மி டாடி கலாச்சாரத்தில் வேரோடு பிடுங்கி எறியப்பட்ட அந்நியமானவர்கள் இவர்கள்.

ஏறத்தாழ இருபது ஆண்டுகளுக்கு முன்னரே-எனக்கு நன்றாகத் தெரிந்த ஒரு பல்கலைக்கழகம்-அந்தக்கால விலைவாசிப்படி இருபதாயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு மெடிக்கல் சீட் அளித்தது.

அப்புறம் நான்காண்டுகள் அந்தப் பையன் படிப்பதே இல்லை. ஹவுஸ் சர்ஜனாக இருக்கும் சமயத்தில் பேண்டேஜ் போடவும் ஊசிபோடவும் ஸ்டெதாஸ்கோப்பில் துடிப்புப் பார்க்கவும் கற்றுக்கொண்டால் தீர்ந்தது. வெளிவந்த பிறகு, இருக்கவே இருக்கிறார்கள்- மருந்துக் கம்பெனிப் பிரதிநிதிகள் (மெடிக்கல் ரெப்ரசெண்டிவ்கள்)-தலைவலி முதலாக கேன்சர் வரை என்ன மருந்துகள் கொடுப்பது என்று பட்டியலைக் காட்டி சாம்பிளும் கொடுத்து விட்டுப் போய்விடுவார்கள். பிறகு இருக்கவே இருக்கிறார்கள் பொதுமக்கள், அவர்கள் மீது மாற்றி மாற்றி மருந்துகொடுத்துச் சோதனை செய்துவிட்டால் போயிற்று. நோயாளி செத்துப்போனால், எல்லாம் கடவுள் செயல், விதி, டாக்டர் என்ன கடவுளா? மேலும் இருக்கவே இருக்கின்றன, மருத்துவத்தை விலைபேசும் பெரிய பெரிய மல்டிமருத்துவமனைகள். நீங்கள் சாதாரணத் தலைவலி என்று போனாலும் குறைந்தது பத்தாயிரம் ரூபாய்க்கு மருத்துவச் சோதனைகள் நடத்திவிடுவார்கள்.

நமது மருத்துவக் கல்லூரிகளில் விடுதிகளில் போய்ப்பார்த்தால் டாக்டர்கள்மீது உள்ள நம்பிக்கை முற்றிலும் போய்விடும். குடித்துவிட்டு, போதை மருந்து ஏற்றிக் கொண்டு உருண்டு கிடப்பவர்கள் சிலர். பெண்களோடு சுற்றுபவர்கள்...எல்லோருமே இப்படியா என்று தயவு செய்து உருப்படாத கேள்வி கேட்காதீர்கள். இப்படிப்பட்ட கேள்விகேட்டுத்தான் லஞ்சம் வாங்கும் அதிகாரிகள்

முதல் அரசியல்வாதிகள் வரை ஒன்றுமே செய்ய இயலாமல்போய் இன்றைக்கு ஊழல் என்றால் பதினைந்து லட்சம்கோடி, இருபத்தைந்து லட்சம் கோடி என்றுபோய் நிற்கிறது.

ஒரு ஊரில் இப்போது இருபது பொறியியல் கல்லூரிகளும் இரண்டு மருத்துவக் கல்லூரிகளும் இருந்தால் நான்கு கலைக்கல்லூரிகள் இருக்கின்றன. இப்போது பி.ஏ. பொருளாதாரம், வரலாறு போன்ற படிப்புகள் காணாமல் போய்விட்டதைப்போல, எதிர்காலத்தில் கலைக் கல்லூரிகளே காணாமல் போய்விடலாம். கலைக்கல்லூரிகளும்-பெயர்தான் அப்படி-எல்லாம் கணிப்பொறித்துறையிலும் எம்.பி.ஏ. படிப்பிலும் தான் மாணவர்களை ஈர்க்கின்றன. நமது பல்கலைக்கழகங்கள், அவற்றில் அளிக்கப்படும் மேல்படிப்புகள், பிஎச்.டி. ஆராய்ச்சிகள் போன்றவற்றைப் பற்றியெல்லாம் பேசுவதற்குத் தனிக்கட்டுரையே எழுதவேண்டும்.

இந்த மாதிரிக் கல்வி முறையில், சமூக அக்கறை, நமது கலாச்சாரத்தைப் பற்றிய அக்கறை, தாய்மொழி மீதான அக்கறை இவற்றிற்கெல்லாம் எங்கே இடம் இருக்கிறது? ஒரு லட்ச ரூபாய் சம்பளம் வாங்கும் ஒரு தனியார் கம்பெனிப் பொறியியலாளருக்குச் சுற்றுச்சூழல் மாசுபாடு, உலகம் வெப்பமாதல் பற்றி ஒன்றுமே தெரியாது. அவருக்கு அது தேவையுமில்லை. போனவருஷத்தைவிட

இந்த வருஷம் வெப்பம் கூடுதலா? வீட்டில் ஏ.சி. போட்டுக்கொள். அவ்வளவுதான் அவருக்குத் தெரியும்.

முற்றிலும் வாழ்க்கை வணிகமயமாக்கப்பட்டு வீணாகப் போனது ஒரிரண்டு தலைமுறைகளின் வரலாறு.

# 5. கூண்டுப் பறவை

(கீழ்வரும் கதை நோபல் பரிசு பெற்ற வங்க எழுத்தாளர் இரவீந்திரநாத் தாகூரால் (1861-1941) எழுதப்பட்டது. கல்வி என்பது என்ன எனக் கேள்வி கேட்கிறது இக்கதை.)

ஒரு காலத்தில் ஒரு சிறிய பறவை இருந்தது. அதற்கு நாகரிக நடத்தைமுறைகள் தெரியாது, அது புத்தகங்களும் படித்ததில்லை.

"இந்தப் பறவை ஒன்றுக்கும் லாயக்கில்லை, அது தோட்டத்திலுள்ள பழங்களைத் தின்பதைத் தவிர வேறு எதுவும் செய்வதில்லை" என்றான் அரசன். தன் அமைச்சரைக் கூப்பிட்டு, "அதற்குக் கொஞ்சம் கல்வி அளியுங்கள்" என்றான்.

கல்வி அளிக்கும் பொறுப்பு அரசனின் மைத்துனனுக்குச் சென்றது. அவன் பல பண்டிதர்களை அழைத்து அந்தப் பறவை ஏன் சற்றும் கல்வி இல்லாமல் இருக்கிறது என்று கண்டறியச் சொன்னான்.

அவர்கள், பறவையின் கூடு வெறும் வைக்கோலினால் ஆகியிருப்பதால்தான் அவ்வாறு நேர்ந்தது என்று முடிவு செய்தார்கள். ஆகவே முதலில் செய்ய வேண்டிய வேலை தேர்ந்தெடுத்த பொருள்களால் ஒரு கூண்டு செய்வதுதான் என்றார்கள்.

அரசன் அவர்களுக்கு விலையுயர்ந்த பரிசுகளைக் கொடுத்து அனுப்பிவைத்தான்.

பொன்னாலான ஒரு அழகிய கூண்டினைச் செய்யப் பொற்கொல்லனை வருவித்தான். அந்தக் கூண்டினைக் காண வெகுதொலைவிலிருந்து எல்லாம் மக்கள் வந்தார்கள்.

சிலர், "கல்வியின் தரம் மிக உயர்ந்துவிட்டது!" என்றார்கள். இன்னும் சிலர் "கல்வியே இல்லாவிட்டாலும் இப்படிப்பட்ட உயர்ந்த கூண்டில் அந்தப் பறவை வசிக்கிறது. எவ்வளவு அதிர்ஷ்டம் அதற்கு!" என்றார்கள்.

பொற்கொல்லனும் பரிசுகளைப் பெற்றுச் சென்றான்.

அரசனின் மைத்துனன், பாடப்புத்தகங்கள் எழுதுவோரை வரவழைத்தான். அவர்கள் இருக்கும் நூல்களுக்குப் படிகள் எடுத்தார்கள், படிகளுக்குப் படிகள் எடுத்தார்கள். கொஞ்சநாளில் புத்தகங்கள் மலைபோல் குவிந்துவிட்டன. பார்த்தவர்கள், "சபாஷ், இதல்லவோ கல்வி!" என்றார்கள்.

பாடப்புத்தகங்கள் எழுதியவர்களும் உயர்ந்த பரிசுகள் பெற்று வீடு திரும்பினார்கள்.

தொடர்ந்து கூண்டினை மிக நன்றாகப் பராமரிக்கவேண்டிப் பல ஆட்களை அமர்த்தினான் அரசனின் மைத்துனன்.

சிலபேர், "கூண்டை நன்றாகத்தான் கவனிக்கிறார்கள். ஆனால் உள்ளே இருக்கும் பறவையை ஒருவரும் கவனிப்பதில்லையே!" என்று விமரிசனம் செய்தார்கள். அரசன் காதில் இந்தச் சொற்கள் விழுந்ததும் மைத்துனனை அழைத்தான்.

"வணக்கத்திற்குரிய அரசே, தெரிந்தவர்கள்-பொற்கொல்லர்கள், ஆசிரியர்கள், பாடப் புத்தகம் எழுதியவர்கள், நிர்வாகிகள்-முதலியோரிடம்தான் உண்மையை அறியமுடியும். இந்த விமரிசகர்கள் வேலையற்றவர்கள், இப்படித்தான் கூச்சல்போடுவார்கள்" என்றான் மைத்துனன்.

இந்தச் சமாதானம் அரசனை அமைதிப்படுத்தியது. அவன் மைத்துனனுக்கும் ஒரு தங்க நெக்லஸ் பரிசாக அளித்தான்.

ஒருநாள், பறவைக்கு அளிக்கப்படும் கல்வி எவ்வளவு முன்னேறியிருக்கிறது என்று தானே நேரில் காணவிரும்பினான் அரசன். அவையினருடன் பறவையின் கல்வி மையத்துக்கு வந்தான். தொழிலாளர்கள், வேலையாட்கள், பாடப்புத்தகக்காரர்கள், மேற்பார்வையாளர்கள் எல்லாரும் அவரவர் இடத்தில் இருந்தார்கள்.

முற்றிலும் திருப்தியடைந்தவனாக, அரசன் தன் யானைமீது ஏறப்போனான். அப்போது அருகில் ஒளிந்திருந்த விமரிசகன் ஒருவன், "அரசே, பறவையைப் பார்த்தீர்களா?" என்று கூச்சலிட்டான்.

அரசனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. "ஆமாம், மறந்தேவிட்டேன்" என்றான். "நாம் பறவையைப் போய்ப் பார்ப்போம், வாருங்கள்" என்றான்.

யாவரும் பாடம் நடத்தும் செயலை அவனுக்கு நிகழ்த்திக் காட்டினார்கள். அது மிகவும் பெரிதாக இருந்தது. பறவை கண்ணுக்குத் தென்படவே இல்லை. பறவைக்குப் பாடம் சொல்ல இவ்வளவு அரிய முயற்சிகள் நடக்கின்றனவே என்று அரசன் திருப்தியடைந்தான்.

பறவைக் கூண்டுக்குள் உணவோ நீரோ இல்லை. அதற்கு பதிலாகப் புத்தகங்களிலிருந்து கிழிக்கப்பட்ட தாள்கள் பேனாவினால் உள்ளே செலுத்தப்பட்டன.

பறவை இப்போதெல்லாம் பாடுவதே இல்லை, அதற்கு மூச்சுவிடவும் இடமில்லை.

தாங்கள் சரியான காரியங்களைத்தான் செய்வதாக அதன் பாதுகாவலர்கள் நினைத்தார்கள்.

நாளுக்கு நாள் பறவை மிகவும் இளைத்துப்போயிற்று. அதனால் குதிக்கவோ ஆடவோ சற்றும் இயலவில்லை. இருந்தாலும் பழக்கத்தின் காரணமாக, காலைச் சூரிய ஒளியைக் கண்டபோது சிலமுறை அது தன் சிறகுகளை அடித்துக்கொள்ள முயன்றது.

சிலசமயங்களில் தன் பலவீனமான அலகினால் தங்கக்கூண்டின் கம்பிகளைக் கொத்த முயன்றது. "எவ்வளவு மோசமான நடத்தை!" என்று காவலாளிகள் கத்தினார்கள்.

ஒரு கொல்லனை வருவித்துப் பறவையைச் சங்கிலியால் கட்ட முடிவு செய்தார்கள். அதன் இறக்கைகளும் வெட்டப்பட்டன. "இந்த நாட்டில் பறவைகள் முட்டாள்கள் மட்டுமல்ல, அவற்றிற்கு நன்றியும் இல்லை" என்றார்கள்.

ஒருநாள் பறவை செத்துப்போயிற்று. அது இறந்த சமயம் ஒருவருக்கும் தெரியாது. இந்தச் செய்தி பரவியது. அதை உறுதிப்படுத்திக் கொள்ள மைத்துனனை அரசன் வருவித்தான்.

"அரசே, பறவையின் கல்வி இப்போது பூர்த்தியாகிவிட்டது" என்றான் மைத்துனன்.

அரசன் கேட்டான், அது இப்போதெல்லாம் குதிப்பதில்லையா?

"கடவுளே, இல்லை அரசே."

"அது பறக்கிறதா?"

"இல்லை அரசே."

"அது பாடுகிறதா?"

"இல்லை அரசே."

"அப்படியானால், பறவையைக் கொண்டுவா, நான் பார்க்கவேண்டும்."

பறவையை அரசன் சுரண்டிப் பார்த்தான். பறவையிடமிருந்து எந்தச் சத்தமும் இல்லை. அதன் வயிற்றில் அடைக்கப்பட்டிருந்த தாள்கள் மட்டுமே சரசரத்தன.

# 6. படிப்புக்கும் தடை?

நல்லது செய்தல் ஆற்றீராயினும்

அல்லது செய்தல் ஓம்புமின்

என்பது நம் பெரியோர் வாக்கு. "உங்களால் நல்லது செய்ய முடியாமல் போனால் போகட்டும், கெட்டதையாவது செய்யாமல் இருங்கள்" என்பது அர்த்தம். எவ்வளவு அர்த்தமுள்ள வாக்கு பாருங்கள்!

பழிக்குப் பழிவாங்குவது என்பது சாதாரண மக்களுக்கே ஏற்புடைய செயல் அல்ல. அரசியல்வாதிகளுக்கு அந்த நோக்கம் இருந்தால் என்ன ஆகும்? "வேலையற்ற பரியாரி பெண்டாட்டி தலையைச் சிரைத்தானாம்" என்று ஒரு பழமொழி. அந்த மாதிரித்தான் ஆகும். தமிழ்நாட்டில் பல காரியங்கள் இப்படித் தான் நடக்கின்றன.

அண்ணா நூற்றாண்டு நூலகம் ஏறத்தாழ 170கோடி ரூபாய் செலவில் அமைக்கப்பட்டு, 2010இல் அண்ணா பிறந்த நாளன்று திறக்கப்பட்டது. இந்தியாவில் மிகப் பெரிய நூலகம் மட்டுமன்று, தெற்கு ஆசியாவிலேயே இது இரண்டாவது நூலகம் என்கிறார்கள். (முதல் நூலகம் சிங்கப்பூரில் இருக்கிறதாம்.) இப்படிப்பட்ட ஒரு நூலகத்தைப் பெற்றிருக்க நாம் யாவரும் பெருமைப் படவேண்டும். தமிழ்நாட்டின்

பெருமையே அதன் கல்வித்திறத்தில்தான் இருக்கிறது. முந்தைய ஆட்சி கடைசியாகச் செய்த நல்ல காரியங்களில் முக்கியமானது இது. இதைப் போய் ஏன் இடமாற்றம் செய்யவேண்டும்?

நமக்கு நல்ல மருத்துவமனைகள் தேவைதான். ஆனால் அவற்றைத் தக்க இடங்களில் புதிதாகக் கட்டிக்கொள்ளலாம். ஏற்கெனவே கட்டப்பட்ட இடங்களை மாற்றுவதால் வீண் செலவுதான். அதுவும் குளிர்சாதன வசதி முற்றிலும் செய்யப்பட்ட இந்த மாபெரும் இடமகன்ற கட்டடத்தில் குழந்தைகள் மருத்துவ மனையைக் கொண்டுவந்து என்ன செய்யப்போகிறார்கள்? மருத்துவமனை ஆக்கினால், எல்லாத் தளங்களையும் சிறுசிறு அறைகளாக மாற்றியமைக்க வேண்டும். மீண்டும் இடிக்கவும் கட்டவுமான வீண்செலவு. ஒவ்வொரு கட்டடத்தின் அமைப்பு நோக்கமும் வேறு. இது நூலகத்திற்கென அமைந்த கட்டடம்.

இந்த நூலகம் முழுவதும் குளிர்சாதன வசதி செய்யப்பட்டுள்ளது. எட்டு அடுக்குகள். ஒவ்வொன்றிலும் அருமையான புத்தகங்கள். மருத்துவமா, பொறியியலா, ஆங்கில இலக்கியமா, கணிப்பொறியியலா, எந்தத் துறையில் நூல் வேண்டும்? ஒரு தளத்திற்கு எழுபதாயிரம் முதல் எண்பதாயிரம் புத்தகங்கள். மொத்தம் ஆறு லட்சம் நூல்கள். குழந்தைகளுக்கென்று தனிப்பகுதி. பத்திரிகைகளுக்குத் தனிப் பகுதி. ஒரு முறை சென்று சுற்றிப்பார்த்து

வந்தாலே புத்தகத்தின் அருமை தெரிந்தவர்களுக்கு அப்பா, இவ்வளவு பெரிய நூலகமா, இவ்வளவு வசதிகளுடனா என்ற மலைப்பு ஏற்பட்டுவிடுகிறது. எட்டாவது அடுக்கில் மட்டும் நிர்வாகம். பிற அடுக்குகளில் எல்லாம் நல்ல நல்ல புத்தகங்கள்.

இதெல்லாம் போகட்டும். நீங்களே புத்தகம் கொண்டு சென்றால் அங்கே கீழ்த்தளத்திலேயே வசதியாக உட்கார்ந்து படிக்கலாம். பிற பகுதிகள் எல்லாம் இரவு எட்டு மணிக்கே மூடப்படுகின்றன. சொந்தப் புத்தகம் கொண்டுசெல்வோர் படிக்கும் பகுதி ஒன்பது மணிக்குத்தான் மூடப்படுகிறது. படிப்பவர்களுக்கு எவ்வளவு வசதி பாருங்கள்?

கலைஞர் கருணாநிதி கட்டிய நூலகம் என்பதற்காக அவர் சம்பந்தமான புத்தகங்களை வாங்கி நிரப்பிக்கொள்ளவில்லை. எல்லாத் துறைகளிலும் அருமையான நூல்கள் நிரம்பியிருக்கின்றன. எந்தப் படிப்பு படிப்பவர்க்கும் வாயப்பாக.

தினசரி சுமார் 1700 பேர் வந்து போகிறார்கள். சனி, ஞாயிறு போன்ற விடுமுறை நாட்களாக இருந்தால் இரண்டாயிரம் பேருக்குக் கூடக்குறைய வருகிறார்கள். சுமார் ஐந்தாண்டுகளில், இந்தத் தொகை இன்னும் பலமடங்கு பெருகும்.

புதிய தலைமுறை தொலைக்காட்சியில் ஒரு நிகழ்ச்சியில் ஆளும் கட்சியைச் சேர்ந்த ஒருவர், இரண்டாயிரம் பேர் படிப்பதற்கு

இவ்வளவு வசதி தேவையா, இதையெல்லாம் உடனே மூடவேண்டும் என்று திருவாய் மலர்ந்தருளினார். படிப்பின் அருமை தெரிந்தவர்கள் இவ்விதம் பேசமாட்டார்கள். ஆனால் நம் அரசியல்வாதிகளிடம் அதெல்லாம்தான் கிடையாதே! தங்களுக்கு வேண்டுமானால் எல்லா வசதிகளையும் இலவசமாகச் செய்துகொள்வார்கள்.

ஒரு புதிய ஆட்சி மக்களின் முழு நம்பிக்கையோடு ஏற்படுமானால், அது பழைய ஆட்சியின் நல்லதுகளைப் பின்பற்ற வேண்டும், மோசமான விஷயங்களைக் கைவிடவேண்டும். அதற்காகத்தானே மக்கள் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்? அதை விட்டு மாமியார் மருமகள் கதையாக நடந்துகொண்டால் மக்களுக்கு வெறுப்பு தான் ஏற்படும். அரசியல்வாதிகள் தப்பித்தவறி எப்போதாவது நல்லது செய்து விடுகிறார்கள். கலைஞர், செம்மொழி மாநாட்டைக் கோவையில் நடத்தியபோது வீண்செலவு என்று கூறி எதிர்த்தோம். மக்களும் அதனால்தான் அவரை எதிர்த்து வாக்களித்தார்கள். ஆனால் அவர் செய்த நல்ல செயல் இந்த நூலகம். இதையும் மாற்ற வேண்டும் என்றால் வெறும் அடாவடித்தனமாகப் போய்விடும்.

தேர்தல் நடக்கும் வரை நல்ல கலை நிகழ்ச்சிகளும் இதில் நடத்தப்பட்டு வந்தன. அவையும் ஆட்சி மாறியபிறகு நிறுத்தப்பட்டு இல்லாமற்போய்விட்டன. ஏறத்தாழ நூறு நூலகர்கள் இதில் பணிபுரிகிறார்கள். எப்போது இடம் மாற்றப்படும், எப்போது நமக்கு

மாறுதல் வந்து சேரும் என்று நடுங்கிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள்.

இந்த விஷயத்தில் நீதிமன்றத்தின் தீர்ப்பும் சரியில்லை. "அரசாங்கத்தின் கொள்கை முடிவுகளில் தலையிடுவதற்கில்லை" என்று கூறியிருக்கிறது அது. பழைய ஆட்சியின்போது செய்யப்பட்டவற்றை எல்லாம் அழித்து ஒழிப்பது என்பது ஒரு கொள்கை முடிவா?

இலங்கை அரசு தமிழர்களை அழிக்க முனைந்தபோது முதல்காரியமாக யாழ் நூலகத்தைத்தான் எரித்து அழித்தது. ஓர் இனத்தை அழிக்க முனைபவர்கள்தான் நூலகத்தை அழிப்பார்கள். எதை வேண்டுமானாலும் அரசாங்கம் செய்து கொள்ளட்டும், தயவுசெய்து நூலகங்கள் பிழைத்துப்போகட்டும், விட்டு விடுங்கள். கைகூப்பிக் கேட்டுக்கொள்கிறோம், நூலகங்களை ஒன்றும் செய்யாதீர்கள். படித்தவர்கள் அனைவருக்கும் நூலகங்களின் மதிப்பு நன்றாகத் தெரியும்.

# 7. கூடங்குளம் பற்றிச் சில யோசனைகள்

கூடங்குள அணுஉலை எதிர்ப்புப் போராட்டம் வலுவடைந்து வருகிறது. அதே நேரம் அதை முடக்குவதற்கு மத்திய அரசும் மாநில அரசும் யார் யாரையோ தூண்டி விட்டு என்ன என்னவோ செய்துவருகின்றன. இந்த நேரத்தில் எனக்குத் தோன்றிய சில எண்ணங்களை உங்களுடன் பகிர்ந்துகொள்கிறேன்.

தொண்ணூறுகளின் தொடக்கத்தில் இந்தியாவில் எட்டு எட்டு அணுஉலைகளாக அமைப்பதென்று மூன்று திட்டங்கள் போடப்பட்டன. அமெரிக்கா மகாராஷ்டிரத்தில் எட்டு அணுஉலைகளை அமைப்பதென்றும், ஃபிரான்ஸ் வங்காளத்தில் எட்டு அணுஉலைகளை அமைப்பதென்றும், ரஷ்யா கேரளாவில் எட்டு அணுஉலைகளை அமைப்பதென்றும் திட்டம். அப்போது தமிழகம் பற்றிய பேச்சே கிடையாது.

வங்காளமும், மகாராஷ்டிரமும் எங்களுக்கு அணு உலை வேண்டாம் என்று முதலிலேயே புத்திசாலித்தனமாகப் போராடி அமெரிக்க, பிரெஞ்சு திட்டங்களைத் தடுத்துவிட்டன. கேரளாவில் கோட்டயத்தில் அவர்களுடைய டைடல் பார்க்குக்காக அமையவிருந்த அணுஉலைகளை அவர்கள் வேண்டாம் என்று போராடித்

தடுத்துவிட்டார்கள். அதைத்தான் தமிழகத்தில் கூடங்குளத்தின் தலையில் கட்டினார்கள்.

கூடங்குளம் அணுமின் திட்டத்தை எதிர்ப்பவர்கள் தேசிய, தமிழக நலனுக்கு எதிராகச் செயல்படுபவர்கள் என்பதுபோன்ற ஒரு பிரச்சாரம் இப்போது செய்யப்படுகிறது. அப்படிச் செய்பவர்களுக்கு ஒரு கேள்வி:

**ஃ எட்டாயிரம் மெகாவாட் மின்சார அணுஉலைத் திட்டத்தைத் தடுத்ததற்காக வங்காளத்தை ஏன் தேசியநலனுக்குக் குறுக்கே நிற்பவர்கள் என்று வசைபாட வில்லை?**

**ஃ அதேபோல எட்டாயிரம் மெகாவாட் அணுஉலைத் திட்டத்தைத் தடுத்ததற்காக மகாராஷ்டிரத்தை ஏன் வசைபாடவில்லை?**

**ஃ கோட்டயத்தில் இறங்கிய திட்டம்தானே தமிழகத்திற்கு இப்போது தலையிடியாக இருக்கிறது? கேரளமக்களை முதலில் "நீ ஏனய்யா உன் திட்டத்தை தமிழகத்தின் தலையில் கட்டினாய்?" என்று கேட்டுவிட்டல்லவா கூடங்குளம் எதிர்ப்பாளர்களிடம் கேள்வி கேட்க வேண்டும்? உங்களுக்கு டைடல் பார்க்குக்கு மின்சாரம் வேண்டுமென்றால் உங்கள் நாட்டில் வைத்துக்கொள்ள வேண்டியதுதானே?**

கேரள மக்களுக்கு நாம் என்ன தீங்கு செய்தோம் என்று தெரியவில்லை. அவர்களுக்கு வரும் மோசமான விஷயங்களை எல்லாம் தமிழகத்தின் தலையில் கட்டி விடுவார்கள். நியூட்ரினோ திட்டம் முதலில் கேரளாவில் வயநாட்டில் ஏற்படுவதாக இருந்தது. சுற்றுச்சூழல் பாதிப்பு ஏற்படும் என்று போராடினார்கள். கடைசியில் அதைத் தமிழகத்தில் தேனியில் அமைத்துவிட்டார்கள். பாறைகளை நொறுக்கி எடுப்பதால் இப்போது தேனி நாசமாகிக் கொண்டிருக்கிறது. அதுபோலத்தான் கூடங்குளம் திட்டமும்.

கூடங்குளத்தில் எட்டு புராஜெக்டுகள் ஒவ்வொன்றும் ஆயிரம் மெகாவாட் மின் உற்பத்திக்கென அமைக்கப்பட இருக்கின்றன. முதல் இரண்டு உலைகளை ஏறத்தாழக் கட்டி முடித்தாயிற்று. நம் மக்களுக்கு எப்போதுமே எல்லாமே காலங்கடந்துதான் தெரியவரும். இப்போது போராட்டத்தில் சிக்கி அவஸ்தைப்படுகிறார்கள்.

கூடங்குளத்துக்கு வெளிநாட்டிலிருந்து பணம் வருகிறது என்று கூச்சலிடுகிறார் ஒரு அமைச்சர். வெளிநாட்டிலிருந்து பணம் வருவது கூடங்குளம் போராட்ட மக்களுக்கு அல்ல, அந்த அமைச்சருக்குத்தான் என்று கேள்வி. எப்படியாவது இரண்டு யூனிட்டுகளைத் திறந்தால்தான் மூன்றாவது யூனிட் கட்டத்தொடங்க முடியும். இந்தியா ஒரு ரியாக்டருக்கு 13,000 கோடி ரூபாய் வீதம் எட்டு அணுஉலைகளுக்கும் 104,000 கோடி ரஷ்யாவுக்கு

அழவேண்டும். அந்தப் பணம் வராமல்போகிறதே என்ற கவலையில் ரஷ்யா இப்போது என்ன செலவானாலும் சரி, எப்படியாவது எதிர்ப்பிரசாரம் செய்து போராடும் மக்களை அமுக்கிவிடுங்கள் என்று ஆயிரக்கணக்கான கோடிகளை இந்திய அமைச்சரகத்துக்கு அனுப்பியதாகக் கேள்வி. அதைத் தமிழக அமைச்சருக்குக் கைகாட்டிவிட்டார்களாம். அந்த அமைச்சர் இப்போது கூடங்குளத்துக்கு ஆதரவான பிரச்சாரம் செய்பவர்களை பலமாக வீடு, மனை, ஷேர் என்று கவனிக்கிறாராம்.

"தான் திருடி பிறனை நம்பான், கூத்திக்கள்ளன் பெண்டாட்டியை நம்பான்" என்ற கதையாக இருக்கிறது.

கூடங்குளம் மக்கள் எவ்வளவு நாளானாலும் இடைவிடாமல் போராடத் தயாராக இருக்கிறார்கள். இதற்கு வெளிநாட்டிலிருந்து பணம் வருவதல்ல காரணம். அங்கே இருப்பவர்கள் எல்லாம் கிறித்துவ மீனவர்கள். அவர்கள் ஒவ்வொருமுறை கடலுக்குப் போய்விட்டு வந்தாலும், தங்களுக்கும், தங்களோடு வந்தவர்களுக்குமாக மீனைப் பங்குபிரிப்பார்கள். (பணம் தருகின்ற வழக்கமில்லை.) பத்துப்பேர் கடலுக்குப் போனால் பத்துப்பங்காகப் பிரிக்கப்படும்.

ஏதாவது திருவிழா, பண்டிகை, வீட்டுச் செலவுகள் என்று வரும்போது பங்குகளைக் கூட்டிக்கொள்வார்கள். அதாவது பத்துப்பங்காகப் பிரிப்பதைப் பன்னிரண்டு பங்காக்கி, இரண்டு பங்கைத் தேவைப்படும் நபருக்கு, அல்லது திருச்சபைக்கு, இப்படித் தருவார்கள். அதிலே அவர்களுக்குச் சிரமம் ஒன்றும் கிடையாது. இன்னொரு முக்கியமான விஷயம்-கடலுக்குப் போவதுதான் ஆண். பெண்ணுக்குத்தான் எல்லா நிலத்தொடர்புகளும். ஆகவே இவற்றை கவனிப்பவர்களும் பெண்கள்தான்.

இப்போதும் அப்படித்தான் பங்குபிரிப்பதைக் கூட்டி எல்லா மீனவர்களும் தரும் பணத்தை வைத்துப் போராட்டம் நடத்திவருகிறார்கள். இது அவர்களுடைய சொந்த மீன்விற்ற காசு. வெளிநாட்டுப்பணம் அல்ல. வெளிநாட்டுப் பணம் ஏதாவது எப்போதாவது வந்தாலும் உள்ளூர்ச் சாமியார்களுக்குத்தான் வரும். (பெரும்பாலும் அவர்களும் எப்படியாவது அதை ஏதாவதுசெய்து விடுவார்கள்.)

போராடுகின்ற மக்கள் கிறித்துவர்களாக இருக்கலாம். ஆனால் அவர்கள் தமிழக மக்களின் ஒட்டுமொத்த நலத்திற்காகத்தான் போராடுகிறார்கள். அமைச்சர் ஒருவர் இந்துக்கோயில் வளாகத்திலிருந்து எதிர்ப்புப் பிரச்சாரத்தைக் கிளப்ப, அது மதச் சண்டையாக மாறக்கூடிய அபாயத்தை எட்டியிருக்கிறது.

இப்போது தமிழகத்தில் மின்வெட்டை அதிகரித்து கூடங்குளத்துக்கு ஆதரவாக முதலாளிகளைக் கூச்சல்போட வைக்கிறார்கள். கூடங்குளம் திட்டத்தில் முதல் இரண்டு ஆலைகளைத் திறந்தாலும் அவை முற்றிலும் இயங்கினால் இரண்டு ஆயிரம் மெகாவாட் மின்சாரம் கிடைக்கலாம். இப்போதைக்கு முன்னூறு மெகாவாட்தான் முடியும் என்கிறார்கள். அதை அப்படியே கேரளத்தின் டைடல் பார்க் திட்டத்திற்குத் தான் தரப்போவதாகப் பேச்சு. இதை வெளியிடாமல் தமிழக மக்களைத் தூண்டி விட்டு ஏன் ஏமாற்றவேண்டும்?

மத்திய அரசாங்கம் அமைத்த குழுவினர் ஐந்து முக்கியக் கேள்விகளுக்கு விடையளிக்க மறுக்கிறார்கள்.

1. இடிந்த கரை என்ற இந்த இடத்தை ஏன் இந்தத் திட்டத்திற்குத் தேர்ந்தெடுத்தார்கள்? ஊர்ப் பெயரே இடிந்த கரை. முன் எப்போதோ அது கடலால் கொள்ளப்பட்டு, இடிந்துதான் இந்தப் பெயர்வந்தது. அப்படியிருக்க இப்போது இங்கே ஆபத்தே வராது என்று எப்படிச் சொல்லமுடியும்?

2. ரஷ்யாவுக்கும் நமக்கும் உள்ள ஒப்பந்தம்தான் என்ன? இது நமது மக்களை பாதிக்கின்ற ஒன்று. இராணுவ இரகசியம் என்று சொல்லி ஏமாற்றலாகாது.

3. பாதிப்பு ஏற்பட்டால் என்ன இழப்பீடு தருவார்கள்? யார் தருவார்கள்? ரஷ்யா ஏன் இந்த விஷயத்தில் எதுவும் சொல்ல மறுக்கிறது? போபால் விஷவாயுக்கசிவு வழக்கில் நடந்தது போல, "எல்லாம் பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய்ப் போனதுவே" என்று தமிழர்களும் சாகவேண்டியதுதானா?

4. அணுஉலைகளின் கழிவுகளை அவ்வப்போது அகற்றியாக வேண்டும். அதற்கு என்ன திட்டம் வைத்திருக்கிறார்கள்? அமெரிக்காவே இந்த விஷயத்தில் என்ன செய்வ தென்று அறியாது விழிக்கிறது என்கிறார்கள். கடலில் கொட்டுகிறார்களாம். நமது வங்கக்கடலில்கூட அமெரிக்கக் கப்பல்கள் வந்து அணுக்கழிவைக் கொட்டிவிட்டுப் போவதாகக் கேள்வி. இந்தியாவின் கழிவு வெளியேற்றத் திட்டம் என்ன?

அணுஉலைகள் பயன்படுவது என்னமோ நாற்பது ஐம்பது வருடங்கள்தான். ஆனால் இருபதாயிரம் ஆண்டுகளுக்கு கதிரியக்க வீச்சு இருந்துகொண்டே இருக்கும். நமக்கு இன்றைக்கு மின்சாரம் தேவை என்பதற்காக இருபதாயிராம் வருடங்களுக்கு நம் தலைமுறைகளை பாதிக்கலாமா? இதுவும் தமிழர்களை அழிக்கும் திட்டத்தின் ஒரு பகுதியா?

5. இந்த உலைகளிலிருந்து வெளிப்படும் கதிர்வீச்சின் அளவு என்னவாக இருக்கும்?

இவற்றையெல்லாம் சொல்லமாட்டார்களாம். இவையெல்லாம் இராணுவ ரகசியங்களாம். உலைகள் இயங்க ஆரம்பித்தால் அவை இராணுவத்துறை/ பாதுகாப்புத் துறையின் கீழ் வந்துவிடும். அவர்கள் தான் கதிர்வீச்சின் அளவை அளக்கவேண்டும். மாநில அரசுக்குக்கூட அந்த அதிகாரம் கிடையாது. யாரும் கதிர்வீச்சு அளக்கும் எந்தக் கருவியையும் கூடங்குளத்தின் அருகே கொண்டுசெல்லக்கூட முடியாது. அவர்கள் சொல்வதை நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும். அவ்வளவுதான்.

# 8. தறிகெட்ட கிரிக்கெட்

இதோ இன்று தமிழ்ப்புத்தாண்டுக் காலையில் எழுந்தது முதலாக (15-04-2013) காதில் தொலைக்காட்சியிலிருந்து ஒரு பெரிய ஆரவாரம் காதில் விழுந்துகொண்டிருக்கிறது. ஐபிஎல் கிரிக்கெட்! இதன் பின்னணியிலிருக்கும் அரசியல், அண்மையில் இதற்கு ஏற்பட்ட எதிர்ப்பு ஆகியவற்றை விட்டுவிடுங்கள். இரண்டு மூன்று நிமிடங்களுக்கு ஒரு முறை தொலைக்காட்சியிலிருந்து வரும் ஆரவார ஒலி பெரிய அருவருப்பை ஏற்படுத்துகிறது. எதற்குக் கத்துகிறார்கள் இந்த மக்கள்? நம் எதிர்காலப் பிரச்சினைகள் என்ன என்பதை இவர்கள் சற்றேனும் அறிவார்களா? என்ன நேரப்போகிறது இந்த நாட்டுக்கு என்பதில் துளியும் அக்கறை கொண்டவர்களா இவர்கள்?

ஆங்கில நாட்டில் இந்த விளையாட்டு நானூறு ஆண்டுகளுக்கு முன்பு, ஏறத்தாழ 1598 அளவில் தோன்றியதாகச் சொல்லப்படுகிறது. அக்காலத்தில் பிரபுக்கள் (லார்ட்ஸ்) என்றழைக்கப்பட்ட மேன்மக்களான ஆங்கிலப் பிரபுக்கள் தங்கள் உடல்மீது சூரியஒளி படும் விதமாகவும் காலார நடந்து தங்களுக்குச் சிறிய அளவிலான உடற்பயிற்சி ஏற்படுத்திக்கொள்ளும் விதமாகவும் உருவாக்கிய ஒரு விளையாட்டுதான் கிரிக்கெட். அந்த நாட்டிலும் மேன்மக்களின்

விளையாட்டாக இது இருந்ததே ஒழிய சுரங்கங்களில் பணிசெய்கின்ற, தொழிற்சாலைகளில் பணி புரிகின்ற தொழிலாளிகள், விவசாயிகள் ஆகியோரின் விளையாட்டாக இது ஒருபோதும் இருந்ததில்லை. இப்படிச் சோம்பேறித்தனமாகத் தங்கள் உடலை வளர்க்க வேண்டிய கஷ்டம் அந்த நாட்டு உழைப்பாளிகளுக்கே இல்லை. அதனால்தான் போலும், இந்த விளையாட்டை விளையாடுகின்ற மைதானத்துக்குக்கூட லார்ட்ஸ் என்றே பெயர் வைத்தார்கள் இங்கிலாந்தில்!

இங்கிலாந்து தன் ஆட்சிக்குட்படுத்திய காலனிநாடுகளை விட்டு வெளியேறிய போது அவர்களைச் சீரழிக்கின்ற பொதுச் சொத்து- 'காமன்வெல்த்'து-களில் ஒன்றாக இதைக் கொடையாக அளித்துச் சென்றது. (இந்தக் காமன் வெல்த்து பற்றியும் நாம் விரிவாகப் பேசவேண்டிய தேவை இருக்கிறது!) காமன்வெல்த்-ஆகத் தம்மைக் கருதிக் கொண்ட ஏழெட்டு நாடுகளே இதில் முதலில் ஈடுபட்டன. நம் நாட்டிலும் முதலில் இதை ரஞ்சித் சிங் போன்ற அரசர்களும் பட்டோடி நவாப் போன்ற பெரும் பணக்காரர்களும் ஓய்வாகப் பொழுதைச் செலவிட்டே பிறரைச் சீரழிப்பதில் வல்லவர்களான மேட்டுக்குடிச் சாதியினரும்தான் இந்த ஆட்டத்தில் ஈடுபட்டனர். (இந்தியாவின் கிரிக்கெட் குழுவில் தமிழ்நாட்டின் ஓரிரு பிராமணர்கள் மட்டுமே இந்த ஆட்டத்தில்-அதுவும் பிற்காலத்தில்தான், பங்கேற்றனர். பொதுவாகத் தமிழ்நாட்டுக்கு இதில்

இடமளிக்கப்பட்டதே இல்லை.) உண்மையில் ஆங்கிலநாட்டிற்கு அடிமைத் தனத்தை மறைமுகமாக உருவாக்கமுயன்ற பிரிட்டிஷ்காரர்களின் கொடைதான் இந்த விளையாட்டு.

காமன்வெல்த் நாடுகளைத் தவிரப் பிற நாடுகள் எதுவும் (அமெரிக்கா, ஜப்பான், ஜெர்மனி போன்றவை....) இந்த விளையாட்டில் ஆர்வம் காட்டியதில்லை. இந்தியாவில், அறுபதுகளில் அப்போது அரசாங்க வேலையிலிருந்த மேட்டுக்குடிப் பெருமக்கள் காதுகளிலே வானொலிப்பெட்டிகளை வைத்தவாறு தங்கள் அலுவல்களைப் புறக்கணித்துவிட்டு கிரிக்கெட் காமெண்டரிகளைக் கேட்டுக்கொண்டிருந்தது சர்வசாதாரணம். நிரூபணம் வேண்டுமானால் அக்கால ஆனந்தவிகடன் கல்கி குமுதம் போன்ற பத்திரிகைகளில் இதைப்பற்றிய நகைச்சுவைத் துணுக்குகளையும் கருத்துப் படங்களையும் பார்த்துக்கொள்ளுங்கள். அரசாங்க அலுவலகங்களில் ஊழலும் லஞ்சமும் பெருகுவதற்கு கிரிக்கெட் அந்தக் காலத்தில் ஒரு முக்கியக் காரணம்.

1960களில் நாங்கள் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் வெளியான 'அன்பே வா' என்ற திரைப்படத்தில் (எம்.ஜி.ஆர். நடித்தது) கல்லூரி மாணவர்கள் பாடுவதாக ஒரு பாட்டு வரும். அதன் இரண்டு அடிகள்:

ட்விஸ்ட் டான்ஸ் தெரியுமா?

டெஸ்ட் மாட்ச் புரியுமா?

கதாநாயகன் தனக்கும் இவை தெரியும் என்று காட்டி அந்தக் கல்லூரி மாணவர்கள் ஆதரவைப் பெற்றுவிடுகிறாராம். அந்தக் கால மேட்டுக்குடி மனப்பான்மையை விளக்க இதைவிடச் சான்று தேவையில்லை. டெஸ்ட் மாட்ச் விளையாடாவிட்டாலும் பரவாயில்லை, அது புரியவாவது வேண்டும்!

தொலைக்காட்சி வந்தபிறகுதான் இதன் சீரழிவு அதிகமாயிற்று. ஒருபுறம் தனக்குள் ஊழல்மிக்க ஒரு அமைப்பாக கிரிக்கெட் வாரியம், அதன் தேர்வுகள், அதன் வரவு செலவுகள் அதன் அரசியல் குழுமனப்பான்மைகள் போன்றவை அமைந்தன. (இன்றைக்குச் சர்வதேச கிரிக்கெட் வாரியமே புறக்கணிக்கும் அளவுக்கு இதன் ஊழல் சொல்லத் தகாததாக இருக்கிறது, ஆனால் அதைப்பற்றியெல்லாம் நமது கிரிக்கெட் வாரியங்களும் வீரர்களும் கவலைப்படுவதில்லை. துடைத்துப்போட்டுவிட்டு சொத்துச் சேர்ப்பது சர்வசாதாரணம்.) இன்னொருபுறம் எந்த வேலையுமற்று தன்னைப் பார்க்கக் கூடுகின்ற ஒரு வெட்டிக் கும்பலை இது உருவாக்கிற்று. முன்பெல்லாம் பெருநகரங்களில் வேலையற்றுத்திரிந்த ஒரு பணக்காரக் கும்பல்தான் அதிக விலைகொடுத்துச் சீட்டுகளை வாங்கி இந்த விளையாட்டைப் பார்க்க முடிந்தது. தொலைக்காட்சி வந்த பிறகு ஒவ்வொரு வீட்டிலும் ஒரு

சோம்பேறிக்கும்பல் இதைப் பார்க்க உருவாகி விட்டது. எவ்வளவு கால விரயம்! சக்தி விரயம்! பணவிரயம்!

இதில் எவ்வளவு பணம் புழங்குகிறது என்பதற்கு ஒரு சிறிய எடுத்துக்காட்டு. கல்கத்தாவின் ஈடன் கார்டன் மைதானம் மிகப்பெரியது. அறுபதுகளிலேயே அதில் ஒரு லட்சம் பேர் அமர்ந்து கிரிக்கெட்டைப் பார்த்ததாக ஒரு விமரிசகர் எழுதியிருக்கிறார். சராசரியாக ஒரு டிக்கட் ஆயிரம் ரூபாய் என்றாலும் ஒரு நாள் விளையாட்டின் வருமானம் ஆயிரம் x ஒரு லட்சம் = பத்துகோடி ரூபாய். எவ்வளவு ஊழல் இதில் நிகழும் என்பதைச் சொல்லவேண்டிய தேவையே இல்லை.

நாம் கவலைப்படுவது இவ்வளவு பணம் கொடுத்து விளையாட்டைப் பார்க்க வரும் பணக்காரக் கும்பலைப் பற்றிக்கூட அல்ல, (விளையாட்டை அவர்கள் பார்க்க வருவதைவிட விளையாட்டு வீரர்களின் சேட்டைகளையும் போஸ் கொடுத்தல்களையும் நடிப்பையும் பார்க்கத்தான் வருகிறார்கள்!) இது கிராமப் புறங்களிலெல்லாம் புகுந்து நம் பழைய நாடகம் போன்ற கலைகளையும் பழைய வீர விளையாட்டுகளையும் அழித்துவிட்டது. இந்தியாவின் எல்லா இடங்களிலும் இருந்த தேசிய, கிராமப்புறப் பொழுதுபோக்கு விளையாட்டுக் கலைகளெல்லாம் கிரிக்கெட்டினால் அழிந்தன. கிராமப்புறப் பையன்களெல்லாம் நான்கு குச்சிகளையும்

மட்டைகளையும் தேடி அலையலானார்கள். தமிழ்நாட்டின் சிலம்பாட்டம், சடுகுடு போன்ற விளையாட்டுகள் போன இடம் தெரியவில்லை.

இது ஒருபுறமிருக்க, இந்தியாவில் வேறு எந்தஒரு சர்வதேச விளையாட்டுமே-டென்னிஸ் ஹாக்கி கால்பந்து கைப்பந்து போன்றவை எதுவுமே வளராமல் செய்த பெருமை கிரிக்கெட்டுக்கே உரியது என்பதை எல்லோரும் அறிவார்கள். இந்திய அரசாங்கம் தன் மக்களைக் கெடுக்கக்கூடிய, முட்டாளாக்கக்கூடிய எந்தச் சக்திக்கும் ஆதரவு அளிக்கக்கூடியது, பணம் வரக்கூடிய எதையும் ஏற்றுக்கொள்ளக்கூடியது என்பதால் இதற்குமட்டுமே பணத்தைக் கொட்டிக் கொட்டிச் செலவுசெய்தது. மற்ற விளையாட்டுகளை அறவே கைவிட்டது.

இவ்வளவு விஷயத்துக்கும் காரணமில்லாமல் இல்லை. கிரிக்கெட் அடிப்படையில் சினிமாவின் குணங்களைக் கொண்டது. கவர்ச்சியான தொடக்கம், வளர்ச்சி, முடிவு, சஸ்பென்ஸ் போன்ற விஷயங்களில் பலசமயங்களில் திரைப்படங்களையும் விஞ்சக்கூடியது. இந்த விளையாட்டின் நிச்சயமின்மைதான் இதன் கவர்ச்சிக்கு ஆதாரம். எந்தக் கணத்திலும் எதுவும் நிகழலாம். இன்னும் இருபது பந்துகள் தான் இருக்கின்றன, இருபது ரன் எடுத்தாக வேண்டுமென்றால் மட்டைக்காரர் எடுப்பாரா மாட்டாரா என்று யாருக்கும் தெரியாது.

மிகப் பெரிய சஸ்பென்ஸ்! ஒரேயடியாகப் பத்து ஆட்டங்கள் கட்டையைப் போட்டு அவர் அவுட்டானாலும் ஆகலாம், ஒரே அடியில் சிக்ஸர் அடித்து வெற்றி பெற்றாலும் பெறலாம். இப்போது குளோசப் கேமிராக்கள் வந்தபிறகு, மூன்றாம் அம்பயர் வந்த பிறகு எல்பிடபிள்யூ என்பது மதிப்பில்லாமல் போய்விட்டது. கி.பி.2000வரை, இந்த எல்பிடபிள்யூவுக்குத்தான் எத்தனை புகழ்!

இதனால் இதில் ஈடுபட்ட நம் மக்கள் அறவே தங்கள் கலாச்சாரத்தை மறக்க முடிந்தது. எப்படித் திரைப்பட நட்சத்திரங்கள் உருவானார்களோ அதுபோல கிரிக்கெட் நட்சத்திரங்களும் உருவானார்கள். திரைப்படங்களைப் பற்றிய வெட்டிக் கதைகள் பரவுவதைப்போலவே கிரிக்கெட் நட்சத்திரங்களைப் பற்றிய வெட்டிக் கதைகளைப் பேசுவதிலும் எவ்வளவு ஆர்வம்!

சுருக்கமாகச் சொன்னால், நம் மக்களை கிரிக்கெட் தொடர்ந்து முட்டாளாக்குகிறது; லஞ்சம் ஊழலின் பிறப்பிடமாகவும் வளர்ப்பிடமாகவும் இருக்கிறது; நட்சத்திரத் தன்மையை உருவாக்குகிறது; பிற விளையாட்டுகளை வளரவிடாமல் முடமாக்குகிறது; கிராமப்புறக் கலைகளை அழித்துவிட்டது; இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம்.

இன்னும் இதைப்பற்றி மிக விரிவாக எழுத எவ்வளவோ இருக்கிறது. சுருக்கமாகச் சொன்னால்,

கிரிக்கெட்டைக் கைவிட்டால், இந்தியா ஒலிம்பிக்கில் பிற விளையாட்டுகளில் மேம்பட்டுச் சிறப்படைய முடியும்,

நம் நாட்டுப்புறக் கலைகளும் விளையாட்டுகளும் மேம்படும்,

ஆங்கிலச் சீமான்களுக்காக உருவாக்கிய வெட்டிப் பொழுதுபோக்கு மறையும், ஜனநாயகத் தன்மை மலரும்.

ஜனநாயகத்துக்கு ஒவ்வாத தலைமை வழிபாட்டையும் நட்சத்திர வழிபாட்டையும் உருவாக்கி ஒரு சிலரைக் கோடீஸ்வரர்களாகவும் தலைவர்களாகவும் ஆக்கி விடுவது இந்த விளையாட்டின் குணம். (உதாரணத்திற்கு சச்சின் டெண்டுல்கர் பம்பாயில் கட்டியிருக்கின்ற ஆயிரம் கோடி ரூபாய் மதிப்புள்ள பங்களாவை (இணைய தளங்களில் எளிதில் பார்க்கமுடியும்) பார்த்துக்கொள்ளுங்கள். இவ்வளவு சொத்து சேர்ப்பதற்கும், மரியாதைக்கும் அவர் இந்திய நாட்டிற்குச் செய்த 'சேவை' என்ன? சர்வதேச விளையாட்டுகளில் இந்தியா ஒரு சிறிய இடத்தையாவது பிடிக்க உதவியிருக்கிறாரா? பிறருக்கு விளையாட்டுப் பயிற்சியையேனும் அளித்திருக்கிறாரா? தன் சொந்தப் புகழை, சொத்தை வளர்த்துக்கொண்டதைத் தவிர அவர் செய்த மகத்தான சேவை என்ன?)

கிரிக்கெட் உடல்வளத்தையோ மனவளத்தையோ மேம்படுத்தும் விளையாட்டும் அல்ல. ஓர் ஆட்டத்தில் ஒரு பவுண்டரி

அடித்துவிட்டுப் பத்து ஆட்டங்கள் தன் கையையும் காலையும் ஆட்டியவாறு, போஸ்கொடுத்தவாறு நின்றுகொண்டிருக்கும் அசாதாரணத் தன்மையை இதில்தான் பார்க்கமுடியும். தனிமனித மனப்பான்மையையும் ஊழலையும் வளர்க்கின்ற ஜனநாயகத்திற்கு எதிரான சாதனம் இது என்பதுதான் நம் முதல் குற்றச்சாட்டு. இதைத் தடைசெய்தால், அல்லது இதைப்பற்றி நம் மக்கள் ஒழுங்காகச் சிந்திக்க முடிந்தால்,

பதினொரு சோம்பேறிகளின் வெட்டித்தனத்தில் மகிழ்ச்சிகொள்ளும் கைதட்டும் ஆரவாரம் செய்யும் பதினொருகோடிச் சோம்பேறிகளின் வாழ்க்கை மேம்படும். (இதைத்தான் அந்தக் காலத்திலேயே ஐரிஷ் நாடகாசிரியரான பெர்னார்ட் ஷா வேறுவிதமாகச் சொன்னார்!) தமிழர்களுக்குச் சுரணை இருந்தால், இந்தக் காட்டு மிராண்டித்தனமான விளையாட்டை அறவே புறக்கணித்து நம் நாட்டுக்குரிய விளையாட்டுகள், கலைகளில் ஈடுபடுங்கள். அல்லது வேறு பயனுள்ள வேலைகளில் பொழுதைச் செலவிடுங்கள்.

# 9. அறிவைத் தடுக்கும் மதங்கள்!

ஏறத்தாழப் பதினைந்து ஆண்டுகள் இருக்கலாம். ஏதோ காரணத்திற்காகக் கல்கத்தா பல்கலைக் கழகத்திற்குச் சென்றிருந்தேன். அப்போது அங்கே ஒரு நிகழ்ச்சி. (வங்காள மொழி நமக்கு என்ன புரிகிறது?) மதம் சார்ந்ததா, இலக்கியம் சார்ந்ததா என்று நினைவில்லை. அதற்கு பூரி சங்கராச்சாரியார் அழைக்கப்பட்டிருந்தார். பெரிய கூடத்தின் அலங்கரிக்கப்பட்ட மேடை. நிகழ்ச்சியின் தொடக்கத்தில் பெண்கள் சிலர் சாமவேதப்பாடல்களைப் பாடினார்கள். வந்ததே கோபம் சங்கராச்சாரியாருக்கு! பெண்கள் எப்படி வேதத்தைப் பயிலலாம், பாடலாம் என்று மிகக் காட்டமாக உரையாற்றத் தொடங்கிவிட்டார். பெண்கள் வேதத்தைப் பயின்றதால் தான் நாடே அழிவு நிலையை எய்திவிட்டது என்றும் தீர்ப்பு வழங்கிவிட்டார்.

கல்கியின் பொன்னியின் செல்வன் நாவலில் ஒரு நிகழ்ச்சி. ஆழ்வார்க்கடி யான் என்று ஒரு வைணவன். (வைணவர்கள், முஸ்லிம்களைப் போலவே "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்று பெயர்பெற்றவர்கள்.) அவன் திருவானைக்கா சிவன் கோயில் மதிலோரம் நடந்துகொண்டிருந்தபோது, ஒரு செங்கல் துண்டு அவன் தலையில் விழுந்து அடிபடுகிறது. நிமிர்ந்து பார்த்தால் ஒரு காக்கை

அதை மதில்மேலிருந்து தள்ளியிருக்கிறது. உடனே அவன், "ஓ ஸ்ரீவைஷ்ணவக் காக்கையே, சிவன் கோயில் மதிலை இடித்துத் தள்ளுகிறாயா? செய்" என்று அதைப் பாராட்டுகிறான்.

மதம் மனிதனை வாழ்விக்க வந்தது, மனிதனுக்கு வழிகாட்ட வந்தது என்று பலரும் சொல்கிறார்கள். ஆனால் வரலாற்றில் மத அடிப்படையிலான போர்கள் மட்டுமல்ல, தடைகளும், ஒடுக்குதல்களும் ஏராளம், ஏராளம். வேறு விஷயங்களுக்காக உயிரிழந்த, வாழ்விழந்த மனிதர்களைவிட மதத்தினால் உயிரிழந்தவர்கள், வாழ்க்கையிழந்தவர்கள்தான் அதிகம். மதங்கள் அறிவை முக்கியமாகத் தடைசெய்யும் சக்திகளாக உள்ளன. இதற்குப் பிரமாதமான உதாரணங்கள் தேவையில்லை. நம் இந்தியாவிலேயே, முன் கூறிய உதாரணப்படி, வேதங்கள் பிராமணர்கள் மட்டுமே படிப்பதற்குரியவை, பெண்களும் (பிராமணப் பெண்கள் உட்பட), பிற எந்தச் சாதியினரும் அவற்றைப் படிக்கலாகாது என்ற தடை இருந்தது. (இன்னும் இருக்கிறது!)

பழங்காலத்தில் கிறித்துவ மதத்தில் மதக்கொள்கைகளை மீறியவர்களாகக் கருதப்பட்டவர்களை மதவிசாரணைக்கு (இன்க்விசிஷன்) உட்படுத்தி அவர்களைக் கம்பத்தில் கட்டி உயிரோடு எரித்தார்கள் (Burning at stake).. அதை நினைவூட்டும் விதமாக 1986இல் டெஹ்ரானிலிருந்து வெளியிடப்பட்ட ஃபத்வா (பார்த்த

இடத்தில் தலையை வெட்டும் ஆணை), உலகத்தையே அதிர்ச்சியுறச் செய்தது. சல்மான் ருஷ்தீ எழுதிய 'சாத்தானின் செய்யுள்கள்' என்ற நாவலுக்காக அவருக்கு விதிக்கப்பட்ட தண்டனை அது. இருபதாம் நூற்றாண்டிலும் காட்டுமிரண்டித்தனமான வாழ்க்கையைத்தான் வாழ்கிறோம் என்பதைத்தான் இது காட்டுகிறது. இன்றும் நம் நாட்டிலும், "இந்தத் திரைப்படத்தைத் தடை செய்", "இந்த நூலைத் தடைசெய்" என்று மதவாதிகள் மத்திய, மாநில அரசாங்கங்களை அவ்வப்போது எதிர்த்துப் போராடும் காட்சிகளைப் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறோம். மத அடிப்படைவாதிகள் என்றைக்குத் தான், எங்கேதான் இல்லை?

இவ்வாறு தடைசெய்பவர்களும் தடைசெய்ய வேண்டுபவர்களும் மற்றவர்களுக்கும் அறிவு இருக்கிறது என்பதை மறந்துவிடுகிறார்கள். அல்லது தங்கள் பலவீனம் மற்றவர்களுக்குத் தெரிந்துவிடக்கூடாது என்றோ, மற்றவர்கள் தங்களை எதுவும் செய்யக்கூடாது என்றோ பயப்படுகிறார்கள்.

கிறித்துவ அடிப்படைவாதத்தின் வரலாறு கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலிருந்தே தொடங்குகிறது. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எபீசஸ் கவுன்சில் என்ற அமைப்பு, மூடநம்பிக்கைக்குரிய நூல்கள் என்று கருதியவற்றையும், புனித பவுலின் வரலாற்றையும் (Acta Pauli) தடைசெய்தது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் போப் ஆண்டவர்,

முதன்முதலாகத் திருச்சபையினால் தடைசெய்யப்பட்ட நூல்களின் பட்டியலை வெளியிட்டார். கி.பி.1450இல் அச்சியந்திரம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு, அதிகாரபூர்வமற்ற பைபிள் மொழிபெயர்ப்புகளும் மதநூல்களும் பெருகிய காரணத்தால், திருச்சபையின் தடைசெய்யும் பணியும் அதிகமாகியது. கி.பி.1559இல் போப் நான்காம் பவுல், Index Liborum prohibitorum (தடைசெய்யப்பட்ட நூல்களின் பட்டியல்) என்பதை வெளியிட்டார். இதைத் தொடர்ந்து பிரான்ஸ், ஸ்பெயின் போன்று அந்தந்த நாடுகளும் தங்கள் தங்கள் தடைப்பட்டியல்களை வெளியிட்டன. பதினாறாம் நூற்றாண்டு முதலாக சீர்திருத்தக் கிறித்துவம் பரவத் தொடங்கிய நிலையில், அவர்கள் கத்தோலிக்க நூல்களைத் தடைசெய்தார்கள்.

பழங்காலத்திலிருந்தே மதமும் அரசியலும் ஒன்றோடொன்று பிணைந்தவை. அந்தந்த அரசாங்கம் கடைப்பிடித்த மதத்தில் நம்பிக்கையற்ற ஒருவன், நாட்டிற்கும் சதிகாரன், எதிரி என்று கருதப்பட்டான். தமிழ்நாட்டில் கூட, மதச் சண்டைகளின் எதிரொலிகளைப் பார்க்கிறோம். சமணர்கள், பௌத்தர்கள் போன்றவர்கள் அறிவுசார் மதம் சார்ந்தவர்கள். பக்தி விசுவாசம் போன்றவை அவர்களுக்குக் கிடையாது. பக்தி சார்ந்த சைவம், வைணவ மதங்கள் இந்த மதங்களை எதிர்த்து அவற்றை வேரறுத்ததையும் காண்கிறோம். வைணவர்கள் தங்கள்

நிறுவனங்களில் சைவநூல்களை அனுமதித்ததில்லை. சைவர்கள் தங்கள் மடங்களில் வைணவ நூல்களை வைத்ததில்லை. இருவருமே புறச்சமய (சமண, பௌத்த) நூல்களைத் தங்கள் நூல்களில் சேர்த்ததில்லை. இப்படியே மதப்போரில் தமிழ் நூல்கள் பெரும்பாலானவை ஒழிந்தன.

தமிழ்நாட்டில் ஏறத்தாழப் பத்துப் பன்னிரண்டு நூற்றாண்டுகள் முன்பு வழங்கிய பலவேறு மதங்களின் கொள்கைகளின் பெரும்பகுதியை நீலகேசி என்ற சமணநூல் (குறிப்பாக வாமனர் எழுதிய அதன் உரை) கொண்டுதான் அறிந்து கொள்ள முடிகிறது. உலகாயதம் உட்படப் பலவேறு மதங்களின் கொள்கைகளை அது குறிப்பிட்டு அதற்கு எதிர்வாதங்களை நீலகேசி என்ற பெண்துறவியின் வாயிலாக முன்வைக்கிறது. அது குறிப்பிடும் அநேக நூல்கள் அழிந்து போனவை, இனி கண்டுபிடித்து அச்சிட இயலாதவை.

பதினெட்டாம் நூற்றாண்டளவில், ஐரோப்பாவில் தொடர்புச் சாதனங்கள் பெருகிய நிலையில் வெளியில் புலப்படா (அண்டர்கிரவுண்ட்) நூல்களின் பதிப்புகளும் பெருகின. அவற்றில்தான் நவீனக் கருத்துகளும் வெளியிடப்பட்டன. எனவே, (அந்தக் காலத்தில்) "அண்டர்கிரவுண்ட் நூல்களை படிக்காதவர்கள்- அரசாங்கத்தின் ஒப்புதல் பெற்ற நூல்களை மட்டுமே படித்தவர்கள்-

அறிவில் ஒரு நூற்றாண்டு பின்தங்கியவர்கள்" என்று நூலாசிரியர் ஒருவர் குறிப்பிடுகிறார்.

திருச்சபை 1559இல் வெளியிட்ட தடைசெய்யப்பட்ட நூல்களின் பட்டியல், நான்கு நூற்றாண்டுகள் கழித்து 1966இல் நீக்கப்பட்டது. அதற்குள் நிகழ்ந்த அரசியல் மாற்றங்களின் காரணமாக, கத்தோலிக்கத் திருச்சபைக்கு அத்தடையை நிலைநிறுத்தும் வலிமையும் வசதியும் இல்லை, அந்த நூல்களில் பலவும் காலத்திற்கு ஒவ்வாத வையாகவும் ஆயின. ஆனால் அப்பட்டியல் காலந்தோறும் புதுப்பிக்கப்பட்டு வந்தது என்பதில் ஐயமில்லை. கத்தோலிக்கத் திருச்சபையினால் தடைசெய்யப்பட்ட நூல்களில், கார்ல் மார்க்ஸின் நூல்கள் மட்டுமல்ல, பெந்த்தாம், பெர்க்சன், காம்டி, டீஃபோ, டே கார்ட்டே, டிடரோ, ஃப்ளாபேர், கிப்பன், ஹாப்ஸ், ஹ்யூம், காண்ட், ஜான் லாக், மொண்டேய்ன், மில், மாண்டெஸ்க்யூ, பாஸ்கல், ரூஸோ, சேண்ட், ஸ்பினோசா, ஸ்டெந்தால், வால்டேர், ஜோலா போன்ற அறிஞர்களின் நூல்களும் அடக்கம். (இவர்களில் பெரும்பாலோர் தத்துவ அறிஞர்கள், பலர் அரசியல் அறிஞர்கள், இலக்கியவாதிகள்).

அமெரிக்காவில்கூட, அந்தந்த மாநிலங்கள் தங்கள் தங்கள் தடைக் கொள்கைகளைப் பின்பற்றித்தான் வந்திருக்கின்றன. பொதுவாக அமெரிக்க அரசியலமைப்பு மத அடிப்படையில் நூல்களைத் தடைசெய்வது கூடாது என்று சொல்கிறது. மிகவும் புகழ்பெற்ற

ரௌலிங் எழுதிய **ஹேரி பாட்டர்** நூல்கள்கூட இன்றும் சில மாநிலங்களில் தடைசெய்யப்பட்டிருக்கின்றன. அதேபோல ரோல்டு டால் எழுதிய **தி விட்சஸ்** போன்ற நூல்களும். இவற்றைத் தடைசெய்யக் காரணம், இவை மதத்திற்குப் புறம்பான சூனியக்காரர்கள், மந்திரவாதிகள், அவர்களின் செயல்முறைகள் பற்றிப் பேசுகின்றன.

நம் நாட்டிலும் தஸ்லிமா நஸ்ரீன் தலையை வாங்கவேண்டுமென்ற வேண்டுகோள் முஸ்லிம்களால் எழுப்பப்பட்டது. இவர் வங்காளதேசத்தைச் சேர்ந்தவர். இந்தியாவில் ஒரு பாபர் மசூதி இடிக்கப்பட்டதுபோல, வங்காள தேசத்தில், அது சுதந்திரம் பெற்ற பிறகு, ஆயிரக்கணக்கான இந்துக்கோயில்கள் இடிக்கப்பட்டதையும், இந்துக் குடும்பங்கள் பாதுகாப்பற்று அழிவுக்குள்ளானதையும் அவர் தமது **லஜ்ஜா** என்ற நாவலில் சுட்டிக்காட்டியிருந்தார். நாடு கடத்தப்பட்ட அவர் ஸ்வீடனுக்குச் சென்றார். இப்போது மேற்குவங்க மாநிலம் அவரை அனுமதிக்காததால் தில்லியில் வாழ்கிறார் என்று நினைக்கிறேன். இதேபோல ஈரானியப் பெண் நாவலாசிரியர் ஷார்னுஷ் பார்சிபூர் பலமுறை சிறையிடப்பட்டார், மிரட்டப்பட்டார், கடைசியில் நாட்டைவிட்டே வெளியேறினார்.

1979இல் ஈரானில் இஸ்லாமியப் புரட்சி தோன்றியபிறகு, ஆயிரக்கணக்கான எழுத்தாளர்கள், அறிஞர்கள், பத்திரிகைக்காரர்கள்

சிறையிடப்பட்டிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கானோர் படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். 1990களில், எகிப்திய நாவலாசிரியர் ஃபராக் ஃபவுதா, அல்ஜீரிய நாவலாசியரும் பத்திரிகையாளருமான தாஹர் ஜெளத் ஆகியோர் மத அடிப்படைவாதிகளால் கொல்லப்பட்டனர். 1994இல் எகிப்திய எழுத்தாளர் நக்வீப் மகபூஸ் (நோபல் பரிசு பெற்றவர்) கத்தியால் குத்தப்பட்டு மிகமோசமாக உடல்நலம் பாதிக்கப்பட்டார். எகிப்திய நாவலாசிரியர் அலா ஹமீத் மதத்திற்கு எதிரானவர் என்று சிறையிடப்பட்டார். எகிப்தின் நவால் எல் சாத்வி, மொராக்கோவின் ஃபாதிமா மெர்னீசி போன்ற பெண் எழுத்தாளர்கள் பெண்களை ஒடுக்கும் இஸ்லாமியக் கொள்கைகளைக் கேள்விகேட்டதால் அரசாங்கத்தின் கோபத்திற்கும் அடிப்படைவாதிகளின் கோபத்திற்கும் ஆளானார்கள்.

2005இல் ஈரானில் மட்டுமல்ல, லெபனான், பாகிஸ்தான், எகிப்து, இந்தியாவின் சில மாநிலங்கள் போன்றவற்றில் டான் பிரவுன் எழுதிய **டாவின்சி கோட்** போன்ற பெருவிற்பனை நூல்களும் தடைசெய்யப்பட்டன. 2007-2008இல் புல்மன் எழுதிய அதீதகற்பனை முக்கதை (ஃபேண்டஸி டிரைலஜி) கிளாஸ் காம்பஸ், சடில் நைஃப், ஆம்பர் ஸ்பைகிளாஸ் ஆகியவையும் தடை செய்யப்பட்டன. இத்தனைக்கும் இவை அனைத்தும் இலக்கியப் பரிசுகள் பெற்றவை.

இங்கு உதாரணமாகச் சொல்லப்பட்டவை யாவும், பற்பல நூற்றாண்டுகளாக, உலக முழுவதும் மதங்களால் நிகழ்ந்துவரும் அறிவுத்தடையை எடுத்துக் காட்டுவதற்குத்தான், ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு பருக்கை என்ற அளவில் மட்டுமே. காலங்காலமாகத் தடைசெய்யப்பட்டுக் கிடைக்காமல் போனவற்றில் தத்துவ நூல்கள், அரசியல் நூல்கள், நாவல்கள் போன்ற எத்தனையோ.
அமெரிக்காவின் சில மாநிலங்களில் சார்லஸ் டிக்கன்ஸ் எழுதிய **ஆலிவர் ட்விஸ்ட்** போன்ற நாவல்கள் கூடத் தடைக்குள்ளாயின என்பது வியப்புதான்.

தடை செய்யப்பட்டவற்றில் அறிவியல் நூல்களும் அடக்கம் என்பது வேடிக்கையானது. உதாரணமாக, கெப்லர் போன்றவர்களின் வானியல் நூல்கள் தடைக்குள்ளாயின. கியோர்தானோ புரூனோ என்ற வானியல் அறிஞர் உயிருடன் கம்பத்தில் கட்டி எரிக்கப்பட்டார். கலீலியோ கலீலி (தொலைநோக்கியைக் கண்டுபிடித்த இத்தாலிய விஞ்ஞானி) உலகம் உருண்டை என்று கூறியதால் அவர் நூல்கள் தடைசெய்யப்பட்டன. அவர் போப்பாண்டவரிடம் தாம் எழுதியவை அனைத்தும் தவறு என்று மன்னிப்புக் கேட்குமாறு ஆணையிடப்பட்டது. (இத்தனைக்கும் போப்பாண்டவர், அவருடைய இளமை நண்பர். அதனால்தான் இவ்வளவு குறைந்த தண்டனை!) கலிலியோ தாம் எழுதிய அறிவியல் கருத்துகள் அத்தனையும் தவறானவை, மதத்திற்கு மாறானவை என்று மன்னிப்புக் கேட்டபிறகு,

உடனே தமது கூண்டுக்கு அருகிலிருந்த நண்பரிடம் இரகசியமான குரலில், "ஆனால் அவைதான் உண்மை!" என்று கூறியதாகச் சொல்லப்படுகிறது. டார்வினின் பரிணாமக் கொள்கை வெளியிடப்பட்ட காலத்திலிருந்தே எல்லா மதங்களின் எதிர்ப்புக்கும் உள்ளாகியிருக்கிறது.

மதவரலாற்றாசிரியர் டேவிட் கிறிஸ்தியன் மரே என்பவர், "ஒரு கையடக்க எண்ணிக்கையிலானவர்கள், மிகப் பெரும்பான்மையோரின் கருத்துகளை எதிர்த்து அவர்களை தண்டனைக்குள்ளாக்கியதைத்தான் மதத்தின் வரலாறு காட்டுகிறது" என்று சொல்கிறார். (நம் நாட்டுத் திரைப்படத் தணிக்கைக்கும் முற்றிலும் பொருந்தும் கூற்று இது. இது பற்றித் தனியே எழுதவேண்டும்.) இவ்விதம் நோக்கும்போது எவ்வளவு எவ்வளவு அறிவுச் செல்வங்கள் சிலரால் தடைசெய்யப்பட்டு உலகிற்குக் கிடைக்காமல் போயிருக்கின்றன என்ற வருத்தம்தான் ஏற்படுகிறது.

லெவி என்ற அறிஞர் குறிப்பிடுவதுபோல, "காலம் இந்த நீதிபதிகளின் நீதியைக் கேலி செய்கிறது, மக்களின் நுண்ணுணர்வை மாற்றுகிறது." ஏரிக்கரையின் சிறிய அரிப்பிலிருந்து சிறிய தாரையாக வெளிவரத் தொடங்கிய நீர் பின்னர் பெரிய ஆறாகவே மாறிவிடுவதைப் போல, சொற்களும் சிந்தனைகளும் தணிக்கைகளையும் மீறி உலகெங்கும் பரவுகின்றன.

ருஷ்தீயின் நூலின் தடையைப் பற்றிக் கேள்விப்பட்டபோது மொராக்கோ பெண் எழுத்தாளர் நாடியா தாஜி கூறினார்: "புத்தகத்தை யாரும் கொல்ல முடியாது. அது தன்னிச்சையாக வாழ்கிறது, மறைகிறது." நூல்களிலிருந்து குரல்கள் தப்பித்து அபாய வழிகளிலும் செல்கின்றன. மோதல்கள், மாறுதல்கள், மீறல்கள், கலகங்கள் கருத்துகளில் நடைபெற்றுக்கொண்டே இருக்கின்றன. கருத்துகள் காலத்தால் மாறுதல்களுக்குட்படலாம், அவை அழிவதில்லை.

# 10. திராவிடம் பற்றிச் சிந்திப்போம்

முதன்முதலில் நான் பெங்களூர் சென்றது 1964இல். நான் பி.யூ.சி. படித்த போது. ஓர் அறிவியல் கருத்தரங்கத்திற்காக. அப்போது தி.மு.க. ஆட்சிக்கு வரவில்லை. ஆனாலும் அந்தப் பெயரைச் சொன்னாலே ஏதோ கெட்ட வார்த்தையைச் சொல்வது போலப் பார்த்தார்கள் பெங்களூரில். குறிப்பாகக் கல்லூரி, பல்கலைக்கழகம் போன்ற அமைப்புகளைச் சேர்ந்தவர்கள், கன்னடர்கள். ஆனால் கல்லூரிகளில் அப்போது தமிழ்நாட்டில் தி.மு.க. அலை வீசிக்கொண்டிருந்தது. அதனால்தான் 1967இல் மிக எளிதாக தி.மு.க. காங்கிரஸை வீழ்த்திவிட்டு ஆட்சிக்கு வந்தது.

முழு இந்தியாவிலும் தமிழ்நாட்டில்தான் திராவிடம் என்ற பெயரைத் தாங்கிய கட்சிகள் இருக்கின்றன. ஆந்திரத்தில் இல்லை, கேரளத்தில் இல்லை, கருநாடகத்திலும் இல்லை. திராவிடம் என்ற பெயரைக்கூட அங்கெல்லாம் உச்சரிக்க முடியாது, அவ்வளவு வெறுக்கிறார்கள். (உடனே யாரும் தயவுசெய்து திராவிட் என்ற குடும்பப் பெயரை எடுத்துக்காட்ட வேண்டாம், அதற்கெல்லாம் தனி வரலாறு இருக்கிறது.)

ஒருகாலத்தில், கால்டுவெல் ஆய்வுசெய்து நூல் வெளியிட்ட காலத்தில், இந்தியாவின் முதல் சுதந்திரப்போர் என்று

சொல்லப்பட்டது நிகழ்ந்த காலத்தில், உருவான கருத்துதான் திராவிடம் என்பது. அது ஒரு தனி மொழியினத்தைக் குறிக்கப்பயன்பட்டது. எந்தக் காலத்திலும் அச்சொல் ஓர் மக்கள் இனத்தையோ, நாட்டையோ, நாட்டு மக்களையோ குறிக்கப் பயன்பட்டதில்லை.

பழங்காலத்தில், தமிழ் என்ற சொல்லை உச்சரிக்க முடியாத வடநாட்டவர்கள், சமஸ்கிருத மொழியைக் கையாண்டவர்கள், தமிழை திராவிடம் என்ற சொல்லால் குறித்தார்கள். ஆங்கிலேயன் குமரி என்று உச்சரிக்க முடியாமல் காமரூன் என்று ஆக்கியமாதிரி. உதாரணமாக, தமிழ்க்குழந்தை என்று ஞானசம்பந்தரைக் குறிக்க வந்த காலடி ஆதி சங்கராச்சாரியார், சமஸ்கிருதத்தில் 'திராவிட சிசு' என்றார். ஆக தமிழனுக்கு சமஸ்கிருத மொழிக்காரன் வைத்த பெயர் திராவிடன்.

இராமசாமிப் பெரியார், காங்கிரஸிலிருந்து வெளிவந்து 1925இல் திராவிடக் கட்சியைத் தொடங்கினார். ஏறத்தாழ அது நீதிக்கட்சிதான். நீதிக்கட்சி, சாதிக்கேற்ப இட ஒதுக்கீடு கேட்க மட்டுமே வந்த கட்சி. அதற்கும் திராவிடத்திற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. ஒடுக்கப்பட்டவர்கள், ஏழைகள் முன்னேற்றத்திலும் அதற்கு அக்கறை இல்லை. அதில் இருந்தவர்கள் எல்லாம் பார்ப்பனர் அல்லாத பெருந்தனக்காரர்கள்.

திராவிடம் என்ற சொல் தமிழ்நாட்டைத்தான் குறிக்கும், திராவிடன் என்ற சொல் தமிழனைத்தான் குறிக்கும் என்றால் பெரியார் ஏன் 'திராவிடக்' கட்சி தொடங்கவேண்டும்? தமிழர் கட்சி என்றே தொடங்கியிருக்கலாமே? அண்ணாதுரை ஏன் 'திராவிட' முன்னேற்றக் கழகம் தொடங்கவேண்டும், தமிழன் முன்னேற்றக் கழகமே தொடங்கியிருக்கலாமே? (பின்னால் திராவிடம் என்ற பெயரைப் போட்டுக் கொண்ட கட்சிகளை விட்டுவிடுங்கள். பழக்கதோஷம் என்றே இப்போதைக்கு வைத்துக்கொள்வோம்.) அல்லது பெரியாருக்கு மிகப் பிடித்தமான சுயமரியாதை என்ற சொல்லை வைத்து சுயமரியாதைக் கட்சி என்றே தொடங்கியிருக்கலாமே? ஐம்பதுகள் அறுபதுகளில்கூட பெரியார்-அண்ணா கட்சிக்காரர்களை சு.ம. ஆட்கள் என்றுதான் காங்கிரஸ்காரர்கள் குறிப்பிடுவது வழக்கம்.

திராவிடம் என்ற தனிநாடோ இனமோ இல்லை என்பதால்தான் "திண்ணையில் படுத்தேனும் திராவிடநாடு வாங்குவோம்" என்று சொன்ன அண்ணாதுரையால் அந்தக் கோரிக்கையை எந்த வருத்தமும இன்றி உடனே கைவிடமுடிந்தது. திராவிடநாடு என்பது தமிழ்நாடுதான் என்பது அவருக்கு மிக நன்றாகத் தெரியும். அதைத்தான் 1956இல் (மொழிவாரி மாநிலங்கள் பிரிக்கப்பட்டபோது) வாங்கியாயிற்றே? இன்னும் எந்த திராவிட நாட்டைப் போய் வாங்குவது? பெங்களூரைக் கொடு என்றால் கன்னடர்கள் விடுவார்களா? அல்லது தமிழகத்தின் ஒருபகுதியாகவே சங்ககாலம்

முதல் இருந்த திருப்பதியைக் கொடு என்றால் ஆந்திரர்கள்தான் விட்டுவிடுவார்களா? அண்ணாதுரையின் முக்கியமான ஏமாற்று வேலை, திராவிட நாடு என்ற கட்டுக்கதை.

பெரியார், மிகவும் சூட்சுமமாகத்தான் பெயர் வைத்தார். அவருக்குத் தமிழ் மீதோ, பிற திராவிட மொழிகள்மீதோ பெரிய அபிமானம் ஒன்றும் இல்லை. தமிழ்க்கட்சி, அல்லது தமிழன் கட்சி என்று பெயர் வைத்தால், ஏ.டி. பன்னீர் செல்வம் வேண்டுமானால் அதில் சேருவார், அவர் பச்சையான தமிழர். பிட்டி தியாகராசரோ, பனகல் ராஜாவோ, டி.எம். நாயரோ அதில் சேருவார்களா? அந்தக் காலத்தில் சென்னை மாகாணம் என்று அழைக்கப்பட்டதில் இன்றுள்ள கேரளத்தின் சில பகுதிகள், கன்னட நாட்டின் மைசூர் வரையிலான பகுதிகள், ஆந்திரத்தின் சில பகுதிகள் எல்லாம் அடங்கியிருந்தன. ஆக, அங்கெல்லாம் இருந்தவர்களை ஒன்று சேர்க்கத்தான் என்று வைத்துக்கொள்வோமே, **திராவிட** என்ற சொல்லைக் கையாளவேண்டிய அவசியம் பெரியாருக்கு ஏற்பட்டது.

சரி, வைத்தது வைத்தார். இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு, மொழிவாரி மாநிலங்கள் பிரியும் நிலை ஏற்பட்ட பிறகு, மொழியுணர்வு இந்தியாவில் எங்கும் அடிநீரோட்டமாக ஆன போதாவது திராவிட என்ற சொல்லை விட்டுவிட்டு தமிழன் என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கவேண்டாமா?

அங்குதான் அண்ணாதுரையின் புத்தி மட்டுமல்ல, ம.தி.மு.க., தே.மு.தி.க. என இன்றுள்ள கட்சிகள் வரையிலும் குயுக்தி ஆட்சி செய்கிறது. தமிழகத்தில், வீட்டுக்கு வெளியே தமிழ் பேசிக்கொண்டு, ஆனால் வீட்டுக்குள் தெலுங்கோ கன்னடமோ மலையாளமோ பேசிக்கொண்டு, மக்கள் தொகைக் கணக்கெடுப்பு நடத்தவந்தாலும் தங்களைக் கன்னடர், தெலுங்கர், மலையாளி என்றே குறிப்பிட்டுக்கொண்டு வாழும் சாதிகள் அநேகம். தமிழ்நாட்டின் அசலான சாதிகளைவிட, இவர்களுக்குத்தான் பிற்பட்ட வகுப்பினருக்கான, ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கான சலுகைகளும் மிகுதியாகக் கிடைக்கின்றன என்பதைத் தமிழ்நாட்டின் மக்கள்தொகைக் கணக்கெடுப்புப் பதிவேடுகளைப் பார்ப்பவர்கள் மிக எளிதாகப் புரிந்துகொள்ளமுடியும். சென்னையில் இன்று வெளிப்படையாகவே ஆந்திரர்களின் பணமும் அதிகார பலமும்தான் ஆட்சி செய்கின்றன என்பதை மேலோட்டமாக இங்கு வந்துசெல்பவர்களும் புரிந்துகொள்ள முடியும்.

தமிழன் கட்சி என்றால் இவர்கள் யாரும் அதில் சேர மாட்டார்கள். இவர்களை ஒதுக்கவும் முடியாது. இன்றும் ஒக்கலிகர்களும், பலிஜாக்களும், நாயுடுகளும். ஊர்த்தலைவர்களாகவும் பெரும்பான்மையாகவும் இருக்கும் கிராமங்கள் ஏராளம். அதனால்தான் தமிழன் முன்னேற்றத்தைக் கைவிட்டு, இவர்கள்

எல்லோரையும் **திராவிடராக** ஒன்றுசேர்த்து முன்னேற்ற வேண்டிய கட்டாயம் பெரியாருக்கும் அண்ணாதுரைக்கும் ஏற்பட்டது.

இவர்களுக்குப் பின்னால் அண்ணா பெயரை வைத்துத் திராவிடக்கட்சி தொடங்கிய எம்.ஜி.ஆருக்கும் திராவிடத்திற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவர் இராமச்சந்திர மேனோன். கேரளாவிலிருந்து தமிழ்நாட்டு பால நாடக சபாக்களில் நடிக்க வந்து பிறகு திரைப்படத்தின் மூலமாகத் தன்னை நிலைநாட்டிக்கொண்டவர். அவருக்குப்பின் கட்சித் தலைவராக வந்தவர் தம்மைச் சட்டசபையிலேயே ஓர் உயர்ந்த சாதி என்று அறிவித்துக்கொண்டவர். பிற திராவிட என்று பெயர் சூடும் கட்சிகளின் தலைவர்களையே பாருங்கள், யார் அவர்கள், எந்தெந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பது புரியும். எதிர்க்கட்சியாக இன்று தமிழகத்தில் இருக்கும் கட்சியின் தலைவர், ஒரு திரைப்பட நடிகர், அவர் தெலுங்குபேசும் நாயுடு இனத்தவர்.

ஆக, திராவிட என்ற கட்சிச்சொல்லின் வரலாற்றைப் பார்த்தால், தமிழர்களை மேம்படுத்தாமல், தமிழ்நாட்டில் வசிக்கும், குறிப்பாக ஆதிக்கம் செய்யும், தெலுங்கு, கன்னட, மலையாள சாதிக்காரர்களை மேம்படுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட சொல் என்பது நன்றாகப் புரிகிறது. இது பிடிக்காததனால்தான் ம.பொ.சியோ, ஆதித்தனாரோ, ஏன், ஈவெராவின் உறவினரான ஈவெகி சம்பத்தோ கூட திராவிட

என்ற சொல்லைத் தங்கள் கட்சிகளுக்கு வைக்காமல் தமிழ் அல்லது தமிழர் என்ற சொல்லைச் சேர்த்துக் கட்சிப்பெயர் வைத்தார்கள். ஆனால் இன்று யாருக்கும் அந்தத் துணிச்சல் இல்லாமல் போனது தமிழனின் இளிச்சவாய்த்தனம். தமிழர்கள் தமிழ் நாட்டில் என்றைக்குமே சிறுபான்மையினராகத்தான் ஆக்கப்படுவார்கள், மதிக்கப்படுவார்கள் என்பதற்கும் அடையாளம்.

**பின்குறிப்பு**

திராவிடம் என்ற கருத்து இனி தேவையில்லை என்றும் அது பற்றிப் பேசினால் தமிழ்த் தேசியம் வளரப்போவதில்லை என்றும் நண்பர்கள் கருத்துத் தெரிவித்திருந்தார்கள். உண்மைதான். ஆனால், தமிழகத்தின் அரசியல் கட்சிகள் திராவிடம் என்ற சொல்லைச் சேர்த்துப் பெயர்வைத்துக் கொண்டு இன்றுவரை ஏமாற்றுவதனால்தான் நாம் அதைப் பற்றிப் பேசவேண்டிய நிர்ப்பந்தம் நேர்கிறது. நேற்றுத் தொடங்கிய கட்சிகூட தே.மு.தி.க. என்று பெயர்சூட்டிக்கொள்கிறது. தமிழ் நாட்டின் கட்சிகள் பெயரில் திராவிடம் எதற்கு? வேறு எந்தத் தென் மாநிலக்காரன் திராவிடன் என்று தன்னைச் சொல்லிக்கொள்கிறான்? அதனால்தான் இது ஒரு சதி என்கிற எண்ணம் எழுகிறது.

அடுத்து ஒரு நண்பர், **திராவிடம் என்ற நிலப்பரப்பு** என்று குறிப்பிட்டிருந்தார். புரிந்துகொள்ளாமையால் வந்த கருத்து இது.

திராவிடம் என்ற நிலப்பரப்பு ஒருபோதும் இருந்ததில்லை. திராவிட மொழிகளைப் பேசுவதால் திராவிடம் என்ற நிலப்பரப்பு எப்படி உருவாகும்?

உதாரணமாக, வடநாட்டு மொழிகள்-குஜராத்தி சிந்தி காஷ்மீரி முதல் வங்காளி அசாமி மராட்டி வரை ஒரே இனம் என்று ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் இவை எல்லாம் ஒரே நிலப்பரப்பு அல்லது நாடு என்றால் ஒப்புக் கொள்வார்களா?

அதேபோல, ஸ்பானிஷ், ஆங்கிலம் முதல் போலிஷ், நார்வீஜிய மொழி வரை எல்லாமே இந்தோ-ஐரோப்பிய மொழியினம்தான். அதனால் இந்தோ-ஐரோப்பா என்ற ஒரே நாடுதான் எல்லாம் என்றால் யார் ஒப்புக்கொள்வார்கள்?

மொழியினம் ஒன்றாக இருப்பதால் ஒரே நிலப்பகுதி இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. அதைவைத்து அரசியல் செய்யவேண்டிய அவசியமும் இல்லை.

# 11. தமிழ்த் தேசியம் இன்று சாத்தியமா ?

கல்லூரியில் படிக்கும் காலத்தில் (1960களின் இடைப்பகுதி) எங்களுக்குத் தெரிந்ததெல்லாம் திராவிட தேசியம்தான். அப்போது தமிழ்த் தேசியம் என்ற தொடர் இப்போதுள்ள அர்த்தத்தில் வழக்கில் இருந்ததா என்று தெரியவில்லை. ஆனால் தமிழ் தேசியக் கட்சி என்ற ஒன்றை ஈ.வெ.கி. சம்பத் தொடங்கியபோது நாங்கள் மகிழ்ச்சிதான் அடைந்தோம். காரணம், அவர் ஒரு நேர்மையான தலைவர் என்பது எங்கள் கணிப்பு.

திராவிடநாடு இல்லை என்பது கொஞ்ச நாளிலேயே தெரிந்துவிட்ட பிறகு, தமிழ் நாடுதான் எங்கள் சிந்தனையில் முதன்மையான அக்கறையாக நின்றது. தமிழ் நாட்டில் உள்ள அனைவரும்-ஜாதி வேறுபாடின்றிப் படிக்கவேண்டும், முன்னேற வேண்டும், தமிழகம் தொழில்வளர்ச்சி கொண்ட, எல்லாரும் வேலை வாய்ப்புப் பெறுகின்ற ஒரு நாடாகத் திகழவேண்டும், தமிழ்நாட்டில் வறுமை இருக்கலாகாது என்பதுபோன்ற ஆசைகள்தான் இருந்தன.

ஏறத்தாழ 1970 வாக்கில் சிப்காட் திட்டங்கள் தொடங்கப்பட்டன. பெரிய, சிறிய தொழிலகங்கள் கொண்ட அகன்ற நிலப்பகுதிகளில் அமைந்த தொழிற்பேட்டைகள் அவை. பெரும்பாலும் தமிழ் நாட்டு எல்லைகளிலேதான் சிப்காட்டுகள் அமைக்கப்பட்டன. உதாரணமாக

இராணிப்பேட்டை (ஆந்திர எல்லை), ஓசூர் (கருநாடக எல்லை) போன்ற இடங்கள். பிஎச்இஎல் போன்றவற்றின் புதிய தொழிற்பேட்டைகளும் அப்படித்தான். ஏன் எல்லைப்புறங்களில் அமைக்கிறார்கள் இவற்றை என்று எங்களுக்குக் கவலையாக இருந்தது. அயல்மாநிலக்காரர்கள் பிழைக்கவேண்டும் என்பதற்காகவே தமிழக அரசு தொழில்துறை நடத்துகிறதா?

அந்தக் காலத்திலேயே வேலூர் சிஎம்சி மருத்துவமனை மலையாளிகள் கையில் இருந்தது. சென்னையின் நிலையைச் சொல்லவே வேண்டியதில்லை. தென்சென்னை பணக்காரர்கள் வாழும் இடம் என்றும், வடசென்னை ஏழைகள் வாழும் இடம் என்பதும் பொதுவான கருத்து. வடசென்னையில் தமிழர்கள்தான் ஏழைகளாக, கூலிகளாக, மீன்பிடிப்பவர்களாக என்றெல்லாம் இருக்கிறார்கள். அவர்கள் வாழும் பகுதிகள் இன்றும் சேரிகளாக இருக்கின்றன. ஆனால் வட சென்னையில் இன்றும் தம்புசெட்டித்தெரு, லிங்கிசெட்டித்தெரு போன்றவற்றிற்குச் சென்று பாருங்கள். வடநாட்டு சேட்டுகளும், மார்வாடிகளும், குஜராத்திகளும், பிறவட மாநிலங்களின் பணக்காரர்களும் மட்டுமே கொழிக்கும் இடம் அது.

இவர்களைத் தவிர, பலமுறையும் நான் சொல்லி வருகிற மாதிரி, தமிழகம் ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளாக அடிமைப்பட்டிருந்ததால்,

இங்கு ஊருக்கு ஊர் தெலுங்கர்கள், கன்னடர்கள் வாழ்கிறார்கள். மலையாளிகளின் வரவு பழங்காலத்தில் குறைவுதான். டீக்கடை என்றாலே நாயர் என்பது பிரசித்தம். அங்கங்கே மலையாள ஜோசியர்கள், மந்திரவாதிகள் இருப்பார்கள். இப்போது எழுபது வருடங்களாகத்தான் கேரளத்தின் பெரிய படையெடுப்பு. முதலில் சினிமாத்துறை. பிறகு பார்த்தால் எத்தனை கேரள ஜுவல்லரிகள், எத்தனை முத்தூட், மணப்புரம் பைனான்சுகள், எவ்வளவு கம்பெனிகள் அவர்களிடம்? இதுபோலச் சென்னையில் இருக்கும் தெலுங்குச் செட்டிகளின் கடைகளைக் கணக்கெடுத்துப் பாருங்கள். இன்று தமிழ்நாட்டின் பொருளாதாரம் தமிழர்களிடம் இல்லை. மலையாளிகளிடமும் தெலுங்கர்களிடமும் வடநாட்டவர்களிடமும் சிக்கியிருக்கிறது. இது ஒரு புறம்.

இப்போது தமிழ் தேசியத்திற்கு வருவோம். சமூகவியலில் ஒரு மொழி, ஒரு கலாச்சாரம் கொண்ட ஓர் இனம் வாழும் நாடுதான் தேசம் என்று சொல்லப்படுகிறது. இப்போது தமிழ்நாட்டில் அப்படிப்பட்ட நிலை உண்டா? தமிழ்நாட்டில் பூர்விகக் காலத்திலிருந்து வாழும் தமிழர்கள் மட்டுமே இருக்கவேண்டும், வந்தேறியவர்களெல்லாம் வெளியேறிவிட வேண்டும் என்று சொல்லமுடியுமா? தமிழ் தேசியம் பேசுவதில் தலையாய பிரச்சினை இதுதான்.

இந்தப் பிரச்சினை இப்போது இந்தியாவின் எல்லா மாநிலங்களிலும் இருக்கிறது. பம்பாயில் உ.பி.க்காரர்களையும் பிஹார்க்காரர்களையும் எதிர்க்கிறார்கள். குஜராத்திலேயே மராட்டியர்களை எதிர்க்கிறார்கள். கன்னட எல்லையில் பெல்காம் பிரச்சினை. அஸாமில் பிற கிழக்கு மாநிலக்காரர்களின் பிரச்சினை.

இதேபோன்ற பிரச்சினை வேறுவடிவத்தில் இந்தியாவுக்குச் சுதந்திரம் பெற்ற போது ஏற்பட்டது. முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழும் பகுதிகளை மட்டும் பிரித்துக்கொண்டு பாகிஸ்தானாகப்-புதிய நாடாக மாற்றினார்கள். அங்கிருந்த இந்துக்களையும் சீக்கியர்களையும் கொடுமைப்படுத்தித் துரத்தினார்கள். ஆனால் இந்தியாவிலிருந்து நாம் முஸ்லிம்களை அப்படிக் கொடுமைப்படுத்தித் துரத்தியிருக்க முடியுமா? அவர்கள்தான் காஷ்மீர்முதல் கன்னியாகுமரி வரை ஊருக்கு ஊர் இருக்கிறார்களே? "எங்கள் நாடு எங்கள் மொழி இதுதான்" என்று சொந்தம் கொண்டாடுபவர்களை என்னதான் செய்வது?

இந்தப் பிரச்சினைக்குத்தான் மகாத்மா காந்தி உயிரையும் கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

ஒரே இனம் வாழும் நாடு (பாகிஸ்தான் போன்றவை) பிழைத்துக் கொள்வது எளிது. பல இனங்கள் வாழும் தேசம் (இந்தியா),

பலவற்றில் விட்டுக் கொடுத்துத்தான் போகவேண்டியிருக்கிறது. இதுதான் அன்றிலிருந்து இன்றுவரை நிலைமை.

இதேநிலைதான் வேறுவடிவத்தில் தமிழகத்தில் இருக்கிறது. இங்கு இனம் என்பதை மதம் என்று அர்த்தப்படுத்தாமல், பிற திராவிட மொழிகள் பேசும் மக்கள் என்று கொண்டு பாருங்கள். கன்னட நாட்டில் பெங்களூர், மைசூர் தவிர கிராமப்புறங்களில் தமிழர்கள் இல்லை. இருப்பினும் மிகமிகச் சிறுபான்மை. ஆந்திர நாட்டிலும் அப்படித்தான். கேரளத்திலும் அப்படித்தான். அதனால்தான் காவிரிப் பிரச்சினை ஒருசமயம் சூடானபோது, தமிழர்களைக் கன்னட நாட்டிலிருந்து பத்தாண்டுகளுக்கு முன்பு (பாகிஸ்தான் இந்தியர்களைச் செய்ததுபோல) அடித்துத் துரத்தினார்கள். ஆனால் தமிழகத்தில் ஊருக்கு ஊர் இவர்கள் எல்லாரும் இருக்கிறார்கள். ஆகவே "பல இனங்கள் வாழும் தேசம் பலவற்றில் விட்டுக்கொடுத் துத்தான் போகவேண்டியிருக்கிறது. இதுதான் அன்றிலிருந்து இன்றுவரை தமிழகத்தின் நிலை."

தமிழ்தேசியம் தனித்தமிழ் இயக்கத்திலிருந்தும் திராவிட இயக்கத்திலிருந்தும் தோன்றியது என்று விக்கிபீடியா முதலான அண்மைக்காலப் பதிவுகள் வரை குறிப்பிடுகின்றன. திராவிட இயக்கத்தின் சுயநல நோக்கம் நாடறிந்தது. தனித்தமிழ் இயக்கம் என்பது சாத்தியமா?

தமிழ்த் தேசியம் என்ற சொல்லில் இருக்கும் தேசம் என்ற சொல்லே வடமொழிச் சொல்தான். வடமொழிக் கலப்பு ஆதிகாலத்திலிருந்து, நமது ஆதி நூலான தொல்காப்பியத்திலிருந்து இருக்கிறது. தொல்காப்பியம் செய்யுள் எழுதுவதற்கான சொற்களில் ஒன்றாக வடசொல்லைக் குறிப்பிடுகிறது. அவ்வாறானால் அந்த அளவு வடமொழியாளர்கள் தமிழகத்தில் பழங்காலத்திலேயே கலந்துவிட்டார்கள் என்பதுதானே அர்த்தம்?

ஆனால், பிற திராவிடமொழிகளின் தனித்தன்மை வடமொழியால் அழிந்து போன மாதிரி தமிழின் தனித்தன்மை அழியவில்லை என்பது ஆறுதலான விஷயம். ஆனால் இன்று தனித்தமிழைக் கையாள முடியாது.

முதல் காரணம், உலகத்தின் அறிவுப்பெருக்கம், ஒரு மணிக்கு ஆயிரக்கணக்கான சொற்களின், தொடர்களின் தேவையை வேண்டிநிற்கிறது. தனித் தமிழ்வாதிகள், ஆயிரம் நாட்களுக்கு ஒரு சொல்வீதம் தமிழில் சேர்க்கிறார்கள். அது பெரும்பாலும் பலராலும் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை, அல்லது ஏற்கப்படப் பலகாலம் ஆகிறது. மொழியின் முன்னேற்றத்திற்கு மிகப்பெரிய தடை தனித்தமிழ். தொல்காப்பியரே, இளங்கோவடிகளே, சங்கப்புலவர்களே தனித் தமிழைக் கையாளவில்லை, வடமொழிக் கலப்பை ஏற்றுக்கொண்டார்கள் என்றால் நாம் எம்மாத்திரம்?

மொழிக்கு அடிப்படை தொடர் அமைப்பே தவிரச் சொற்கள் அல்ல என்பது மொழியியல் கற்றவர்களுக்குத் தெரியும். ஆனால் தனித்தமிழ் இயக்கம் தொடரமைப்பைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. சொற்களைப் பற்றி மட்டுமே கவலைப்படுகிறது.

இதை விளக்க ஓர் உதாரணம் சொல்லலாம். "உடுது துரடத்தைக் கருண்டது"* என்று நான் ஒரு "மடத்தனமான" தொடரை உருவாக்குகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்குப் பொருள் புரியவில்லை என்றாலும் தமிழ்த்தொடரின் அமைப்பில் இந்த மூன்று சொற்களும் உள்ளன என்று சொல்லிவிடுவீர்கள். காரணம் என்ன? முதல் சொல்லில் வரும் து-விகுதி, இறுதிச் சொல்லில் வரும் து-விகுதியோடு பொருந்தி ஏதோ அஃறிணை எழுவாய் "உடுது" என்பதான தோற்றத்தை உருவாக்குகிறது. இரண்டாவது சொல்லில் வரும் இரண்டாம் வேற்றுமைக்கான ஐ-விகுதியும், புணர்ச்சி வல்லொற்றும் (க்), தமிழுக்கே உரியவை. இரண்டாம் வேற்றுமைக்குப் பின் வல்லெழுத்து மிகும். மூன்றாவது சொல், ஓர் அஃறிணை வினைமுற்று போன்று காட்சியளிக்கிறது. (கருண்டது என்பது சுருண்டது என்பதுபோல இருக்கிறது.) ஆக, இந்த வாக்கியத்திற்குச் சொல்லளவில் பொருள் இல்லையென்றாலும், தொடரமைப்பு தமிழ் என்று உங்களுக்குப் புரிந்துவிடும். மொழி என்பது இம்மாதிரி, தொடரமைப்பில் உள்ளதே அன்றி சொற்களில்

அல்ல. (இங்கு கையாளப்பட்ட மூன்று சொற்களுக்கும் அர்த்தமே இல்லை.) அதனால்தான் இடைக்காலத்தில் வெறும் சமஸ்கிருதச் சொற்களை இட்டு, ஆனால் தமிழின் வாக்கிய அமைப்பில் மணிப்பிரவாளம் என்ற ஒரு தனிநடையை உருவாக்க முடிந்தது.

இன்று நம்மிடையே முஸ்லிம்கள், கிறித்துவர்கள் இருக்கிறார்கள். அவர்களின் பெயரெல்லாம் வட எழுத்துகள் மிகுதியாகக் கொண்டவையாக உள்ளன. வட எழுத்துகளை விலக்கவேண்டாம், சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் அவற்றுக்கு மட்டும் கிரந்த வடிவங்கள் (ஜ, ஷ, ஹ, ஸ, க்ஷ) தமிழில் ஏற்றுக் கொள்ளப்பட்டன. இவற்றை விலக்கமுடியாது.

ஜார்ஜ் என்பதை சார்ச்சு என்று எழுதினால் கேலிக்கூத்துதான். நான் என் "பத்திரிகை தலையங்கம்" என்ற நூலில் இருபதாண்டுகளுக்கு முன்பே காட்டிய உதாரணம் இது: ரஷீத் என்பதை கிரந்த எழுத்துகளை நீக்கி எழுதினால் "இரசீது" என்றாகும். சொல் முக்கியமா, அர்த்தம் முக்கியமா என்பதை நீங்களே முடிவு செய்துகொள்ளுங்கள். தனித்தமிழ் அர்த்தத்தைவிடச் சொற்களை முதன்மையாகக் கருதுகிறது.

நாட்டார் வழக்காறுகளிலும் வடசொற்கள் சேர்ந்துதான் இருக்கின்றன. அவற்றை விலக்க முடியாது. அதுபோலத்தான் தமிழகத்தில் சேர்ந்துவிட்ட பிற மாநில, பிற மொழிக்காரர்களையும் விலக்குவது

சாத்தியமல்ல. நாம் செய்ய வேண்டியது, தமிழர்களை, தமிழ்மொழியை முன்னேற்றவேண்டும என்பதைத் தான்.

தமிழகம் இன்று தனி நாடாவதும் இயலாது. "நாடா வளத்தன நாடு" என்றார் வள்ளுவர். இது தேசத்திற்கான அவரது வரையறை. ஒரு நாட்டில் பெரும்பாலும் எல்லா வளமும் இருக்க வேண்டும். தண்ணீர் முதலாக எல்லாவற்றிற்கும் பிறரிடம் கையேந்தும் நாம் (பிறரை) நாடாத வளம் கொண்டவர்களாக எப்படி இருக்க முடியும்?

இது உலகமயமாக்கல் காலம். அமெரிக்கக் கம்பெனிகள் நம் சிற்றூர்களில் வந்து கிளைகள் திறக்கின்றன. மெக்டொனால்டு போன்றவற்றின் கிளைகளையும் பார்க்க முடிகிறது. பொருளாதாரப் பிரதேசங்கள் (எகனாமிக் சோன்ஸ்) என்ற பெயரில் நிலங்கள் அயல்நாட்டவர்க்கும், அயல் மாநிலத்தவர்க்கும் எவ்வளவோ தாரைவார்த்துக் கொடுக்கப்பட்டுவிட்டன. மீதி இருக்கும் நிலம், விவசாயத்துக்கும் வேண்டாம், நிலத்தடி நீருக்கும் வேண்டாம் என்று "நகர்"களாக "பிளாட்" போட்டு விற்கப்பட்டுக் கொண்டிருக்கின்றது. தமிழ்நாட்டின் தமிழர் அமைப்புகள் அரசுமயமாக்கப்படுகின்றன. (உதாரணம், பச்சையப்பன் அறக்கட்டளை, அண்ணாமலைச் செட்டியார் நிறுவனங்கள்). ஆனால் தமிழை அறவே அகற்றும், வெறுக்கும் தனியாரது பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், தொழில்

நிறுவனங்கள் முதலியன தமிழ்நாட்டு அரசினாலேயே வரவேற்கப்படுகின்றன.

இந்த லட்சணத்தில் என்னய்யா தமிழ்த் தேசியம்? இவற்றையெல்லாம் மாற்றுவதற்கான போராட்டங்களை உருவாக்கத்தான் தமிழ் தேசியம் பேசுகிறோம் என்றால், போராட்டக் காலங்கள் முடிந்து விட்டன. ஆனானப்பட்ட மார்க்சியர்களே (பொதுவுடைமைக்காரர்களே) பெரிய அளவிலான தொழிலாளர், விவசாயிகள் போராட்டங்களை இனிமேல் நடத்தமுடியுமா என்று கவலைப்படும் காலம் இது. அவரவர் வாய்க்கும் வயிற்றுக்கும் மட்டுமே போராட்டம் நடத்திப் பிழைக்கவேண்டிய காலமாக இது மாறிவிட்டது. வயிற்றுப் பிழைப்புக்காகப் படிக்கும் மொழியையே தன் தாய்மொழியாக ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறான் தமிழன். ஆங்கிலத்தையே தாய்மொழியாக ஏற்றுக்கொண்டால் என்ன என்று என்னிடம் எத்தனையோ ஆங்கிலப் பேராசிரியர்கள் சண்டை போட்டிருக்கிறார்கள்.

மக்கள் ஒன்றாக இருந்தால் மிக எளிதில் தீர்த்துவிடக்கூடிய தமிழ்நாட்டுப் பிரச்சினைகள்கூட இன்று பிரம்மாண்ட உருவெடுத்து மத்திய அரசிடம் கையேந்தும் (அல்லது "கடிதம்" ஏந்தும்) பிரச்சினைகளாக மாறிவிட்டன. முல்லைப் பெரியாறு, காவிரிநீர், மீனவர் பிரச்சினை, கச்சத்தீவு போன்ற அனைத்தும் தமிழ் மக்கள்

ஒன்றுபட்டால் மிக எளிதில் தீர்க்கக்கூடியவை. இம்மாதிரிப் பிரச்சினைகளில் அயல் மாநிலங்களில் நடிகர்கள்கூடப் பங்கேற்று அந்தந்த மக்களுக்கு உற்சாகம் அளிக்கிறார்கள். ஆனால் வாய்-வயிறு போராட்டத்தைத் தாண்டிச் சிந்திக்கும் தமிழ்மக்கள், இம்மாதிரிப் பொதுப் பிரச்சினைகளுக்குக் குரல் எழுப்பிப் போராடக்கூடியவர்கள் தமிழ்நாட்டில் எங்கிருக்கிறார்கள் என்பதுதான் தெரியவில்லை. இங்கு காலங்காலமாக வாழும் தெலுங்கர்களும் கன்னடர்களும் மலையாளிகளும் இந்த நாட்டின் மூலவளங்களை அனுபவிப்பதற்கு மட்டுமே தயாராக இருக்கிறார்களே தவிரப் போராடுவதற்குத் தயாராக இல்லை. அதுதான் நமக்கும் தமிழ்த் தேசியத்தின் அடிப்படைப் பிரச்சினையாக இருக்கிறது.

இன்று தமிழகம் தன்னளவில் மட்டுமே ஒரு தேசமாக வாழும் பண்பை இழந்துவிட்டது. தனித் தமிழ்நாட்டினால் தீர்க்கமுடியாத ஏராளமான சிக்கல்கள் இன்று உள்ளன.

அவ்வாறானால் இனி நாம் செய்யக்கூடியது என்ன? அமெரிக்காவில் ஐம்பதுக்கும் மேற்பட்ட மாநிலங்கள் இருக்கின்றன. ஆனால் அவை தன்னாட்சி பெற்றவை. (நமது தமிழ்ச் சிந்தனையின்படி "மாநில சுயாட்சி" பெற்றவை.) அமெரிக்கா சம்பந்தப்பட்ட ஒட்டுமொத்தப் பிரச்சினைகளுக்கு மட்டுமே வாஷிங்டனின் வெள்ளை மாளிகை அரசியல். பிற யாவும், அந்தந்த மாநிலங்களினால் தீர்த்துக்

கொள்ளப்படுகின்றன. இம்மாதிரி மாநிலசுயாட்சி இந்தியாவிலுள்ள அனைத்து மாநிலங்களுக்கும் தேவை. இந்தியாவுக்குப் பொதுவான இராணுவம், அயலகத்துறை, பொதுப்பொருளாதாரம், நதிகள் உட்பட்ட நில-நீர் அமைப்புகள், கல்வி போன்றவை மைய அரசிடம் இருக்கலாம், பிறதுறைகள் யாவும் மாநில அரசுகளிடமே இருக்க வேண்டும். அந்தந்த மாநிலத்தில் அந்தந்த மொழி மட்டுமே ஆட்சிமொழியாக இருக்கவேண்டும்,

பிற மாநிலங்களுக்கோ, மைய அரசுக்கோ தொடர்பு கொள்ளுதல் இந்த எந்திர (மொழிபெயர்ப்பு)க் காலத்தில் ஒரு பெரிய விஷயமே அல்ல. இதற்குக் கூடப் பயன்படாவிட்டால் மொழிபெயர்ப்புத் துறைதான் எதற்கு?

நாம் சுதந்திரம் பெற்றபோதே இங்கிலாந்தின் அரசியல் அமைப்பையும் நீதிமுறை அமைப்பையும் ஏற்றுப் பெரிய தவறு செய்துவிட்டோம் என்பதை வி.ஆர். கிருஷ்ணய்யர் உட்பட்ட சிந்தனையாளர்கள் அடிக்கடி எடுத்துக்காட்டி யிருக்கிறார்கள். அமெரிக்கா போன்ற நாடுகளின் ஃபெடரல் அமைப்பினை ஏற்றிருந்தால் இந்தியாவின் பிரச்சினைகள் எத்தனையோ எளிதாகத் தீர்ந்திருக்கும். இப்போதே சர்வதேச அளவிலான புள்ளிவிவரங்கள் தமிழ் அழிகின்ற மொழி என்றுதான் குறிப்பிடுகின்றன. மேற்கண்டமாதிரிச் சில அடிப்படை மாற்றங்களைச் செய்தால்

எதிர்காலத்தில் தமிழ்நாடு வாழும், தமிழ்மொழி வாழும் என்று எதிர்பார்க்கலாம்.

# 12. மொழி பற்றிய சொல்லாடல்

நவம்பர் 2005இல், ஏறத்தாழ ஒன்பதாண்டுகளுக்கு முன்பு கோவையில் ஒரு கூட்டத்தில் பேசியபோது பொருள்முதல் வாதம், கருத்துமுதல் வாதம் இவையிரண்டிற்கும் முன்னால், பொருள்முதல் வாதத்திற்கே அடிப்படையாக இருப்பது மொழிமுதல் வாதம் என்று பேசினேன். பொருளைப் பொருள்படுத்த வைப்பதும், கருத்தைக் கருவுயிர்க்க வைப்பதும் மொழிதான். ஒருவகையில் சொன்னால், மொழிதான் அது பேசும் மக்களின் உயிர்நிலையாக இருக்கிறது. ஆதிகாலம் போல, மனிதன் மொழியின்றிச் சைகையில் பேசும் காட்டுமிராண்டியாக ஆனால் ஒழிய, மொழியின் முதன்மையை மனிதர் எவரும் கேள்விகேட்க முடியாது. குறிப்பாக, இந்தியாவில், மொழியைத் தாயாக, தெய்வமாகப் போற்றும் மரபு இருக்கிறது. தமிழ்நாடு என்று பெயர் மாற்றுவதால் என்ன ஆகப்போகிறது, வறுமை ஒழியப் போகிறதா என்று கிண்டல் செய்தார்கள் அக்கால மார்க்சியக்காரர்கள். தமிழ்நாடு எனப் பெயர் மாற்றுவதோ, கடவுள் வாழ்த்துக்குப் பதிலாகத் தமிழ் வாழ்த்துப் பாடுவதோ, அடிப்படைப் பிரச்சினை எதையும் தீர்க்கப்போவதில்லை என்பது நமக்குத் தெரியும். அவை தமிழர்களின் மனத்தில், இது நம் நாடு நம் மொழி என்ற உணர்வை ஏற்படுத்தும் குறியீட்டுச் செய்கைகள். இந்த

மொழியுணர்வுதான் இந்தியாவில் மொழிவாரி மாநிலங்கள் ஏற்படக் காரணமாகவும் அமைந்தது.

இன்று பிற மாநிலங்கள் அனைத்தும் தத்தம் மொழியை நன்கு வளர்ப்பதைக் காண்கிறோம். தமிழ்நாட்டைத் தவிர.

மதச்சார்பில் பாகிஸ்தான் பிரிந்துபோனபோது, வட இந்தியர்கள் இந்தியாவையும் இந்துஸ்தான் ஆக்க முனைந்தார்கள். அவர்கள் பார்வையில் தமிழ்ப் பண்பாடு, தென்னிந்தியப் பண்பாடு ஆகியவை தனித்தன்மை கொண்டவை அல்ல. ஒரு சமயம் என் மாணவர் ஒருவர் கேட்டார்: "முஸ்லிம்கள் மசூதியிலிருந்து தினசரி மைக் வைத்துக்கொண்டு புரியாத அரபுமொழியில்தான் தொழுகை நடத்துகிறார்கள். கிறித்துவர்களும் பலவிதங்களில் (தாங்கள் சூடிக்கொள்ளும் பெயர் உள்பட) மேற்கத்தியக் கலாச்சாரக் கூறுகளைப் பின்பற்றுகிறார்கள். அப்படியிருக்கும் போது நாமும் சமஸ்கிருதத்தைக் கோயில் மொழியாக, வழிபாட்டு மொழியாக ஏற்றுக்கொண்டால் என்ன?" என்று கேட்டார். நான் சொன்னேன்: "அரபு மொழியில் தொழுவதால் ஒரு முஸ்லிம் அரேபியன் ஆகிவிடுவதில்லை, அராபியப் பண்பாடுதான் இந்தியப் பண்பாடு என்று சொல்லப்போவதில்லை. கிறித்துவர்களும் அவ்வாறே. ஆனால் சமஸ்கிருதத்தைக் கோயில்மொழி என்று ஏற்றுக் கொள்வதில் பிரச்சினை அத்துடன் நிற்பதில்லை. தமிழ் இசை, தமிழ் நாடகம், தமிழ்

இலக்கியம், தமிழ்ப் பண்பாடு உள்ளிட்ட அனைத்துமே சமஸ்கிருதத்திலிருந்து வந்தவை, சமஸ்கிருதம் தான் அனைத்துக்கும் ஆதாரம் என்று உடனே சொல்ல ஆரம்பித்துவிடுவார்கள். நாம் வடமொழியை எதிர்ப்பதற்கான காரணமும் இதுதான்" என்றேன்.

பாகிஸ்தான் பிரிந்துபோனதும் செய்த முதல்வேலையே, காஷ்மீருக்காக இந்தியாவின்மீது படையெடுத்ததுதான். அதனால் பாகிஸ்தானுக்கு இந்தியா பகைநாடானது மட்டுமன்றி, மதத்தீவிரவாதமும் தோன்றிவிட்டது. இவ்வாறே மொழிவழி மாநிலங்களாகப் பிரித்ததும், மாநிலங்களில் மொழிவழிச் சிறுபான்மை பிரச்சினை தோன்றிவிட்டது. அது மட்டுமன்றி, ஏற்கெனவே நான் எழுதியது போல, காவிரி நீர்ப்பகிர்வு, முல்லைப் பெரியாற்றுச் சிக்கல், எல்லை ஆக்கிரமிப்புகள், பண்பாட்டு ஆக்கிரமிப்புகள் எனப் பல பிரச்சினைகள் தோன்றி விட்டன.

ஓர் அன்பர், மனம் வருந்தி எனக்குத் தனியே மடல் எழுதியிருந்தார். "நீங்கள் சொல்லும் தீர்வுகள் யாவும் திராவிடம் என்று பேசும் பிறமொழியினர்க்கு ஊக்கமளிக்குமே தவிர, தமிழர்களை எவ்விதம் வாழவைக்கும்" என்று கேட்டிருந்தார். அதற்குத்தான் நான் முன்னர் எழுதிய கட்டுரையில் மதச்சிறுபான்மை நிலையையும், மொழிச் சிறுபான்மை நிலையையும் ஒப்பிட்டுப் பேசியிருந்தேன். பாகிஸ்தான் தனிநாடாகச் (இந்திய முஸ்லிம்களைப் பிரித்துக்கொண்டுதான்)

சென்றுவிட்டது என்பதற்காக நாம் இங்கிருக்கும் முஸ்லிம்களை வேற்று நாட்டவர்களாகக் கருதமுடியாது. அதுபோலவே இங்கேயே முந்நூறு நானூறு ஆண்டுகளாக வாழ்ந்துவரும் மொழிச் சிறுபான்மையினரையும் இந்நாட்டைவிட்டு வெளியே போ என்று கூறமுடியாது என்பதுதான் நிதரிசனம்.

அவர்கள் பெரும்பான்மையினராக இருக்கும்போது அரசியலில் அவர்கள் செல்வாக்குப் பெறுவதையும் கட்சிகள் தொடங்குவதையும் வாக்குச் சேகரித்து ஆட்சி அமைப்பதையும் நாம் தடுக்க இயலாது. தமிழர்கள் ஆட்சி தமிழ்நாட்டில் நடக்க முடியவில்லையே என்ற ஆதங்கம் இல்லாமலா இருக்கிறது?

பல கருத்துகளை நாம் சிந்திக்கும்போதும் பேசும்போதும் எழுதும்போதும் நொந்த மனத்துடன்தான் செய்யவேண்டியிருக்கிறது. ஆனால் உணர்ச்சி வேறு, அறிவு வேறு. உணர்ச்சிரீதியாகப் பேசினால் எங்கும் தீர்வு வராது. உதாரணமாக, முல்லைப் பெரியாற்றுப் பிரச்சினையில் கேரளாவுக்கு என்னதான் ஆட்சேபணை என்பது எனக்குப் புரியவேயில்லை. அங்குள்ள கட்சிகள் அரசியலைச் சாக்கு வைத்து உணர்ச்சிரீதியாக அவர்களைப் பிரிக்கின்றன. இவை போன்ற நிலைப்பாடுகள் எந்த நாட்டுக்கும் உகந்தவை அல்ல.
அதுபோலத்தான், திராவிடம் என்ற ஒரு நாடு என்றும் இருந்ததும் இல்லை, இருக்கப்போவதும் இல்லை. திராவிட மொழியினம்தான்

இருக்கிறது என்ற அறிவுபூர்வமான வாதத்தை முன் வைத்தால் சிலருக்கு ஏன் பற்றிக்கொண்டு வருகிறது என்பது எனக்குப் புரியவில்லை. வரலாற்றை தயவுசெய்து நன்கு பாருங்கள், படியுங்கள்.

ஒரு வகையில் மொழிவழி தேசியம், மாநிலங்களுக்குள்ளான பகைமையை மிகுதிப்படுத்தவே உதவுகிறது. அதற்காக அது தேவையில்லை என்று ஒதுக்கவும் முடியவில்லை. தமிழ்நாடு ஏன் தனிநாடாக வேண்டும் என்பதற்கு-காவிரிப்பிரச்சினை, தமிழ்மீனவர் பிரச்சினை, கச்சத்தீவு பிரச்சினை முதலாக, தமிழ் ஈழப் பிரச்சினை, மையஅரசுப் பதவிகளில் தமிழர்கள் ஒதுக்கப்படுவது, சமஸ்கிருத, இந்தி ஆதிக்கப் பிரச்சினை வரை-நூறு நல்ல காரணங்கள் இருக்கின்றன. ஆனால் அப்படித் தனித்து நாம் இயங்க முடியாது என்பதுதான் உண்மையாகவும் இருக்கிறது. இந்நிலையில் நாம் ஒருவிதமான விட்டுக்கொடுக்கும் போக்கைத்தான் கடைப்பிடிக்க வேண்டி வருகிறது.

தமிழ்நாடு தனிநாடாகும் நிலை இன்று இல்லை. நாம் இந்தியாவிற்குள்தான் இருக்கப்போகிறோம். ஆகவே தேசிய இன உரிமைகளை ஒப்புக்கொள்கின்ற ஒரு கூட்டாட்சிமுறை குறித்துத்தான் நாம் சிந்திக்கமுடியும்.

நான் சொல்லும் இந்தத் தீர்வுகள் என் தனித்த சிந்தனையும் அல்ல. கோவையில் திரு. ஞானி அவர்களுடனும் நண்பர்களுடனும் இதுபற்றிப் பல முறை பேசியிருக்கிறோம். தாய்மொழியை அறிமுகத்தோடு நிறுத்திவிடாமல் அதைத் தொடர்ந்து கற்கவேண்டும், அதிலேயே பள்ளி, கல்லூரிப் பாடங்களையும் பயிலவேண்டும், கோயில் முதல் நீதிமன்றம் வரை எங்கும் தாய்மொழியே புழங்கவேண்டும், ஒரு மொழிமாநிலத்தில் பிறமொழிக்காரர் குடியுரிமையோடு இருந்தால் அவருக்கும் அம்மாநில மொழியே தாய்மொழியாகும் என்றெல்லாம் பலமுறை விவாதித்திருக்கிறோம்.

சிலர் எப்போதும் ஆதிக்கக்காரர்களாகவே தங்களை நிலைநிறுத்திக் கொள்கின்றனர். தங்களுக்கு ஆதரவான கருத்தியலை உருவாக்கி நம்பவைக்கின்றனர். ஏற்க வைக்கின்றனர். வடமொழி தமிழுக்கு அந்நியமானது என்றாலும் அது இப்படித்தான் ஆதிக்கப்போக்கையே ஆதியிலிருந்து தமிழ்நாட்டில் கைக்கொண்டு வந்துள்ளது. தமிழ் தற்காப்புப் போக்கையே சங்ககாலம் முதலாகக் கைக்கொண்டு வருவதைக் காண்கிறோம். தமிழ்மொழி இலக்கிய வரலாறு முழுவதும் இந்தப் போக்கு அடியோட்டமாக இருக்கிறது. இந்தியா ஒரு நாடு என்றால் அதில் வடமொழிக்கு அந்நியமான பண்பாடு எதுவும் இருந்துவிடக் கூடாது என்று மற்றவர்களை அடிமைப்படுத்த முனைவதில் என்ன நன்மை இருக்கிறது? அடிமைப்படுத்துபவர்கள் தாங்களும் அடிமைகளே என்பதை முதலில் உணர வேண்டும்.

ஆனால் இவையாவும் தமிழனின் குறைபாடுகளே. தமிழர்கள் இன்றைய உலகச் சூழலுக்கு ஏற்பத் தங்களை அமைத்துக்கொள்ளவில்லை. தமிழை அறிவுமொழி ஆக்குவதற்கு மாறாக, உணர்ச்சிமொழியாகவும் கேளிக்கைமொழியாகவும் மட்டுமே பயன்படுத்துகின்றனர். இதனால் கேளிக்கைவேண்டி தமிழ்ச் சினிமாவையும் பட்டிமன்றத்தையும் நாடும் அதே நண்பர்கள், அறிவைத் தேட வேண்டுமென்றால் ஆங்கிலத்திடம் தஞ்சமடைகின்றனர். உலக அளவிலான வரலாற்றுச் சூழலைத் தமிழர்கள் புரிந்துகொண்டு அதற்கேற்பத் தமிழை வளர்க்க வேண்டும்.

இந்த நிலை நீடித்தால், தமிழ் அழியும் நாள் தொலைவில் இல்லை. தமிழன் பற்றின்றி நடந்துகொண்டு, தன்னையும் தன் பண்பாட்டையும் கோட்டைவிட்டு, வந்தேறிகளும் வடவர்களும் எல்லாம் எங்களது என்கிறார்களே என்று புலம்புவதால் என்ன பயன்? தமிழ் உணர்வு இல்லாதவரை தமிழ் இனம் எவ்விதம் தன்னைத் தக்கவைத்துக்கொள்ளும்? தமிழ் இன்றிருக்கும் நிலையே இன்னும் ஒரு நூற்றாண்டு நீடித்தால், எதிர்காலத்தில் தமிழ் இருக்காது. ஒரு வேளை "டமில்" இருக்கலாம், அப்போதும் சில ஆய்வாளர்கள் "டமிலின்" மூலமொழி தமிழா, சமஸ்கிருதமா, ஆங்கிலமா, தெலுங்கா, உருதுவா என்றுகூட ஆராய்ச்சி செய்துகொண்டிருப்பார்கள்.

# 13. மொழிப்பிரச்சினை-ஒரு நோக்கு

இந்தியா பலமொழிகள் பேசப்படும் ஒரு தேசம் என்கிறார்கள். (இந்தக்கூற்று சற்றே விவாதிக்கப்பட வேண்டியது.) ஒரு தேசம் என்பதற்கு ஒரு மொழி, ஒரு கலாச்சாரம், ஓர் இனம் என்பது அடிப்படைத் தேவை. இந்தியாவிலோ பல மொழிகள், பல கலாச்சாரங்கள், பல இனங்கள். வேண்டுமானால், பல கலாச்சாரங்கள் சேர்ந்த ஒரு நாடாக (தேசமாக அல்ல) அமைந்தது இந்தியா என்று கூறலாம். தேசம் என்பதை "நேஷன்" என்போம், நாடு என்பதை "கண்ட்ரி" என்போம். இரண்டுக்கும் வேறுபாடு உண்டு. உதாரணமாக, சிலப்பதிகாரக் காலத்தில், சேரநாடு இருந்தது, சோழநாடு இருந்தது, பாண்டியநாடு இருந்தது. ஆனால் இவையனைத்தும் சேர்ந்தது தமிழ் 'தேசம்'. இந்தக் கருத்து சிலப்பதிகாரக் காப்பியத்தில் உள்ளதனால்தான் அதை தேசியக் காப்பியம் என்கிறார்கள்.

இந்தியா ஒரு தேசம் என்று ஏற்காவிட்டாலும்கூட, பழங்காலத்திலிருந்தே அருகருகில் இருப்பதன் காரணமாக, ஒரு மொழி பேசுபவர்கள், இன்னாரு மொழி பேசுபவரிடம் கலந்தே ஆகவேண்டிய ஒரு கட்டாயம் மிகப் பழங்காலத்திலிருந்து இன்றுவரை இருந்துவருகிறது. இன்னும்கேட்டால் காலப்போக்கில் மிகுதியாகியிருக்கிறது. இந்தியாவில் அரசியலமைப்புப்படி

ஆட்சிமொழிகளாகப் பதினெட்டு மொழிகளும் சாகித்திய அகாதெமியின் அங்கீகாரப்படி இலக்கிய வளமுள்ள மொழிகளாக இருபத்திரண்டு மொழிகளும் ஏற்கப்பட்டுள்ளன.

இன்று இந்தியாவில் நிலவும் பல பிரச்சினைகளுக்கு-நதிப்பிரச்சினை, வேலை வாய்ப்புப் பிரச்சினை, வளர்ச்சிப் பிரச்சினை போன்ற பலவற்றிற்கு அடிப்படை மொழிப்பிரச்சினை. பெல்காம் மராட்டியர்களுக்குச் சொந்தமானதா, கன்னடர்களுக்குச் சொந்தமானதா போன்ற இடப்பிரச்சினைகள் உட்படப் பலவற்றிற்கும் அதுதான் காரணம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகள். இங்கிலாந்து போன்ற ஒரே மொழி பேசப்படுகின்ற நாடுகளில்கூட, அவர்கள் தங்கள் தேவைக்கேற்ப பிரெஞ்சு, ஜெர்மன், லத்தீன், கிரேக்கம் போன்ற பல மொழிகளைப் பயிலுகிறார்கள். இருபத்திரண்டு மொழிகள் இருக்கின்ற நம் நாட்டில் பிறமொழிகளைப் பற்றிய அறிவு எவ்வளவு இன்றியமையாதது என்பது சொல்லித் தெரியவேண்டியதில்லை.எனவே இந்தியர் ஒவ்வொருவருக்கும் மூன்று நான்கு மொழியறிவு இருப்பது நன்மையே தரும். அவற்றை முறையாகப் படிப்பதும் நல்லதுதான்.

பலமொழியறிவு வேலைவாய்ப்புக்கு மட்டுமல்ல, பண்பாட்டு வளர்ச்சிக்கும் பரந்த மனப்பான்மைக்கும் பிறரைப் புரிந்துகொள்வதற்கும் மிகவும் அவசியம். தன் ஊருக்குள்ளாகவே

குண்டுச்சட்டிக்குள் குதிரை ஓட்டிக் கொண்டிருப்பவனுக்கும், அதே ஊரில் பிறந்தாலும் பலமொழியறிவு பெற்றவனுக்கும், அந்த ஊரிலிருந்து பல்வேறு பிரதேசங்களுக்கும், அயல்நாடுகளுக்கும் சென்று சுற்றிவந்தவனுக்கும் நிச்சயமாகப் பண்பாட்டு நோக்கில் பாரதூரமான வேறுபாடுகள் இருக்கத்தான் செய்யும். ஒரு மொழியறிவு என்பது மொழியை அறிவது மட்டுமல்ல, ஒரு கலாச்சாரத்தையும், பண்பாட்டையும் புரியவைப்பது அது. மற்றொருவித வாழ்க்கை முறையைச் சொல்லித் தருவது, மற்றவன் ஏன் நம்மைவிட வேறுபட்டு இருக்கிறான், வாழ்க்கை நடத்துகிறான், வேறுபட்டுச் சிந்திக்கிறான். அதை நாம் எப்படிப் புரிந்து கொள்ளவேண்டும் என்பதைச் சொல்லித் தருவது.

ஆகவே என்னைப் பொறுத்தவரை தமிழர்கள் நான்கு மொழிகளேனும் கற்கவேண்டும் என்று பரிந்துரை செய்வேன். அது அவரவர் தேவைக்கும் தொழிலுக்கும் ஏற்ப அமையலாம். உதாரணமாக, தமிழில் பக்தி இலக்கியத்தைச் சொல்லித் தருகின்ற ஒரு பேராசிரியர், தமிழுடன் ஆங்கிலம், சமஸ்கிருதம், இந்தி ஆகிய மூன்றையும் படிப்பது பயனுடையதாக இருக்கும். நவீன சமூகவியல் தத்துவக் கருத்துகளைக் கற்றுத்தரும் பேராசிரியராக இருந்தால் பிரெஞ்சு, ஜெர்மன் படிப்பது பயனுடையது. திருச்சியில் ஜாபர்ஷா தெரு முழுவதும் செயற்கைக் கற்கள் உற்பத்தியும் வியாபாரமும் நடப்பது எனக்குத் தெரியும். அவர்கள் வியாபாரத்துக்கென சூரத்,

பம்பாய் என்று அலைபவர்கள். அவர்களுக்கு மராட்டி, குஜராத்தி தெரிந்தால் நல்லது. எதுவுமே இல்லை, நான் விவசாயி என்பவன்கூட சமஸ்கிருதத்தின் அடிப்படைகளைத் தெரிந்துகொள்வது நல்லது. மனத்தை விரிவுபடுத்த பலமொழிக்கல்வி ஒரு பயனுள்ள சாதனம்.

ஆனால் இங்கே ஒரு தெளிவைச் சொல்லிவிட வேண்டும். எத்தனை மொழிகள் படித்தாலும், முதலில் தாய்மொழியே முதன்மையானது. தாய்மொழி வழிக்கல்விதான் உண்மையான படைப்பாற்றலையும் கண்டுபிடிப்பறிவையும் ஆக்கசக்தியையும் உருவாக்கக்கூடியது. இது இன்று சரிவர இல்லாததனால்தான் தமிழ்நாட்டில் வெறும் மனப்பாடப் பொம்மைகள் உருவாகிறார்கள். ஒவ்வொரு ஆண்டும் ஆயிரத்து இருநூற்றுக்கு ஆயிரத்துநூற்றுத் தொண்ணூறுக்கு மேல் மதிப்பெண் வாங்கிவெளிவருபவர்களையும் பார்க்கிறோம். ஒரு பதினைந்து இருபதாண்டுகளாகப் படித்து வெளியில்வந்த மாணவர் கணக்கை எடுத்துக் கொள்ளுங்கள். இப்படி மதிப்பெண் வாங்கியவர்களெல்லாம் வெறும் வயிற்றுப் பிழைப்புப் பொறியியலாளர்களாகவும் மருத்துவர்களாகவும் ஆனதன்றி வேறு என்ன ஆனார்கள்? இதுவே போதும், இதற்குமேல் சமூகம் வேண்டாம், நாடு வேண்டாம், இனம் வேண்டாம், படைப்பாற்றல் வேண்டாம் என்று தமிழ் நாட்டவர் நினைப்பதனால்தான் ஆங்கிலத்துக்கு முதன்மையும், மனப்பாடக் கல்விமுறையும் நடைமுறையாகிவிட்டன.

இன்னொரு தெளிவையும் சொல்லவேண்டும். பல மொழிகள் கற்பது ஆரோக்கியமானது. ஆனால் பிறமொழிகள் ஓர் இனத்தின்மீது ஆதிக்கம் செய்யவிடலாகாது. இந்தியைக் கற்கவேண்டும் என்பதை நான் எதிர்க்கவில்லை. ஆனால் ஒன்று, அது தமிழைவிட மேம்பட்டது என்ற கருத்து உருவாகக்கூடாது, அது தேசியமொழி என்று கூறக்கூடாது. இரண்டாவது, தாய்மொழியைத் தவிர வேறு எந்தமொழியைக் கற்பதும் தன்ஆர்வத்தினால் (வாலண்டரியாக) இருக்க வேண்டுமே தவிரக் கட்டாயமாக்கக்கூடாது.

வடமாநிலத்தவர்கள்-குறிப்பாக மையமாநிலத்தவர்கள் எனப்படுவோர் (மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான், உத்திரப்பிரதேசம், பிஹார் போன்றவை இதில் அடங்கும்) இந்தியை மட்டும் படித்தால் போதும், தாங்கள் வேறு எந்த மொழியையும் உள்படப் படிக்கமாட்டோம் என்கிறார்கள். இந்த மனப்பான்மைதான் பல பிரச்சினைகளை உருவாக்குகிறது. இந்தியா ஒரே தேசமாம், ஆனால் உ.பி.க்காரன் ஒரே மொழிதான் படிப்பானாம், ஆனால் தமிழ்நாட்டுக்காரன் தாய்மொழியாகத் தமிழ், வேலைக்காக ஆங்கிலம், தேசபாஷை என்பதற்காக இந்தி, வேலைக்காக இன்னும் ஏதாவது ஒரு மொழி என்று படிக்கவேண்டுமாம். ஏன் இந்த வேற்றுமை, பாரபட்சம்? தமிழன் இந்தி படித்தால், இந்திக்காரன் நான்கில் ஒரு தென்னாட்டு மொழியாவது படிக்கட்டுமே? ஆந்திராக்காரன் வங்காளி படித்தால், வங்காளத்தவன்

மலையாளமாவது படிக்கட்டுமே? இன்று லக்னோவில் இருப்பவன் இந்தியில்-தன் தாய்மொழியில்-ஐஏஎஸ் எழுதி எளிதில் வெற்றி பெறமுடியும். ஆனால் தமிழன் ஆங்கிலத்திலோ, இந்தியிலோ எழுதியாக வேண்டும். இரண்டுமே அவனுக்குத் தாய்மொழியல்ல, பிறமொழிகள்.

மும்மொழித்திட்டம் என்பதை நடைமுறைப்படுத்தினால், இந்தியா முழுவதும் அதை நடைமுறைப்படுத்த வேண்டும். ஒரு சில மாநிலங்களில் ஒரு மொழி படித்தால் போதும், இன்னும் சில மாநிலங்களில் இருமொழி படித்தால் போதும், வேறுசிலவற்றில் மூன்று மொழிகள் படிக்கவேண்டும் என்பது சரியான முறை அன்று. இதற்குக் கல்வி மத்தியஅரசின் பொறுப்பில் இருக்கவேண்டும். மாநில அரசு இதில் தலையிடக்கூடாது. ஒரு மலையாளி மலையாளம், இந்தி, ஆங்கிலம் என மூன்று மொழி படித்தால், ஒரு மத்தியப்பிரதேசக்காரனும் இந்தி, ஆங்கிலம், தென்னாட்டு மொழி ஒன்று என மூன்றுமொழிகள் படிக்கவேண்டும். கண்டிப்பாக வடக்கிலுள்ளவர்களுக்குத் தென்னகத்து மொழி ஒன்று கற்பிக்கப்பட வேண்டும். தெற்கில் இருப்பவர்கள் இந்தியோ, வேறு எந்த வட மாநிலத்து மொழியோ ஒன்று கண்டிப்பாகக் கற்கவேண்டும்.

இன்னொரு பிரச்சினையும் இருக்கிறது. மூன்று தலைமுறைகளுக்குமேல் ஒரு பகுதியில் தங்கினால் அந்தப்

பகுதியின் மொழியைத் தாய்மொழியாக ஏற்றுக் கொள்ளவேண்டியதும் அவசியம். மூன்று தலைமுறைகள் என்பது ஏறத்தாழ நூறாண்டுகள். உதாரணமாக, மூன்று தலைமுறைக்கு மேல் நிலையாக மைசூரிலோ பெங்களூரிலோ நிலையாகத் தங்கி வீடுவாசலோடு வாழும் தமிழர்கள் கன்னடத்தைத்தான் தாய்மொழியாகக் கொள்ளவேண்டும். பம்பாயில் ஐந்து தலைமுறையாக வாழும் பிஹார்க்காரன், மராட்டியையே தன் தாய்மொழி எனக் கற்கவேண்டும், குறிப்பிட வேண்டும். இதில் போய்ப்போய் வருபவர்கள்- floating population பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை. நிலையான சொத்து-பழைய காலச்சொற்படி ஸ்தாவர ஆஸ்தி என்பதின்றி அந்த ஊருக்கும் இந்த ஊருக்கும் பணிக்காக அலைபவர்களை இதில் சேர்க்கத் தேவையில்லை. ஒரு தமிழன் அசாமுக்குப் போய் அரசுப்பணி செய்யலாம். அவன் தன் பணிக்காலம் முழுவதையும் அங்கே கழித்துவிட்டு, பிறகு தமிழகத்திற்குத் திரும்பிவந்தால் அவனை அசாமிப் பட்டியலில் சேர்க்கமுடியுமா? ஆனால் அங்கேயே வீடு வாங்கி, பிள்ளைகளுக்கும் அங்கேயே வேலைவாங்கிக்கொடுத்து, அங்கேயே நிலையாகத் தங்கி, அவன் தலைமுறையினர் அங்கு வாழத்தொடங்கினால் அவர்களை அசாமியர்களாகவே கருதவேண்டும்.

இன்றைய மக்கள் கணக்கெடுப்பு முறையில் இந்தக் கணக்கீட்டைச் செய்வது எளியது. இது தேசிய இனப்பிரச்சினைச் சவாலுக்கு ஒரு தீர்வாகவும் அமையும்.

# 14. இதென்னய்யா, ஜுஜுபி மேட்டர்...

மொழியில் ஆர்வம் கொண்டவன் என்ற முறையில் சென்னைத் தமிழ் எனக்கு மிகுந்த சுவையைத் தருகிறது. பலர் அதை இழித்தும் பழித்தும் பேசியிருக்கிறார்கள். அதில் எனக்கு உடன்பாடு இல்லை. விக்கிபீடியாவில் மெட்ராஸ் பாஷைக் கென்றே சில பக்கங்கள், பகுதிகள் ஒதுக்கப்பட்டுள்ளன என்பது வியப்பாக இல்லையா?

மொழிகள் எவ்வாறெல்லாம் கலப்பு அடைகின்றன என்பதை ஆராய்பவர்களுக்குச் சென்னைத் தமிழ் ஒரு வரப்பிரசாதம். பம்பாயில்-குறிப்பாக பாலிவுட் (இதுவே தனிச் சிறப்புள்ள ஒரு சொல்தான்) பகுதியில் பேசப்படும் மொழி பம்பையா என்றே அழைக்கப்படுகிறது. அதுபோல மீன்பிடிப்பவர்களும் ரிக்ஷாக்காரர்களும் நிறைந்த வடக்குச் சென்னைச் சேரிமொழி சென்னைத் தமிழ் (மெட்ராஸ் பாஷை) என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

(குறிப்பு 1: சேரி என்பதைக் கீழ்ச்சாதி மக்கள் தங்கியிருக்கும் இடம் என்ற அர்த்தத்தில் சொல்லவில்லை-சேரி என்றால் சேர்ந்துவாழுமிடம் என்று அர்த்தம். பழந்தமிழில் பார்ப்பனச்சேரி போன்ற சொற்கள் புழங்கியுள்ளன. புதிய சேர்ந்து வாழும் இடமாக அமைக்கப்பட்ட பகுதி புதுச்சேரி எனப்பட்டது. இப்படித் தமிழகத்தில் பல சேரிகளைப்

பார்க்கலாம். மலையாளத்தில் இது ஸேரி (வடஸேரி, செங்கணாஸேரி... என்று புழங்குகிறது.)

(குறிப்பு 2: இம்மாதிரிச் சொற்கள் காலப்போக்கில் இழிவான அர்த்தத்தைப் பெறுவதை மொழிவரலாற்றாசிரியர்கள் இழிபொருளாக்கம் என்கிறார்கள். உதாரணமாக சேரி என்ற சொல். நல்ல அர்த்தத்தைப் பழங்காலத்தில் பெற்றிருந்த இந்தச் சொல் இப்போது இழிவழக்காக ஆகிவிட்டது. அதேபோலத்தான் நாற்றம் என்ற சொல். நாற்றம் என்றால் பழந்தமிழில் நறுமணம். இப்போது துர் நாற்றம்தான்! இன்றைய தமிழில் நாற்றம் மிகுந்த நங்கையின் கூந்தல் என்று வருணிக்கமுடியுமா, பாருங்கள்!)

நமது தொலைக்காட்சிகள், திரைப்படங்களும் சென்னை மொழியைப் பிரபலப்படுத்துகின்றன. உதாரணமாக, இது "ஜுஜுபி மேட்டர்பா" என்பார்கள். இதென்ன ஜுஜுபி? சின்னவிஷயம் என்று பெரும்பாலும் இது பொருள்படுகிறது, ஆனால், அதற்கு மேலும் இருக்கிறது.

கொஞ்சநாளைக்கு முன்னால் ஒரு வடநாட்டு மருத்துவப் புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தேன். அதில் கர்ப்பிணிப்பெண்களுக்கு சி வைட்டமின் அதிகமாகத் தேவை, நிறைய பழங்கள் தரவேண்டும் என்று சொல்லி, தரவேண்டிய பழங்களில் ஒன்றாக ஜுஜுபி பழம் என்பதைக் குறிப்பிட்டிருந்தது.

ஆச்சரியமாகப் போய்விட்டது எனக்கு. உடனே அர்த்தத்தைத் தேடத்தொடங்கினேன்.

ஜுஜுபி என்றால் இலந்தைப் பழம்.

ஒரு விஷயத்தை இலந்தைப் பழ மேட்டர் என்று குறிப்பிடுவதற்குக் காரணம் தான் என்ன? எனக்கு உடனே பணமா பாசமா என்ற பழைய திரைப்படத்தில் வரும் "எலந்தப் பயம், எலந்தப் பயம்...செக்கச் செவந்த பயம்...இது தேனாட்டம் இனிக்கும் பயம்" என்ற 'அற்புதமான தேனிசைத் தமிழ்ப்பாடல்' (சொற்கள் எனது என்று யாரும் தயவுசெய்து சண்டைபோட வேண்டாம், கலைஞர், ராஜ், மெகா தொலைக்காட்சி நிகழ்ச்சி அறிவிப்பாளர்கள் பயன்படுத்தியவை) நினைவுக்கு வந்தது. அந்தப் பாடல் இரட்டை அர்த்தம் தொனிப்பது. எலந்தப் பயம் என்று பெண் உடலின் எந்தப்பகுதி குறிப்பிடப்படுகிறது என்று பெரிய ஆராய்ச்சி ஒன்றும் தேவையேயில்லை. ஜுஜுபி மேட்டர்பா என்று ஒருத்தர் சொல்வதில் அந்த விஷயத்தின் சின்னத்தனம், சின்னத்தனம் (சின்னமாக இருக்கும் தன்மை) இரண்டுமே வெளிவருகின்றன என்பதுதான் முக்கியம்.

ஜுஜுபி என்ற சொல் கிரேக்கச் சொல்லாம். zizuphus என்ற சொல்தான் ஜுஜுபியாகத் திரிந்தது என்று சொல்கிறார்கள். அந்தக் கிரேக்கச் சொல்லுக்கும் இலந்தைப் பழம் என்றுதான் அர்த்தம்.

இதேபோல ஒருவர் 'கில்மா மேட்டர்' என்றும் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு பெண் தன் காதலனோடு உல்லாசமாக இருந்திருக்கிறாள். அதைத்தான் அவர் கில்மா மேட்டர் என்றார். விக்கிபீடியாவில் மெட்ராஸ் பாஷை என்பதைப் பற்றிய பதிவு, 'அது சுத்தமான தமிழ்ச் சொல்' என்று பறைகிறது. கில்மா என்று பெண்கள் இப்போது பெயர் வைத்துக்கொள்கிறார்கள். கில்மா என்று பெயர்கொண்ட-திரைப்படத்தைப் பற்றிய-சில இணையதளங்களும் இருப்பதாக அறிகிறேன். ஆகவே கில்மா என்றால் சினிமா என்றுதான் நான் நினைத்திருந்தேன். இன்னொரு இணைய தளம், அதுவும் பெண்ணைக் குறிக்கும் கிரேக்கச் சொல் என்று தெரிவிக்கிறது. Gilma is a Greek feminine name which means, "A beautiful young woman, dedicated and full of life." சென்னை மொழியிலும் அது பெண்ணைப் பற்றிய விஷயம்தான்-ஆனால் மோசமான விஷயத்தை மட்டுமே அப்படிச் சொல்கிறார்கள் என்பது அதன் பிரயோகத்திலிருந்து தெரியவருகிறது.

பலபேர் சொல்திரிபுகளையும் மெட்ராஷ் பாஷையில் அடக்குகிறார்கள். அது எனக்கு உடன்பாடல்ல. அது கிளைமொழி உச்சரிப்பு பற்றிய ஆய்வில் வரவேண்டியது. உதாரணமாக, 'வீட்டருகில்' என்று சென்னைவாசிகள் சொல்லமாட்டார்கள். 'ஊட்டாண்ட' என்பார்கள். (மறுபடியும் ஓர் அருந்தமிழ்ப்பாடல்-"வா வாத்யாரே ஊட்டாண்ட நீ வராங்காட்டி நான் உடமாட்டேன்"). வீடு

என்ற சொல், 'வ'கரம் உதடு ஒட்டும் எழுத்தாக இருப்பதால் இன உதடு ஒட்டும் எழுத்தான 'உ'ஆகிறது. அதனால் வீடு, ஊடு (அல்லது வூடு) ஆகிறது. வூடு+அண்(டை)= வூட்டாண்ட. வீடு, அண்டை இரண்டுமே தூய தமிழ்ச் சொற்கள் என்பதைச் சொல்லவேண்டியதில்லை.

கடைசியாக ஒரு குறிப்பு. சிலபேர், ஒரு சமுதாயத்திலுள்ள உயர்ந்த விஷயங்களைப் பேசுவது மட்டுமே கலாச்சாரம் அல்லது பண்பாடு என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். எந்தச் சமுதாயத்திலும் நன்மையும், தீமையும் உண்டு. எல்லாவற்றையுமே பேசுவதுதான் நிஜமான பண்பாடு. பைபிளில் அந்தக் காலத்திலேயே கே (gay-ஓரினச் சேர்க்கையாளர்கள்) ஆசாமிகள் இருந்ததையும் அது மட்டு மிஞ்சிப்போனதனால் அந்த ஊரே அழிக்கப்பட்டதையும் பற்றிய குறிப்பு இருக்கிறது. ஓரினச் சேர்க்கையாளர்கள் இருந்தது, அக்கால யதார்த்தம். அவர்கள் அழிக்கப்பட்டதாகக் கூறுவது பின்வந்தோருடைய மன ஆறுதலுக்கான தீர்ப்பு.

(குறிப்பு 3: என் கட்டுரைகளில் பார்ப்பனர் என்ற சொல்லைப் பயன்படுத்துவதைச் சிலர் கண்டித்திருக்கிறார்கள். இன்றைக்கு பிராமணர்கள், பார்ப்பனர்கள், அந்தணர்கள் என்ற சொற்கள் ஒரு குறிப்பிட்ட ஜாதியினரைக் குறிக்க வழங்குகின்றன. இவற்றில் பிராமணர் என்ற வடசொல்லை நான் அதிகம் பயன்படுத்துவதில்லை. பார்ப்பனர் என்ற சொல்லைத்தான் அதிகமாகப் பயன்படுத்துகிறேன்.

இதில் இழிவுக்குறிப்போ, வசையோ, ஏளனமோ எதுவும் இல்லை. பழைய தமிழில் பிராமணர்களை இருபிறப்பாளர் என்பார்கள். அதே அர்த்தமுள்ள சொல்தான் பார்ப்பான், பார்ப்பனர் என்பவை.

பார்ப்பு + அ(ன்)அன் = பார்ப்பனன். பார்ப்பு என்பது பறவைக்குஞ்சு. பறவைக் குஞ்சு இருமுறை பிறக்கிறது. முட்டையாக ஒரு முறை, முட்டையிலிருந்து குஞ்சாக இன்னொரு முறை. ஆகவே இருபிறப்புடையது அது. அதுபோலவே பார்ப்பனனும் தாய் வயிற்றிலிருந்து ஒரு முறை, பிறகு உபநயனத்தின்போது மறுமுறை என இருமுறை பிறக்கிறான். ஆகவே பார்ப்பனன் அல்லது பார்ப்பான் என்றால் பறவை போல இருமுறை பிறப்பவன் என்று பொருள். இதில் தவறு அல்லது கேவலம் என்ன இருக்கிறது?

" மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடக்" கண்ணகி கோவலன் தீவலஞ்செய்து காண்பார் தம் கண் செய்த பாக்கியம் என்ன?" என்று இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் படைத்துள்ளார். அவர் என்ன பார்ப்பனர்களை இழிவுபடுத்தவா செய்தார்? மாறாக, காப்பியத்தின் இறுதியில் சேரன் செங்குட்டுவனை யாகம் செய்யச் சொல்லி அல்லவா கூறுகிறார்?

ஆனால் காலத்தின் கோலம், பயன்படுத்துபவருக்கும், பயன்படுத்தப்படுபவர்களுக்கும் அந்தச் சொல்லின் பொருளே தெரியாமல் போய்விட்டது.

உண்மையில் பிராமணர்கள் பிறரைக்குறிக்கப் பயன்படுத்தும் சூத்திரன் போன்ற சொற்களைவிடப் பார்ப்பனன் என்றசொல் மிக உயர்வுடையது.

அந்தணன் என்ற சொல் ஜாதிச் சொல் அல்ல. "அந்தணர் என்போர் அறவோர்" என்றார் திருவள்ளுவர். அறவோர் எந்த மதத்தில், எந்த ஜாதியில் இல்லை? இந்தச் சொல் ஜாதிமத பேதங்களை மீறிய சொல். தயவுசெய்து இதை ஒரு ஜாதிக்குரிய சொல்லாகக் குறுக்கிவிட வேண்டாம். வேண்டுமானால், பிரம்மத்தைத் தேடுகிறார்களோ இல்லையோ, பிராமணர் என்ற சொல்லைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.)

## 15. மீண்டும். சில தமிழ்ச் சொற்கள்

ஏனோ நாம் ஆங்கிலத்திற்கோ இந்திக்கோ தரும் மரியாதையை நமது தாய்மொழியான தமிழுக்குத் தருவதற்கு மறுக்கிறோம். தமிழர்களாகப் பிறந்தும், நமக்குள்ளேயே ஆங்கிலத்தில் பேசிக்கொள்கிறோம், இந்திக்காரனோ வடநாட்டுக்காரனோ வந்தால் விழுந்துவிழுந்து அரைகுறை இந்தியிலாவது பதில் சொல்கிறோம். ஆங்கிலத்தைக் கற்பதற்குச் செலவிடும் நேரத்தில் நூற்றில் ஒரு பங்குகூடத் தமிழுக்குச் செலவிடுவதில்லை.

பலசமயங்களில் நமது பேச்சிலும் எழுத்திலும் கையாளும் சொற்களும் தொடர்களும் ஆங்கிலத்தின் பிரதிபலிப்பாகவே இருக்கின்றன. மேலும் சிற்றிதழ்கள் பெருகிய பிறகு, அவரவர் இஷ்டத்துக்கு-மரபு கொஞ்சமும் தெரியாமல், தெரிந்து கொள்ள முயற்சியும் செய்யாமல்-சொற்களை உருவாக்கும் தன்மையும் வந்து விட்டது. ஆங்கிலத்தை இலக்கணபூர்வமாகக் கையாளுவதற்குச் செலவிடும் நேரத்தில் நூற்றில் ஒரு பங்கையும் தமிழைச் சரிவர அறிந்துகொள்வதற்குச் செலவிட மனம்வராத அலட்சிய மனப்பான்மை. பல ஆங்கிலப் பத்திரிகைகள் "உங்கள் ஆங்கிலத்தை அறிந்துகொள்ளுங்கள்" (know your English) மாதிரியான தொடர்களை வெளியிட்டு வருகின்றன. ("your" இங்கிலீஷாம், அது ஏதோ நமது

தாய்மொழி போல! It is always, and ever will be, Englishman's English only.) அதனால் தமிழைக் கையாளுகின்ற முறை பற்றிச்சற்றே தெளிவுபடுத்த வேண்டியிருக்கிறது. இங்கு இரண்டு சொற்களை மட்டும் இங்கே பார்க்கலாம்.

**1. புரிதல்-புரிந்துகொள்ளுதல்**

பலபேர் இப்போதெல்லாம் அவன் புரிந்துகொண்டான் என்பதைப் புரிந்தான் என்றே எழுதுகிறார்கள். இது தவறாகப் புரிந்துகொள்ளுதல் என்பதற்கு பதிலாக தவறான புரிதல் என்கிறார்கள். இம்மாதிரிக் கையாளுவது பிழை.

புரிதல் என்றால் **செய்தல்**. அதனால்தான் "ஆட்சிபுரிந்தான்", "தவறு புரிந்தான்" "நன்மை புரிவாயாக" என்பது போன்று அதைப் பயன்படுத்துகிறோம். "அருள் புரிவாய் கருணைக் கடலே" என்பது ஒரு பிரபலமான வர்ணத்தின் தொடக்கம். ஆனால் நான் சொன்னதை "அவன் புரிந்தான்" என்றால் அது நான் சொன்னதை அறிந்துகொண்டான் என்ற அர்த்தத்தைத் தராது, நான் சொன்னதைச் செய்தான் என்ற பொருளையே தரும்.

புரிந்துகொள்ளுதல் என்றால் ஒன்றை மனத்திற்குள் சரியான தன்மையில் வாங்கிக்கொள்ளுதல். கொள்ளுதல் என்ற சொல் மிகை என்று கருதி இப்படிப் புரிதல் என்றே கையாளுகிறார்கள் போலும்!

பழையகாலத்தொடர் (சிலப்பதிகாரம்) ஒன்று-நலம்புரி கொள்கை நான்மறையாளர்....இங்கே நலம்புரிகொள்கை என்பதற்கு நல்லதைச் செய்கின்ற கொள்கை உடைய என்று தான் பொருள்.

உன்னுடைய புரிதல் தவறு என்றால் அர்த்தம்- your doing is not correct.

உன்னுடைய புரிந்துகொள்ளுதல் தவறு என்றால் அர்த்தம்- your understanding is not correct. ஆங்கிலத்தில் understanding என்ற சொல் இருக்கிறது. புரிந்துகொள்ளுதலில், கொள்ளுதலை விட்டுவிட்டதுபோல, understanding-இல் under-ஐ விட்டுவிடுவார்களா? (வெறும் ஸ்டேண்டிங் வேறு, அண்டர்ஸ்டேண்டிங் வேறு என்பது உங்களுக்கு நன்றாகவே தெரியும். அதுபோலத்தான் புரிதல் வேறு, புரிந்துகொள்ளுதல் வேறு.)

**2. எதிர்மறை-நேர்மறை**

உடன்படுதல் என்ற அர்த்தத்தில் இக்காலத்தில் நேர்மறை என்ற சொல்லைக் கையாளுகிறார்கள். "இது நேர்மறைக் கூற்று" என்கிறார்கள். "அவன் நேர்மறையாகப் பேசினான்" என்கிறார்கள். இவை "இது உடன்பாட்டுக்கூற்று", "அவன் உடன்பட்டு (அல்லது ஒப்புதலோடு) பேசினான்" என்று வரவேண்டும்.

பாசிடிவ்-நெகடிவ் போலத் தமிழிலும் இருக்கவேண்டும் என்று கருதி எதிர்மறைக்கு எதிராக நேர்மறை என்ற சொல்லை

உருவாக்கிவிட்டார்கள் போலும்! தமிழ் மரபு உடன்பாடு, எதிர்மறை என்பதுதான். அவன் உடன்பட்டுப் பேசினான், எதிர்மறையாகப் பேசினான். அவன் நேர்மறையாகப் பேசினான் என்றால் தவறு.

எதிர்மறை-என்பது எதிராக மறுத்துரைப்பது என்ற தொடரிலிருந்து உருவாகிறது.

மறுப்பது என்பது இங்கே "மறை" என்றாகிறது. மறை என்றால் கூற்று என்றோ, வேதம் என்றோ அர்த்தமில்லை. ("மறைவாக வை", "மறைத்துக்கொள்" என்று ஓர் அர்த்தம் இருக்கிறது.) அதனால் 'நேர்மறை' என்றால், "(ஓர் ஆளை) நேராக மறுப்பது", 'எதிர்மறை' என்றால் "(ஓர் ஆளை) எதிராக மறுப்பது" என்றுதான் பொருள்கொள்ளமுடியும். (துரதிருஷ்டவசமாக, இரண்டுமே ஒன்றுதான்!)

# 16. தமிழன் என்றொரு இனமுண்டு, தமிழ்ப்பெயர் வைக்கா மனமுண்டு

"தமிழன் என்றொரு இனமுண்டு, தனியே அவர்க்கொரு குணமுண்டு" என்று பாடினார் நாமக்கல் கவிஞர் இராமலிங்கம். அந்தத் தனிப்பண்பு என்ன என்று நீண்டநாள் சிந்தித்துப் பார்த்ததுண்டு. கடைசியில், என் சிந்தனையில், அது ஓர் எதிர்மறைப் பண்பாகத்தான் இருக்கிறது. "வந்தாரை வாழவைக்கும் தமிழ்நாடு" என்று ஒரு சொலவடை வழங்கிவருகிறது. வந்தாரை வாழவைப்பது மட்டுமல்ல, **வந்தவர்கள் கலாச்சாரத்தையும் தங்களதாக ஏற்றுக்கொண்டு தங்கள் சொந்தக் கலாச்சாரத்தைக் கோட்டைவிடுவதுதான் தமிழனின் தனிப்பண்பு.**

வடமொழிக்கும் அதன் இலக்கிய இலக்கணத்துக்கும் தத்துவ வளத்திற்கும் தமிழ் எவ்வளவோ தொண்டு செய்திருக்கிறது என்பது நாடறிந்த உண்மை. இந்தியாவின் தலைசிறந்த தத்துவஞானிகளில் இருவர் தமிழகத்தில் தோன்றியவர்கள் (ஆதிசங்கரரும் இராமாநுஜரும்-ஆதிசங்கரர் தோன்றிய காலடி இன்று கேரளா என்று கூறப்பட்டாலும் அந்தக் காலத்தில் சேரநாடுதான்.) கும்பகோணத்திலும் காஞ்சிபுரத்திலும் இருந்த வடமொழி அறிஞர்கள் (இவர்கள் எல்லாரும் பிறப்பினால் தமிழர்கள்தான்)

தமிழில் இருந்த வளமான நூல்களை எல்லாம் (அன்று சமஸ்கிருதம் இந்தியாவின் பொதுமொழி என்று கருதப்பட்டதால்) சமஸ்கிருதத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்தார்கள், சொந்தமாகவும் எழுதினார்கள். சாணக்கியர், பரதர் முதற்கொண்டு பல ஞானிகளும் தமிழகத்தில் தோன்றியவர்கள்தான்.

இந்த அளவுக்கு வடமொழிக்குத் தொண்டு செய்த இனத்தைப் பார்த்துத்தான் இன்று சிலர், இனவெறி கொண்ட மக்கள் என்கிறார்கள்.

சமஸ்கிருதத்துக்கு மட்டுமல்ல, விஜயநகர ஆட்சியில் இருந்ததால் கன்னடம், தெலுங்கு முதலிய பாஷைகளுக்கும் தமிழர்கள் எவ்வளவோ தொண்டு செய்திருக்கிறார்கள். தமிழுக்குக்கூட அவர்கள் பாடுபட்டதில்லை. மாஸ்தி வேங்கடேசரும், உள்ளூரும் தமிழர்களே அல்லவா? இப்படிப்பட்ட மக்களைப் பார்த்துத்தான் இனவெறி கொண்ட மக்கள் என்கிறார்கள் சிலர்.

நம் தமிழகத்து ஆர்.கே. நாராயணையும், ஏ.கே. இராமானுஜனையும்கூட கன்னடப் பிரதேசத்தில் வாழ்ந்ததால் அவர்கள் எழுத்தாளர்கள் என்று முறையற்ற சொந்தம் கொண்டாடுகிறார்கள் அவர்கள்.

இந்த ஏமாளித் தமிழக மக்களைப் பார்த்துத்தான் மொழிவெறி, இனவெறி பிடித்தவர்கள் என்கிறார்கள் சிலர்.

எல்லா இன மக்களும் அவரவர் சொந்த மொழியில்தான் பெயர்வைப்பார்கள், பேசுவார்கள், பாடுவார்கள், கவிதை கதை முதலிய இலக்கியங்களை வளர்ப்பார்கள். இதில் என்ன தவறு இருக்கிறது? எந்த ஆங்கிலேயனைப் பார்த்தாவது நீ ஜேம்ஸ் என்று பெயர் வைத்துக்கொள்ளாதே, வாஞ்சிநாதன் என்றுதான் பெயர் வைத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லமுடியுமா? ஆங்கிலப் பாட்டைவிட்டு நீ இந்தியில் அல்லது ரஷ்யனில்தான் பாடவேண்டும் என்று சொல்ல முடியுமா?

ஆனால் தமிழில் பெயர் வைத்துக்கொண்டால் மட்டும், தமிழில் பேசினால் மட்டும், தமிழில் பாடு என்று கேட்டால் மட்டும் அது குறுகிய மொழி வெறியாம். இப்படிப்பட்டவர்களைப் பக்கத்திலுள்ள பெங்களூருக்கோ மைசூருக்கோ அனுப்பினால் போதும், நீ உன் மொழியில் (அங்கே கன்னடம்) பேசாதே, பாடாதே, பெயர் வைத்துக்கொள்ளாதே என்றால் போதும், உதை வாங்குவார்கள்.

ஏன் தமிழ்நாட்டில் மட்டும் இப்படிப்பட்ட மக்கள் இருக்கிறார்கள் என்று தெரியவில்லை. இதுதான் தமிழனின் தனிப்பண்பு போலும்.

அபர்ணா என்ற சொல்லுக்கு ஆடையற்றவள் என்று ஒருவர் பொருள் சொன்னால் உடனே அது பார்வதி என்ற தெய்வத்தின் பெயராயிற்றே எப்படிச் சொல்லலாம் என்று குதிக்கிறார் ஒருவர். தெய்வம் எந்த ஆடை அணிந்திருந்தது என்று அவர் போய்ப் பார்த்துவிட்டுவந்து

சொல்லட்டும். தெய்வத்தை அவள் அவன் என்றுகூடச் சொல்லக்கூடாது 'தத்'-அது என்றே சொல்லவேண்டும் என்பதுதான் நமது வேதாந்த மரபு. "ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" என்று இறைவனின் உருவமற்ற, நாமமற்ற, பண்புகளற்ற (நிர்க்குணத்) தன்மையைப் பாடினார் மாணிக்கவாசகர்.

அதெல்லாம் போகட்டும்; அபர்ணா கதைக்கு வருவோம். பர்ண என்றால் இலை.

இலைகளால் வேயப்பட்ட குடிலைப் பர்ணசாலை என்றார்கள் (இதுவும் இலை அணிந்த வீடுதான், இலை தின்னும் சாலை அல்ல). பர்ணா-இலை உள்ளவள், இலை ஆனவள், இலையை அணிந்தவள். அபர்ணா என்றால் இலை ஆகாதவள், இலையை அணியாதவள். (இலையை உண்ணாதவள் என்று வலிந்து பொருள் சொல்கிறார்கள் இங்கே.) பழங்காலத்தில் பெண்கள் தழையாடை, இலையாடை அணிவது மரபு. இது வடநாடு முதல் தென்னாடு வரை உள்ள பழக்கம்தான். குறிஞ்சிப்பாட்டில்கூட, தலைவியும் அவள் தோழியும் சுனையில் நீராடிவிட்டு, ஆங்காங்கு கிடைத்த இலை தழைகளைக் கொய்து உடுத்திக் கொண்டார்கள் என்று ஒரு நீண்ட பகுதி வருகிறது. இவர்கள் எல்லாம் 'பர்ணா'க்கள். அதாவது இலை அணிந்தவர்கள்.

அபர்ணா என்றால் இலைகூட அணியாதவள், அதனால் நிர்வாணி என்று பொருள் கொள்வதில் என்ன தவறு?

அபர்ணா என்ற பெயர் பார்வதியைக் குறிக்கும் என்பதற்கு ஒரு கதை சொல்கிறார்கள். பார்வதி சிவனை மணப்பதற்கு இமவான் மகளாகப் பிறந்து மன்மதன்-ரதியை அனுப்பிப் பார்த்தாள். கதை நடக்கவில்லை. தட்சன் மகளாகப் பிறந்து தாட்சாயணி ஆகியும் எரிந்துபோனாள். அதனால் கடைசியாக உணவு ஏதுமின்றி (அதாவது இலைகூட உண்ணாமல்) தவம் செய்ததால் அபர்ணா என்று பெயர் பெற்றாளாம் பார்வதி. ஒரு கனிகூட உண்ணாமல் என்றால் நாம் ஒப்புக்கொள்ளலாம். ஒரு இலைகூட (அதாவது கீரை என்று அர்த்தம் கொள்ளவேண்டுமாம்) உண்ணாமல் இருந்ததால் பார்வதி அபர்ணா ஆனாளாம்.

தமிழகத்தில் பலபேரும் பெயரின் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டா பெயர் வைக்கிறார்கள்? ஏதோ வழிவழியாக வருகிறது, அவ்வளவுதான். நல்ல தேனாக இனிக்கும் தமிழ்ப்பெயர்களை வைக்கலாமே, இப்படிச் சுற்றலில்விடும் (ambiguous) வடமொழிப்பெயர்களை ஏன் வைக்கவேண்டும் என்று ஒருவர் கேட்பதில் என்ன தவறு இருக்கிறது? தமிழ்நாட்டிலேயே தமிழ்ப் பெயர்களை வைக்கப்போவதில்லை என்றால், வேறு எந்த நாட்டில் போய் வைத்துக்கொள்ளச் சொல்வது?

# 17. தமிழ்த் திரைப்படப் பாடல்கள்

திரைப்படப் பாடல்கள் எல்லாம் கவிதை என்று எத்தனையோ பேர்-கல்லூரிப் பேராசிரியர்கள், நன்கு கற்றவர்கள் உள்பட-நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இதற்கு அவர்கள்மேல் தப்பில்லை. காலம் காலமாக நாம் இலக்கியத்தை-செய்யுள் வடிவில் எழுதப்பட்டதை எல்லாம் பாடல் என்றே சொல்லி வந்திருக்கிறோம். உதாரணமாக "இந்தச் சங்கப்பாடல் கடினமாக இருக்கிறது" என்போம்.

ஆனால் பாடல் வேறு, கவிதை வேறு. இது காலம்காலமாக-நான் ஏறத் தாழ இருபத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாகச் சொல்லிவரும் கருத்து. அது மட்டுமல்ல, செய்யுள் என்பதும் வேறுதான். ஒரு நூத்திஐம்பது வருஷங்கள் முன்னால் இந்தப் பிரிவுகளுக்கெல்லாம் பெரிய அர்த்த வேறுபாடு இல்லை. ஆனால் ஆங்கிலக் கல்வி வளர்ந்து, ஆங்கில முறையைப் பின்பற்றி நாம் புதுக்கவிதை, மரபுக்கவிதை என்றெல்லாம் ஆளத்தொடங்கிய பிறகு, முன்புபோலப் பேசினால் அர்த்தமில்லை.

முதலில் செய்யுள் என்ற சொல். இதை நாம் பாசிடிவாகவோ (உடன்பாடாகவோ) நெகடிவாகவோ (எதிர்மறையாகவோ) எடுத்துக்கொள்ளலாம். செய்யுள் என்றால் செய்யப்பட்ட ஒன்று என்று அர்த்தம். அது கவிதையாகவும் இருக்கலாம், உரைநடையாகவும்

இருக்கலாம், புதுக்கவிதையாகவும்கூட இருக்கலாம். ஆனால் பொதுவழக்கின்படி, யாப்பின்படி அமைந்த, கவிதையாகாமல் போய்விட்ட ஒன்றிற்குத்தான் செய்யுள் என்று பெயர்.

அண்ணன் என்பவன் தம்பிக்கு மூத்தவன்

திண்ணை என்பது தெருவிலே உள்ளது

கண்ணன் என்பவன் கண்ணிரண்டு உள்ளவன்

வெண்ணெய் என்பது பாலினில் விளைவதே.

இது செய்யுள் என்பதற்கு பேராசிரியர் கைலாசபதி தந்த எடுத்துக்காட்டு. இதில் யாப்பு மிக நன்றாக அமைந்திருக்கிறது. ஆனால் இதைக் கவிதை என்று நமது நண்பர்கள் கருதமாட்டார்கள் என்பது நிச்சயம்!

கவிதை என்பது ஓர் அனுபவத்தை மனத்திற்குள் விதைத்துச் சிந்திக்கத் தூண்டுகின்ற ஒன்று. அது யாப்பில் அமைந்திருக்கலாம், யாப்பில் இல்லாமலும் இருக்கலாம். யாப்பில் இல்லாததைப் புதுக்கவிதை என்றும் மற்றதை மரபுக் கவிதை என்றும் சொல்லும் வழக்கம் ஏற்பட்டுவிட்டது. ஒரு மிகச் சிறிய கவிதை இதோ-

இருப்பதற்கென்றுதான்

வருகிறோம்

இல்லாமல்

போகிறோம்.

வருகிறோம்-போகிறோம் என்ற இருமை எதிர்வையும், இருப்பதற்கென்றுதான்-இல்லாமல் என்ற முரண்பாட்டையும் பாருங்கள். எவ்வளவு அற்புதமாகச் சொல்ல வந்ததைச் சொல்லிவிடுகிறது!

இந்த இரண்டிலிருந்தும் வேறுபட்டது பாட்டு. பாட்டு, இசை என்ற கைத்தடி இல்லாமல் நடக்கமுடியாது. ஸ்வரம் மாதா, லயம் பிதா என்பார்கள். ஸ்வரங்களால் ஆன ராகத்தைப் பாட்டு கொண்டிருக்கவேண்டும், லயம் என்ற தாளத்திற்கேற்ப அது நடக்கவேண்டும்-அதாவது பாடப்பட வேண்டும்.

கவிதை பாடப்படவேண்டிய அவசியம் இல்லாதது. கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக என்ற திருக்குறள் கவிதையை-இது நிச்சயம் கவிதை-எந்த ராகத்தில் பாடுவது? பாடுவதுதான் தேவையா? யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற சங்கக்கவிதையை எந்த ராகத்தில், எந்தத் தாளத்தில் பாடுவது? இவற்றைப் படித்து அனுபவிப்பது, உணர்வதுதான் முக்கியம்.

திரைப்படப் பாடல்கள் எல்லாம் பாட்டுகள்தான். பாட்டுகளில் வார்த்தை இல்லாத இடத்தை லாலாலாலா, ராராரீரீ, டபக் டபக்கு டபக்குதான், சிங்கிரி சிச்சான் சிச்சான் ங்ங்கொய்யா என்று எதையாவது போட்டு நிரப்பிவிடுவார்கள். பழைய பாகவதர்கள் என்றால் ஆலாபனையிலேயே இழுத்துவிடுவார்கள். ஆக, இசைக்காக, தாளத்துக்காக எழுதப்பட்டதைப் பாட்டு என்கிறோம். பழைய காலத்திலேயே ஜாலிலோ ஜிம்கானா டோலிலோ கும்கானா ஆளுங்கோ ரவுண்டானா அசந்துட்டா டஹல்தானா என்று திரைப்படப் பாட்டு எழுதியிருக்கிறார் தஞ்சை ராமையதாஸ்.

ஆகவே பாட்டு வேறு, செய்யுள் வேறு, கவிதை வேறு என்று தெரிந்து கொள்வது நல்லது. பாட்டு எழுதுபவர்களைக் கவிஞர்கள் என்று சொல்வது வழக்கமில்லை. லிரிசிஸ்டு என்பார்கள் ஆங்கிலத்தில். பொயட் என்று அந்தஸ்து தரமாட்டார்கள். நம் ஊரில்தான் பாட்டு எழுதுபவன் எல்லாருமே கவிஞன் என்று போட்டுக்கொள்கிறான்.

நாம் இப்போதெல்லாம் திரைப்படப் பாடல்களுடனே வாழ்ந்து திரைப்படப் பாடல்களுடனே சாகிறோம். குழந்தை பிறந்த சில நாட்களுக்குள்ளாகவே சினிமாப்பாடல் பழக்கமாகிவிடுகிறது.

பாட்டு கவிதை இல்லை என்று சொன்னதால் கெட்டது என்று அர்த்தமில்லை. நம் திருவையாற்றில், பிறகு சென்னையில் ஆண்டுக்கு ஒருமுறை பெரீய்ய சங்கீதத் திருவிழா நடத்துகிறார்களே,

எதற்கு? எல்லாம் தியாகராஜ சுவாமிகள் செய்த தெலுங்குக் கீர்த்தனைகளுக்கு (பாடல்களுக்கு)த்தான்.

அப்பர் சுவாமிகள், திருஞான சம்பந்தர் காலம் தொடங்கி, வள்ளலார் வரைக்கும் இறைவன்மீது பக்திப்பாடல்கள் பாடியிருக்கிறார்கள். வள்ளலார் கீர்த்தனைகளும் பாடியிருக்கிறார். பாரதியார் பாடல்கள் இயற்றியிருக்கிறார். பாரதிதாசன் இசையமுது இயற்றியிருக்கிறார். இவையெல்லாம் நல்ல பாட்டுகள் (அதாவது ஏதோ ஒரு இலட்சியத்தைக் கொண்டு அமைந்த பாடல்கள்) என்று சொல்லலாம்.

இலட்சியமில்லாத பாட்டுகளையும், பாட்டு எழுதுபவன் வாழ்க்கைக்குச் சம்பந்தம் இல்லாத பாட்டுகளையும் நான் மோசமான பாட்டுகள் என்பேன்.

வானம் எனக்கொரு போதிமரம்

நாளும் எனக்கது சேதி தரும்

ஆகா, என்ன அற்புதமான வரிகள், எவ்வளவு அற்புதமான கருத்து என்று பாராட்டத் தொடங்கிவிடுவீர்களே? இதை எழுதியவர் யாரென்று உங்களுக்குத் தெரியும்.

இது உண்மையான, இலட்சியப்பாட்டு என்றால், அந்தப் பாடலாசிரியருக்கு வானம் என்ற போதிமரம் நாளும் தந்த சேதி

என்ன? கோடிகோடியாகக் குவித்துக்கொள், காற்றுள்ளபோதே தூற்றிக்கொள் என்பதா? இந்த ஜனங்கள் எல்லாம் முண்டங்கள், நன்றாக இவர்களை எந்த உருவகத்தையாவது போட்டு ஏமாற்று என்பதா?

அதனால்தான் இதுபோன்றவற்றைப் போலிப்பாட்டுகள், ஏமாற்றுப் பாட்டுகள், வணிகப்பாட்டுகள் என்கிறோம். அந்த நேரக் கவர்ச்சிதான் இதற்கெல்லாம் முக்கியம். அதற்குமேல் ஒன்றுமில்லை.

தமிழ்த் திரைப்படப் பாட்டுகளின் மிக முக்கியமான குணம், பெண்அடி மைத்தனத்தை உருவாக்குவது. சிறு குழந்தை முதலாகவே திரைப்படப் பாடல்கள் மனத்தில் நம்மை அறியாமல் பதிந்து நம்மை ஆட்சிசெய்துகொண்டே இருப்பதால், பெண்அடிமைத்தனம்-அதாவது பெண்களை அடிமைகளாக நினைப்பது, இரண்டாந்தர மனிதர்களாக நினைப்பது என்ற பண்பு ஆண்களுக்கு இயல்பாகவே வந்துவிடுகிறது. பெண்களுக்குத் தங்கள் அடிமைத்தனத்தை இது இயல்பானதுதான் என்று ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மை வந்துவிடுகிறது.

இதற்கு விதிவிலக்கான திரைப்படப்பாடல்கள் மிகக் குறைவு. ஒரு சதவீதம் தேறுவதுகூடக் கடினம்.

உதாரணத்திற்கு சில பாடல்களை நாம் பார்க்கலாம். நான் எங்கள் காலத்திலிருந்து (ஓர் ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன்னாலிருந்து) எங்களை பாதித்த-நல்ல இனிமையான பாடல்கள் என்று கருதப்பட்டவற்றிலிருந்து எடுத்துக்கொள்கிறேன்.

1968இல் வெளிவந்த ஒரு பாட்டு-நான் மலரோடு தனியாக ஏன் இங்கு வந்தேன், என் மகராணி உனக்காக ஓடோடி வந்தேன், நீ இல்லாமல் யாரோடு உறவாட வந்தேன்....என்று செல்வது. உங்களில் பலபேருக்குத் தெரியும் இது.

பலபேர் இது ஒரு நல்ல காதல்பாட்டு என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு காதலன் தன் காதலியைக் கேள்வி கேட்பது போலவும், காதலி அதற்கு விடை சொல்வதுபோலவும் அமைந்திருக்கிறது. காதலன் கேட்கிறான்-

நீ வருகின்ற வழிமீது யார் உன்னைக் கண்டார்?

உன் வளைகொஞ்சும் கைமீது பரிசென்ன தந்தார்?

உன் மலர்க்கூந்தல் அலைபாய அவர் என்ன சொன்னார்?

உன் வடிவான இதழ்மீது பரிசென்ன தந்தார்?

(இதையெல்லாம் இந்தக் காதலனே செய்ததாக எடுத்துக்கொள்ளவேண்டுமாம், இது மரபாம். போய் உங்கள்

காதலியிடம் அல்லது மனைவியிடம் இப்படிக் கேட்டுப்பாருங்கள். செருப்பு பிய்ந்துபோய்விடும்.)

அந்தக் காவியக் காதலி அவ்வளவு சொரணை உள்ளவள் அல்ல. அவள் சற்றும் கோபமில்லாமல் சொல்கிறாள்-

பொன் வண்டொன்று மலரென்று முகத்தோடு மோத

நான் வளைகொண்ட கையாலே மெதுவாக மூட

என் கருங்கூந்தல் கலைந்தோடி மேகங்களாக

நான் பயந்தோடி வந்தேன் உன்னிடம் உண்மை கூற

என்கிறாள். உண்மை கூறவாம், நினைத்துப்பாருங்கள், எவ்வளவு மோசம் என்று.

இன்னும் பழங்காலப் பாட்டு ஒன்று.

நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேசவேண்டும்

நான் காணும் உலகங்கள் நீ காண வேண்டும்

ஏம்பா, பெண்ணுக்குச் சிந்திப்பதற்கும் தனக்கென்று ஓர் உலகத்தை உருவாக்கிக் கொள்வதற்கும் உரிமை கொஞ்சம்கூட இல்லையா?

புரட்சித்தலைவர்(!) பாட்டுகளில் பெண்அடிமைத்தனம் மிகப்பச்சையாகவே இருக்கும். விவசாயி திரைப்படத்தில் வரும் "இப்படித்தான் இருக்கவேண்டும் பொம்பளே-இங்கிலீசு படிச்சாலும் இன்பத்தமிழ் நாட்டிலே" என்ற பாட்டைக் கொஞ்சம் கேட்டுப்பாருங்கள். அல்லது "புத்தம் புதிய புத்தகமே உன்னைப் புரட்டிப்பார்க்கும் புலவன் நான்" என்ற பாட்டைக் கேட்டுப்பாருங்கள். இதில் புரட்டிப்பார்ப்பது, பள்ளியறை என்ற சிலேடை (இரண்டு அர்த்தம் தொனிக்கும் சொற்கள்) வேறு.

இப்படி புத்தகம், கித்தகம் என்ற நல்ல சொற்கள்கூட இல்லாமல்போய், இப்போது சினிமாப் பாட்டுகளில் பெண்ணைக் கட்டையாக்கி, ஃபிகர் ஆக்கிவிட்டார்கள். சற்றும் கூச்சமில்லாமல் நாட்டுக்கட்டே நாட்டுக்கட்டே என்று பெண்ணை விளிக்கிறான் ஆண். பெண்ணும் சற்றும் தயக்கமில்லாமல் அதை ஏற்றுக் கொள்கிறாள். போய் உண்மையாகவே கிராமத்தில் விளித்துப்பாருங்கள். அடி முறத்தினாலா, செருப்பினாலா, விளக்குமாற்றாலா என்று தெரியும்.

ஆனால் இதையெல்லாம் பொதுஇடத்தில்-பப்ளிக்காக-ஏற்றுக்கொள்ளும், பாடும் மனம்-திருவிழாவில் ரிகார்டு போடும் மனப்பான்மை எப்படி உண்டாயிற்று? அதுதான் ஈவ்டீசிங் முதலிய கொடுமைகளுக்குக் காரணம். இப்படிப் பாடல் எழுதுபவர்களை முதலில் எதனால் அடிக்கலாம் சொல்லுங்கள்.

# 18. பறக்கின்றன பட்டங்கள்!

ஏறத்தாழ பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு இருக்கலாம். திருச்சியில் கல்லூரி வாழ்க்கை. அந்த ஆண்டு பிப்ரவரி மாதம். எங்கு பார்த்தாலும் போஸ்டர்கள். "மாவீரன் நெப்போலியனே வருக". எப்போது பிரெஞ்சு மாவீரன் நெப்போலியன் உயிர்த்தெழுந்தார் என்று எனக்குச் சந்தேகம். என் மாணவர்கள் என் அறியாமையைக் கண்டு சிரித்தார்கள். "சார், இந்த நெப்போலியன் நடிகர். நம் திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியின் பழைய மாணவர். இந்த ஆண்டு விழாவுக்கு செயின்ட் ஜோசப் கல்லூரியில் அவரை அழைத்திருக்கிறார்கள்." நான் கேட்டேன், "இவர் நடிகர்தானே? எப்படி மாவீரன் ஆனார்?" வீரனாக நடிப்பவனெல்லாம் மாவீரனா? வள்ளலாக நடித்தால் வள்ளலா? செத்துப் போவதாக ஒருவன் நடித்தால் உண்மையிலேயே செத்துப்போய்விட்டானா? இதுகூடப் புரியாமலா படம் பார்க்கிறார்கள்? தொழுநோயாளியாக ஒருவன் நடித்தால் உண்மையிலேயே தொழுநோயாளியா அவன்? நடிப்புக்கும் நிஜ வாழ்க்கைக்கும் என்னதான் சம்பந்தம்?

ஆனால் இப்படித்தான் அரசியல்வாதிகளும் நடிகர்களும் தங்கள் பிம்பத்தைக் கட்டுகிறார்கள். போலியை நிஜம் என்று நம்பவைக்கிறார்கள்.

மிகைப்படுத்தல் நம் வாழ்க்கையின் எல்லா இடங்களிலும் ஊறிக்கிடக்கிறது. தமிழர்களுக்குத் தாழ்வு மனப்பான்மை அதிகம் என்பது இதற்கு ஒரு காரணம். இல்லாவிட்டால் வெள்ளைத்தோல் இருந்ததாலேயே நம் நாட்டுக்குள் நுழைந்த ஆங்கிலேயர் பிரெஞ்சுக்காரர் போன்றவர்களை துரை என்று அழைத்திருப்பார்களா? அவர்களுக்கு அடிமைப்பட்டிருப்பார்களா? சாதாரணப் பூசாரிகளைக் கூட சாமி என்று அழைப்பவர்கள்தானே நாம்?

பொது அரங்கில் தோன்றி விட்டால் சாதாரணமானவர்களைக்கூட மிகப்பெரிய அடைமொழிகள் தந்து அழைப்பது அதனால்தான் சாத்தியமாகிறது. மேடையில் அமர்ந்திருப்பவர் ஓரிரு கவிதைகள் எழுதியிருப்பார். வரவேற்பவர் கூசாமல் அவரைத் தமிழ்நாட்டின் மாபெரும் கவிஞர், எழுத்தாளர் என்பார். மேடையில் மட்டும்தான் என்றல்ல, பத்திரிகைகளும் இதற்குத் துணைபோகின்றன. அடுத்த நாள் செய்தி வெளியிடும் உள்ளூர் செய்தித்தாள் மாபெரும் கவிஞர் இன்னார் ....தலைமை தாங்கினார் என்றே செய்தி வெளியிடும். பிறகு அவரே எல்லா இடங்களிலும் அதைப் போட்டுக் கொள்வார்.

இப்படித்தான் ஒருகாலத்தில் டாக்டர் என்ற பட்டத்தைக் (கௌரவத்திற்காக அளிக்கப்படுவது) கொஞ்சமும் படிக்காதவர்களெல்லாம் போட்டுக்கொண்டு சிரிப்பாய்ச் சிரித்தது.

அரசியல்வாதிகளும் பொதுவாழ்க்கையில் உள்ளவர்களும் எவ்விதத் தகுதியும் இல்லாமல் டாக்டர் என்று தங்கள் பெயருக்கு முன்னால் கூசாமல் போட்டுக்கொள்வதைப் பார்த்ததனால், ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் வாங்கியவர்கள் முனைவர் என்றே தங்களை அழைத்துக்கொள்ளலானார்கள். (நல்லவேளை, இதில் மருத்துவத்தொழில் சார்ந்தவர்களைச் சேர்த்துக் குழப்பவில்லை.)

நல்ல கவிதைகளே எழுதி அறியாத ஒருவர் தன்னைப் பெருங்கவிக்கோ என்று தானே அழைத்துக்கொண்டது மிக நன்றாக எனக்குத் தெரியும். கூசாமல் தன் நூல்களிலும் அப்படியே போட்டுக் கொள்வார். பிறகு எல்லாரும் அப்படியே அவரை அழைக்கத் தொடங்கிவிட்டார்கள்.

திரைப்பட நடிகர்களைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை. எனக்கு ஏற்படும் வியப்பு, யார் இந்த அடைமொழிகளை எப்போது தருகிறார்கள் என்பதுதான். திடீர் திடீரெனப் பட்டங்கள். அடைமொழிகள் சேர்க்கப்பட்டு விடுகின்றன. உதாரணமாக, எந்தப் படத்திலிருந்துதான் வைகைப் புயல், இளைய தளபதி போன்ற அடைமொழிகள் சேர்க்கப்பட்டன? ஒருவேளை இவர்களின் இரசிகர் மன்றங்களைக் கேட்டால் தெரியவரும் போலும். ஏன் சேர்க்கிறார்கள், என்ன பலன் இவர்களுக்கு என்பதெல்லாம் என்னைப் போன்ற மரமண்டைகளுக்கு எளிதில் புரிவதில்லை.

ஒருவேளை நடிகர்களும் அரசியல்வாதிகளும் (முன்பு உதாரணம் காட்டிய கவிஞரைப்போலத்) தாங்களே சொல்லி ஏற்பாடு செய்து இம்மாதிரி பட்டங்களையும் அடைமொழிகளையும் போடச்செய்கிறார்கள் என்றுதான் தோன்றுகிறது. அவரவர்களுக்கு என எழுதப்படும் திரைப்படப் பாடல்களைக் கேட்கும் போதும் (சூப்பர் ஸ்டாரு யாருன்னு கேட்டா சின்ன குழந்தையும் சொல்லும்.., உலகநாயகனே....) அந்தந்தப் பட்டப்பெயராலே நடத்தப்படும் தொலைக் காட்சிச் சேனல்களைப் (கேப்டன் டிவி...) பார்க்கும்போதும் இது ஊர்ஜிதமாகிறது.

இந்த வியாதி அநேகமாகத் திரைப்படங்களில் சிவாஜி கணேசன், எம்.ஜி.ஆர். காலத்திலிருந்துதான் ஆரம்பமாகிறது. அரசியலில் எம்.ஜி.ஆரின் காலத்திலிருந்து என்று உறுதியாகவே சொல்லலாம். ஏறத்தாழ 1968-70 காலம் வரை அநேகமாக எம்.ஜி.ஆரின் எல்லாத் திரைப்படங்களிலும் புரட்சி நடிகர் என்ற அடை மொழியை மட்டுமே காணலாம். பிறகு திடீரெனப் புற்றீசல்போல, புரட்சித் தலைவர், மக்கள் திலகம், பொன்மனச் செம்மல், கொடை வள்ளல் இப்படிப் பெருகிப்போயின. நல்ல வேளையாக சிவாஜி கணேசனுக்கு இப்படிப் பெருகவில்லை. நடிகர் திலகம் ஒன்றுதான் நிலைத்தது.

புரட்சித்தலைவர், புரட்சித்தலைவி இதெல்லாம் பழையவை. இதுவே சிந்திக்கும் மனத்திற்கு ஏற்றுக்கொள்ளக் கஷ்டமாகத்தான் இருக்கும்.

எந்தப் புரட்சியை இவர்கள் தலைமை தாங்கி நடத்தினார்கள்? எந்தப் புரட்சியைப் பற்றியாவது குறைந்தபட்சம் படித்தாவது இருப்பார்களா? புரட்சி என்றால் படித்தவர்களுக்கு ரஷ்யப் புரட்சி, சீனப்புரட்சி, பிரெஞ்சுப்புரட்சி என்றுதான் நினைவுக்கு வரும். பட்டம் தருபவர்களுக்கோ (பெறுபவர்களுக்கும்தான்) சாரதாஸ் புரட்சி, ஜெயச்சந்திரன் டெக்ஸ்டைல்ஸ் புரட்சி, லலிதாஸ் ஜுவல்லரி புரட்சிக்குமேல் மனக் கண்முன் தோன்றாது என்று நினைக்கிறேன். இன்று போடப்படும் பட்டங்கள், அடைமொழிகளைப் பார்த்தால் கேலிக்கூத்தாக இருக்கிறது.

காதல் இளவரசன், சூப்பர் ஸ்டார், இயக்குநர் சிகரம் என்றெல்லாம் பட்டங்கள் சந்தி சிரிக்கின்றன. உலகின் மிகச் சிறந்த கலைத் திரைப்படங்களை எடுத்த இங்மார் பெர்க்மன், அகிரா குரோசேவா, ஃபெலினி, அவ்வளவு ஏன், சார்லி சாப்லின் முதல் ஸ்டீவன் ஸ்பீல்பெர்க் வரை, இன்றைய சிறந்த இயக்குநர்கள் வரை- இவர்களைப் போன்றவர்களையெல்லாம் இயக்குநர் சிகரங்கள் என்று யாரும் போட்டதில்லை. (அவர்களும் போடச் சொன்னதில்லை). இதற்குமேல் கேப்டன், தளபதி, இளைய தளபதி என்றெல்லாம் வேறு. எந்தப் படைக்கு அல்லது (குறைந்தபட்சம்) விளையாட்டு அணிக்குத் தலைமை தாங்கினார் இந்தக் கேப்டன்? எந்தப் படைக்குத் தலைமை தாங்கி தளபதி, இளைய தளபதி ஆனார்கள் இவர்கள்? சொந்தப்

பெயர்களே மறைந்துபோகும் அளவுக்கு இந்தப் பட்டங்கள் ஆட்சி செய்கின்றன.

இதைவிடக் கொடுமை, அன்னை, தாய், அம்மா போன்ற பொதுப் பெயர்களும் கலைஞர் போன்ற சிறப்புஅடைமொழிகளும் பட்டங்களாக மாற்றப்படுவது. என் நண்பர் ஒருவர் இலயோலா கல்லூரியிலிருந்து வெளியிடப்பட்ட சிலம்பு என்ற பத்திரிகையில் ஒருமுறை எழுதினார். "ஆழமான கருத்துகள் இல்லாமல் அலங்கார வார்த்தைகளோடும் அணிகளோடும் ஒருவர் பேசினால் அவரில் பலர் மயங்கிவிடுகின்றனர். கீழ்த்தட்டு மக்களிடம் ரொம்பவும் இயல்பாக உள்ள அழகியல் கூறுகளின் வெளிப்பாடுதான் அலங்கார வார்த்தைகளும் அணிகளும் ஆகும். உதாரணமாக, விஜயகாந்த் சண்டைபோடும்போது, வில்லனை சும்மா தோசைமாதிரி புரட்டியெடுக்கிறானுல்ல என்று இயல்பாக வெளிப்படும் வார்த்தைகள்தான் இலாபம் சம்பாதிக்க முயலும் ஊடகங்களால் புரட்சிக் கலைஞர் என்று மாற்றப்படுகிறது." இரண்டு இடங்களிலும் கோளாறு. புரட்டியெடுக்கிறான் என்று பாராட்டும் நம் சாதாரண மக்களுக்கு புரட்டியெடுப்பதும், புரட்டப்படுவதும் நடிப்பு என்று தெரியாமல் போனதென்ன? அடுத்த கோளாறு, இந்தப் பாராட்டை அடைமொழியாக மாற்றும் ஊடகங்கள், நடிகர்கள், இரசிகர் மன்றங்கள்... (இன்னும் வேறு யார் யார்?)

அந்த நண்பரே மேலும் சொன்னார்: "போலித்தன்மைகளைப் பலநிலைகளில் கொண்ட மனித அனுபவமானது, சினிமா நாயகர்கள் மற்றும் அரசியல்வாதிகளின் பேச்சிலுள்ள அப்பட்டமான போலித்தன்மைகளோடு கைகுலுக்கிக் கொள்கிறதோ என்று தோன்றுகிறது." மெய்யாகவே இருக்கலாம். ஆனால் இந்தத் தன்மை ஏன் தமிழ்நாட்டுக்கு மட்டும் (சில சந்தர்ப்பங்களில் இந்தியா முழுமைக்கும்) சொந்தமாகப் போனது? ஏன் பக்கத்திலுள்ள ஈழத்தில்கூட இந்தத் தன்மை இல்லை? போலித்தனம் என்பதென்ன தமிழனுக்கு மட்டும் தனிச்சொத்தா?

நமது நிலவுடைமை சார்ந்த அடிமை மனப்பான்மை இதற்குக் காரணம் என்றும் தோன்றுகிறது. கீழ்சாதிக்காரன் மேல்சாதிக்காரனைச் சாமி என்று கும்பிடுவதற்கும், இடுப்பில் துண்டைக் கட்டி நடப்பதற்கும் இதுதான் காரணம். கீழ்சாதியினரிடம் மட்டுமல்ல, தமிழர் எல்லாரிடமுமே இந்த மனப்பான்மை இருக்கிறது. இல்லாவிட்டால் சாதாரணமாக நீதிபதி அல்லது நடுவர் என்று அழைக்கப்பட வேண்டியவர் நீதியரசர் ஆவானேன்? எல்லாரையும் அரசராகவும் அரசியாகவும் மந்திரியாகவும் பார்த்தே நமக்குப் பழக்கம். அரசாங்கச் சேவை (அதாவது மக்கள் சேவை) யிலிருக்கும் ஒருவரைக்கூட அரசர் என்று தூக்கிவைத்தால் அப்புறம் என்ன இருக்கிறது?

அரசியல், திரைப்படம் இவற்றிற்கு அடுத்தபடியாக மக்கள் மிகவும் உயரத்தில் வைத்துப் பார்ப்பது கிரிக்கெட் நாயகர்களை. கிரிக்கெட் ஒரு சூதாட்டம். (அன்றைக்கும்தான், இன்றைக்கும்தான். இது ஏதோ ஐபிஎல் காரணமாக ஏற்பட்ட வியாதி அல்ல. அந்தக் காலத்தில் சரியாகப் பந்தை அடிக்காமல் கவாஸ்கர் போன்ற கட்டைபோட்ட நாயகர்களே காசுவாங்கிவிட்டு அப்படிச் செய்தார்கள் என்ற குற்றச்சாட்டு உண்டு. பலபேர் மீது வழக்கும் உண்டு.) பின்னணியில் கோடிக்கணக்கான ரூபாய்கள் கைமாறுவது தெரியாமல், கிரிக்கெட் நாயகர்களைத் தலைமேல் தூக்கிவைத்துக் கொண்டு கூத்தாடுவது கேலிக்கூத்து.

தலைமை வழிபாட்டை உருவாக்கும் பெருவியாதி பட்டங்களையும் அடைமொழிகளையும் சேர்ப்பது. அரசியல்வாதிகளாக இருந்தாலும் அவர்கள் நம்மால், நம் சேவைக்காகச் சில ஆண்டுகள் பதவியில் வைக்கப்படுபவர்கள். (பிரதமர் மோடியாக இருந்தாலும் சரி, உள்ளூர்க் கவுன்சிலராக இருந்தாலும் சரி.) அதிகாரிகள் என்றால் மக்களுக்குப் பணிசெய்ய (ஆங்கிலத்தில் கவுரவமாக சிவில் சர்வீஸ், பப்ளிக் சர்வீஸ் என்று சொல்லிக்கொள்வார்கள்) ஏற்பட்டவர்கள். (யூனியன் அல்லது ஸ்டேட்) பப்ளிக் சர்வீஸ் கமிஷன் எழுதி வேலைக்கு வந்தவர்கள் வேலையில் சேர்ந்தவுடனே பப்ளிக்கை மறந்துபோவது நம் நாட்டின் துரதிருஷ்டம்.

இந்தத் தலைமை வழிபாட்டினால்தான் எங்கு பார்த்தாலும் லஞ்சமும் ஊழலும் தாண்டவமாடுகின்றன. தொழிலைக் குறித்த அடைமொழிகளைச் சேர்ப்பதில் தவறில்லை. பிரதமர் மன்மோகன், பொறியாளர் நமச்சிவாயம், மின்வாரியத் தலைவர் சிவராமன் என்பதுபோல. ஆனால் மக்கள் நாயகன் பொறியாளர் நமச்சிவாயம் என்று சேர்க்காதீர்கள். அங்குதான் ஏற்படுகிறது தவறு. இனி மேலாவது இந்த நிலை மாறினால் நன்றாக இருக்கும். (மாறுவதற்கான அறிகுறிகள் தெரியவில்லை.) படித்தவர்களுக்கும், ஊடகங்களுக்கும், செய்தித் தாள்களைச் சேர்ந்தவர்களுக்கும், திரைப்படத் துறையைச் சேர்ந்தவர்களுக்கும் ஒரு வேண்டுகோள். யாராக இருந்தாலும், தயவுசெய்து யாருக்கு முன்னும் எந்த அடைமொழியையும், பட்டத்தையும் சேர்க்காதீர்கள்.

# 19. இட ஒதுக்கலும் ஈடும்-இப்படிச் செய்தால் என்ன?

(செய்பவர் யார் என்பது அடுத்த கேள்வி)

இட ஒதுக்கீட்டுக்கு எதிராக இப்போதெல்லாம் உச்சநீதி மன்றமும், பாராளுமன்ற அவைகளுமே குரல்கொடுக்கின்றன. பார்ப்பன ஊடகங்களைப் பற்றிச் சொல்லத்தேவையில்லை. ஏதோ அவர்களுக்குச் சொந்தமான படிப்பையும் வேலையையும் மற்றவர்கள் பறித்துக்கொள்வதுபோலத்தான் போராடுகிறார்கள். மருத்துவநிறுவனங்கள், எம்பிஏ படிப்புக்கான இந்திய நிறுவனங்கள், ஐஐடிக்கள் போன்றவற்றில் மாணவர்கள் ஒதுக்கீடே கூடாது என்கிறார்கள்.

முக்கியமாக இதற்குச் சொல்லப்படும் காரணம், ஒதுக்கீட்டுக்கான வருட எல்லை தாண்டிவிட்டது என்பதுதான். எத்தனையோ ஆண்டுகளாக இட ஒதுக்கீடு செயல்பட்டும் ஏன் திருப்தி ஏற்படவில்லை என்பது மேன்மக்கள் கேள்வி. இத்தனை ஆண்டுகளாக ஒதுக்கீடு இருந்தும் ஒடுக்கப்பட்டவர் நிலையில் முன்னேற்றம் ஏற்படவில்லையே என்பது நமது பதில்.

உயர்குடி மக்கள் மட்டுமே வேலை வாய்ப்பில் பெரும்பான்மை இடங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும்போது கீழுள்ள மக்களுக்கு இடம் தரவோ அவர்களைச் சமமாக நடத்தவோ முடிவதில்லை. ஒதுக்கப்படும் நிதியையும் அவர்களே கபளீகரம் செய்துவிடுகின்றனர். ஒதுக்கப்படும் நிதியில் ஏழுசதவீதம்தான் கீழ் நிலையில் இருப்பவர்களுக்குக் கிடைக்கின்றன என்று அரசாங்கப் புள்ளிவிவரங்களே தெரிவிக்கின்றன. அப்போது மற்ற 93 சதவீதத்தைச் சாப்பிடுபவர் யார்?

இன்றும்கூட முதல்நிலை பாராளுமன்றச் செயலதிகாரிகள், உச்சநீதிமன்ற நடுவர்கள் முதலிய பெரிய வேலைகளில் பார்ப்பனர்கள் தவிர வேறு எவரும் கிடையாது. பார்ப்பனர் தொகை இந்தியாவில் சராசரி 3% என்கிறார்கள். அவர்கள் 90 சதவீத உயர் இடங்களில் இருப்பதனால்தான் முன்னேற்றம் ஏற்பட மறுக்கிறது.

19% இடத்தை ஒடுக்கப்பட்டவர்களுக்கு ஒதுக்கிவிட்டு அதையும் நிரப்பாமல் இருப்பதனால்தான் பிரச்சினை.

**ஆகவே நாம் தருவோம் ஒரு யோசனை.**

ஏன் கீழிருந்து இட ஒதுக்கீடு? மேலிருந்து ஒதுக்கீடு செய்யுங்கள்.

அதாவது 3% உயர்சாதியினர் என்றால் அவர்களுக்கு 3% வேலைவாய்ப்புகளை மட்டும் கொடுங்கள்.

அடுத்தநிலை உயர்சாதிகள் ஒரு 17 சதவீதம் என்றால் அவர்களுக்கு 17 சதவீதம் வேலைவாய்ப்பை மட்டும் கொடுங்கள்.

அடுத்து ஓபிசி முப்பது சதவீதம் என்றால் அவர்களுக்கு முப்பதுசதவீத இடத்தை மட்டுமே கொடுங்கள். (3+17+30=50 சதவீதம்)

பொதுவகைமையில் (ஜெனரல் கேடகரி) இவர்கள் போட்டியிடக்கூடாது. கீழிருக்கும் ஐம்பது சதவீத மக்கள் மட்டுமே பொது வகைமையில் போட்டியிடலாம் என்று சட்டம் கொண்டுவாருங்கள்.

என்னசார, இவ்வளவு கடுமையாக இருக்கிறதே என்று கேட்டால் நமது பதில்-ஆமாம், எத்தனையோ நூற்றாண்டுகளாக எல்லோருக்குமுரிய நிலம், பதவி, பஞ்சாயத்துத் தலைமை என்று எல்லாவற்றையுமே பிறரிடமிருந்து பறித்துக் கொண்டு வாழ்ந்துவரும் ஒருசிலர் கொஞ்ச காலம் சற்றே கீழிருந்துதான் பார்க்கட்டுமே?

எப்போது சமவாய்ப்பு, சமத்துவம் எல்லாம் வரும்? நாம் எல்லாருமே மனது வைத்தால் அடுத்த பத்தாண்டுகளில்கூட வரலாம். ஒதுக்கீடு கூடாது, போட்டி மட்டுமே தேவை என்பவர்கள் முதலாளித்துவப் போக்கைத்தான் இதிலும் முன்வைக்கிறார்கள். முதலாளித்துவம் செய்யும் கொடுமைகளைத்தான் கண்ணெதிரே பார்த்துக் கொண்டே இருக்கிறோமே?

கண்ணதாசன் பாட்டு-"யாரும் இருக்குமிடத்தில் இருந்துகொண்டால் எல்லாம் நன்மையே". அதிக இடத்திற்கு ஆசைப்பட்டால் எல்லாம் கொடுமையே.

# 20. ஜனநாயகக் கடமையா? எது அது?

ஆட்சியைப் பிடிக்கும் பாராளுமன்றத் தேர்தலோ, சட்டமன்றத் தேர்தலோ, ஆட்சிக்கு அவ்வளவாகச் சம்பந்தமில்லாத இடைத்தேர்தலோ, ஊராட்சி மன்றத் தேர்தலோ எதுவானாலும் நம் ஊடகங்கள் அனைத்தும்-இதில் மட்டும் கருத்து வேறுபாடே இல்லை- வாக்களிப்பது ஜனநாயகக் கடமை என்று கத்துகின்றன. "வாக்களிப்பதைக் கட்டாயமாக்க வேண்டும்" என்றும் "வாக்களிக்காதவர்களுக்குச் சிறைத்தண்டனை வரை தரலாம்" என்றும் ஊடகமக்கள்பிரதிநிதிகள் முழங்குகிறார்கள். நல்லது. வாக்களிக்காதவர்கள் மிடில்கிளாஸ் மனநிலை உள்ளவர்கள் என்று ஒரு பெயரும் வைத்துவிட்டார்கள். மிகமிக நல்லது.

ஏன் வாக்களிக்கவேண்டும்? அதுவும் கட்டாயமாக? பெரிய கட்சிகளான ஆளும்கட்சி, எதிர்க்கட்சி இரண்டிலுமே நிற்பவர்கள் பொறுக்கிகள், ரவுடிகள், கள்ளச் சாராயக்காரர்கள், ஊழல்வாதிகள், கல்விக்கொள்ளை அடிப்பவர்கள்... என்றெல்லாம் மக்களுக்கு நன்றாகத் தெரியும். இப்படிப்பட்டவர்களுக்கு வாக்களிக்க வேண்டிய அவசியம் என்ன? லஞ்சம் கொடுக்காமல் ஓட்டுவாங்குபவர் ஒருவரைக் காட்டுங்களேன். ஒரே ஒரு ஊழல்புகார் அல்லது கொலை கொள்ளைக் குற்றம், அல்லது வேறு குற்றங்கள் இல்லாத

எம்எல்ஏக்களை-வேண்டாம், எம்பிக்களை, நம் நாட்டில் காட்ட முடியுமா? முதல்மந்திரிகளாக இருப்பவர்களே நீதிமன்றங்களுக்கு, லோகாயுக்தா மன்றங்களுக்கு அலைந்துகொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களை வைத்திருக்கும் கட்சிகளுக்கு வெட்கமில்லை?

சரி, பெரிய கட்சிகளுக்கு ஏன் ஓட்டுப்போடுகிறாய்? சின்னக் கட்சிகளுக்குப் போடு. அல்லது சுயேச்சைகளுக்குப் போடு என்பார்கள் நம் மக்கள்பிரதிநிதிகள். இவர்களுக்கு ஓட்டுப்போட்டுத் தேர்ந்தெடுத்தால் என்ன செய்யப்போகிறார்கள்? ஒன்று: மாறிமாறி இது ஆட்சியமைக்குமா, அது ஆட்சியமைக்குமா என்ற நிலை வரும்போது விலைபோவார்கள். தங்களை 'ஈஸி'யாகக் கோடீஸ்வரர்கள் ஆக்கிக்கொள்வார்கள். அல்லது எதுவும் செய்ய இயலாமல் வக்கற்ற நிலையில் உட்கார்ந்திருப்பார்கள். சட்டசபைக்கேனும் போவார்களா, ஏதாவது சட்டம் வரக்கூடுமானால் கையைக்கூட உயர்த்துவார்களா என்பதே சந்தேகம்தான்.

இப்படிப்பட்ட நிலை தமிழகத்தில் மட்டுமல்ல, இந்தியா முழுவதும் இருக்கும்போது "வாக்களி, வாக்களி" என்று ஏன் கத்துகிறீர்கள் ஐயா? உங்கள் ஜன நாயகமே போலி ஜனநாயகம், ஜாதிநாயகம், பணநாயகம். பணபலமற்ற, ஜாதிபல மற்ற ஒருவன்-நல்லது செய்வேன் என்ற நம்பிக்கையை மட்டும் வைத்து உங்கள்

தேர்தல்களில் வெற்றிபெற்றுவிட முடியும்? முதலில் அப்படிப்பட்ட நிலையை உருவாக்குங்கள், அதற்கு ஏற்றாற்போல் சட்டத்திருத்தம் செய்யுங்கள். (செய்யமாட்டீர்களே?) அப்புறம் "வாக்களிக்காவிட்டால் தண்டனை" என்று கத்துங்கள்.

சரி, அவ்வளவு வேண்டாம். சரிவரச் செயல்படாத மக்கள் பிரதிநிதிகளைத் திரும்ப அழைத்துக்கொள்ளலாம் என்று ஒரு எளிய சட்டம் கொண்டு வாருங்களேன் பார்க்கலாம்-உங்கள் ஜனநாயகத் திறமையை! அப்புறம் கட்டாயம் ஓட்டுப் போடுகிறோம்.

அது கூட வேண்டாம் ஐயா, "இந்தத் தேர்தலில் நிற்பவர்கள் எவருமே எனக்குப் பிடிக்கவில்லை, நான் வாக்களிக்கமாட்டேன்" என்றால் ஒரு படிவம் கொடுத்துப் பூர்த்திசெய்யச் சொல்லி, முகவரி எழுதச்சொல்லி, கையெழுத்துப் போடச் சொல்லி மானத்தை வாங்குகிறீர்களே ஐயா, (இதெல்லாம் தெரிந்து கொண்டவுடனே நம் ஜனநாயகத் தலைவர்களும் போலீசும் சும்மா இருப்பார்களா? ஒன்றுசேர்ந்து நீ தீவிரவாதி என்று முத்திரை குத்தி அடித்துநொறுக்கி உள்ளே தள்ளிவிட மாட்டார்களா?) எப்படி வாக்களிப்பது மறைவாக வைக்கப்படுகிறதோ அதுபோல விருப்பமின்மையையும் மறைவாக வைக்க ஏற்பாடு செய்யக்கூடாதா? அப்புறம் வாக்களிக்க மக்கள் ஏன் தயங்குகிறார்கள், பயப்படுகிறார்கள்?

அதாவது, வாக்களிக்கும் எந்திரத்தில், வாக்காளர் பட்டியலுக்கு பட்டன், விளக்கெல்லாம் தயாரிப்பதுபோலவே, எவருக்கும் வாக்களிக்க விருப்பமில்லை என்பதற்கும் ஒரு பட்டன் வையுங்களேன். அதனால் என்ன இழப்பு?

எத்தனை கோடிரூபாய்கள் ஒருநாள் பாராளுமன்றத்திற்கு, ஒருநாள் சட்டசபை நடத்துவதற்குச் செலவாகின்றன? எவ்வளவு இலவசங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்கு? தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் கட்டாயம் மன்றத்திற்கு வர வேண்டும் என்று ஒரு சட்டம் உண்டா? மன்றத்தை ஒழுங்காக நடத்தவிடவேண்டும் என்று ஒரு சட்டம் உண்டா?

ஆக ஜனநாயகத்தைக் கொல்வது வாக்களிக்க விருப்பமில்லாதவர்களா, அரசியல்வாதிகளும் தேர்தல் ஆணையக்காரர்களும் அவர்கள் அடிவருடிகளும் ஆகிய நீங்களா?

# 21. தமிழ்நாடு: இலக்கிய வெளியும் இலக்கியமற்ற வெளியும்

தமிழின் அடையாளங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல, பல இருக்கின்றன. இலக்கியத்திலும் கலையிலும் சிந்தனை முறைகளிலும் தமிழ் தன் பன்மைத் தன்மையால் விரிந்து கிடக்கிறது. இசை நடனம் சிற்பம் ஓவியம் நுண்கலைத் தொழில்கள் அனைத்திலும் பன்மைக்கூறுகளைக் கொண்டது தமிழ். ஆனால் இவற்றை நமக்குள் சொல்லிக் கொண்டு கிடப்பதில் பயனில்லை. அத்துடன் தமிழின் நசிவுக்குப் பெரிய காரணம், ஒற்றைப்படையாக்கம். ஒருமையாக்கம். ஒற்றை அடையாள வன்முறை. இவற்றைச் சற்றே விடுத்து இதன் பன்மைத்தன்மையை அதன் பன்மைப் பரப்பிலேயே அடையாளம் கண்டு நவீனத்துவ, பின்நவீனத்துவப் புரிதல்களுடன் புத்தம்புதிதாக விளக்கியும், விரித்தும், மாறுபடு பொருளுரைத்தல்கள் ஊடான சொல்லாடல்களைக் கட்டவேண்டும். அப்போது மூவேந்தர், முச்சங்கம், முக்கொடி, மூன்றெழுத்து அவமானங்களைத் தாண்டி தமிழின் உப, சிறு, புற மரபுகளின் ஆற்றல் உலக அளவில் தெரிய வரும்.

நவீனத்துவம் என்றும் கலைப்பிரக்ஞை என்றும் கூறிக்கொண்டு புறப்பட்ட சிறு பத்திரிகை, சிறுகுழுப் பிரிவுகளின் பங்களிப்பைப்

பற்றியும் சற்றே சொல்ல வேண்டும். தமிழ்ப்பண்டிதர்கள், பேராசிரியர்கள், சிற்றாசிரியர்கள், ஞானாசிரியர்களின் பிற்போக்கு அறியாமை, கலையிலக்கிய மறுப்பு இவற்றிற்கு மாற்றாகவும் எதிர்ப்பாகவும் தொடங்கி, தொடர்ந்துவரும் சிறுபத்திரிகை மற்றும் தீவிர இலக்கியப் பகுதி இதுவரை இலக்கிய அறிவியல் எதையும் உருவாக்கிக் கொள்ளாமலே மனத்துக்குத் தோன்றுவதைச் சொல்லிச் செல்லும் களமாக மட்டுமே இயங்கிவருகிறது. இன்றும் வாழ்க்கை அனுபவம், நம்பகத்தன்மை என்று பேசியவண்ணம் பத்துத் தமிழ்நாவல்களைப் பட்டியலிட்டு top10 கணக்கெடுப்பு நடத்திக்கொண்டு உட்கார்ந்திருக்கிறது. எழுத்தாளர்கள் என்றால் ஐந்துபேர் என்று புலம்பிக் கொண்டு திரிகிறது. இதற்குமுன் இதுபோன்ற ஒரு நாவல் வரவில்லை என்று கூறிக்கொணடு இதையே இலக்கியத் திறனாய்வு, இலக்கிய விமரிசனம் என்று பிடிவாதம் செய்துகொண்டு காலம் கடத்துகிறது. தொன்மை இலக்கியங்களையும் பன்மைத் தத்துவங்களையும் அணுகுவதற்கு எந்த அணுகுமுறையும் இன்றி மௌனம் சாதிக்கிறது. நாவல் என்றால் 800 பக்கமாவது இருக்கவேண்டும் என்று கணக்குப்போட்டு வைத்திருக்கிறது. வெகுஜனப் பத்திரிகைகளில் எழுதிச் சம்பாதிக்கும் எழுத்து வியாபாரிகளைப் பார்த்து வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொள்கிறது. பிறகு அதில் சில பக்கங்கள் கிடைத்தவுடன் புலம்பித் தீர்க்கிறது. தலித்தியம் பெண்ணியம் என்றவுடன் முகத்தைச்

சுளிக்கிறது. பின்நவீனத்துவம், பன்மைத்துவம், புதிய எழுத்து என்றால் கேலிச்சிரிப்பு சிரிக்கிறது. சாதி குடும்ப வழிவகை பார்த்து இலக்கியப் பாராட்டும் இகழ்ச்சியும் நடத்துகிறது. இவற்றிற்கு நடுவிலும் அவ்வப்போது சில விவாதங்களை அனுமதித்துவிட்டு அடடா தப்பு செய்து விட்டோம் என்று முழித்துக்கொண்டிருக்கிறது. இவற்றில் நாம் விவாதிக்கவும் உரையாடவும் நிறைய இருக்கிறது.

வள்ளலாரில் தொடங்கிய நவீனத்துவம் இன்று பலவித வடிவங்களை எடுத்திருக்கிறது. பின்நவீனத்துவப் பேச்சுகள் வரை நாம் வந்திருக்கிறோம். நமக்குத் தற்போது தேவை வாசிப்பும் மறுவாசிப்பும். அனத்துவகை வடிவங்களையும் அதனதன் கட்டமைப்பு சார்ந்து புரிந்துகொண்டு அவற்றிற்கான பின்புல வாசிப்புகளைச் செய்யும் பன்முக இலக்கிய அறிவியல். இந்த இலக்கிய அறிவியல்தான் நம்மை உலக அளவில் கொண்டு செல்லும். இலக்கியவாதிகள் எல்லாரையும் பற்றி புதியமுறையில் விரிவாகப் பேசவைக்கும். மறுவாசிப்பு என்பது மறுத்தலுக்கான வாசிப்பு அல்ல. பின்நவீனத்துவம் என்பது பின்னடைந்த நவீனத்துவம் அல்ல. பொறுப்பும் உழைப்பும் தேவைப்படும் அற, அழகியல் செயல்பாடு.

## 22. காலமும் கட்டுக்கதைகளும்- 1

நமது நாட்டில் மட்டுமல்ல, எல்லா நாடுகளிலுமே காலம் என்பது கட்டுக்கதைகள் உருவாக்குவதற்கான ஒரு களமாகவே இருந்திருக்கிறது. எதற்கும் கட்டுப்படாமல் நழுவிச் செல்லக்கூடிய காலத்தை அழகாக எண்ணியப்படுத்தி (டிஜிடலைஸ்) வைத்திருக்கிறோம். ஒரு நாள் மிகச்சரியாக இரவு பன்னிரண்டு மணிக்கோ, காலை ஆறு மணிக்கோ தொடங்குவதாகக் கொள்வது மரபுரீதியானதே தவிர உண்மையில் அப்படியல்ல.

ஒரு வாரத்தை ஏழு நாட்களாகப் பிரித்திருக்கிறோம். இந்தவிதத்தில் இந்தியக் காலண்டரும் மேற்கத்தியக் காலண்டரும் ஒரே மாதிரியே இருக்கின்றன.

தமிழில் வாரம் என்பது ஏழுநாள் கொண்ட தொகுதியைக் குறிக்கிறது என்றால், சமஸ்கிருதம், இந்தி போன்ற மொழிகளில் அதற்குக் கிழமை என்று அர்த்தம். பழைய ஆட்கள் பேசும்போது இன்றைக்கு சோமவாரம், நேற்று சனிவாரம் என்று பேசியதைப் பார்த்திருக்கலாம்.

மேற்கத்திய காலண்டரின்படி ஞாயிற்றுக்கிழமை வாரத்தின் முதல்நாள். இந்திய முறைப்படி அது கடைசி நாள். முஸ்லீம்கள்

காலண்டர்படி ஒருவேளை வெள்ளிக்கிழமை முதல்நாளோ? தெரியவில்லை.

கிழமை என்பது அற்புதமான சொல். ஒரு நாளுக்கு உரிமையுடைய பெயரை, கிழமை என்றது எவ்வளவு பொருத்தம்? இன்று ஞாயிற்றுக்கிழமை, நேற்று சனிக்கிழமை என்று. கிழமைப் பெயர்கள் தமிழ்நாட்டில் பாதி தமிழாகவும் பாதி வடமொழியாகவும் இருக்கின்றன. ஞாயிறு, திங்கள், செவ்வாய், வெள்ளி என்பன நல்ல தமிழ்ப்பெயர்கள். ஆனால் புதன், சனி என்பவை வடமொழி. வியாழன் வடசொல்லைத் தழுவியது. ஏன், எந்தக் காலத்தில் இப்படிக் கலப்பு உண்டாயிற்று என்று தெரியவில்லை.

சமஸ்கிருதத்திலும் சூரியவாரம், சோமவாரம், அங்காரகவாரம், புதவாரம், பிருஹஸ்பதி வாரம், சுக்ரவாரம், சனிவாரம் என இதே வரிசையில்தான் அமைந்திருக்கின்றன. ஆங்கில வரிசை சற்றே மாறுபட்டது. சண்டே என்றால் சூரியனின், ஞாயிற்றின் கிழமைதான். (சன்+டே). மன்டே என்பது மூன்+டே என்பதன் கூட்டு. ஆகவே அதுவும் திங்கள் (திங்கள் என்றால் நிலா) கிழமை என்பதற்குப் பொருந்துகிறது. ஆனால் டியூஸ்டே என்பது டிவ்ஸ் டே என்பதிலிருந்து வந்தது. டிவ் என்பவன் நார்வீஜியக் கதைகளில் போர்க்கடவுள் என்கிறார்கள். செவ்வாய் என்பது நமக்கு கிரகம். ஆனால் இதுவும் ஒருவகையில் பொருத்தம்தான். ஏனென்றால்,

செவ்வாய்-மார்ஸ், மேற்கத்தியப் புராணங்களில் போர்க்கடவுள். செவ்வாய் பற்றிப் புராணம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. சிவந்த கிரகம் என்ற பெயர்தான் அது.

புதன் என்பது புத்தி என்பதோடு சம்பந்தம் உடையது. இந்துப் புராணங்களில், புதன் அலியாகவும் கருதப்படுகிறான். புதன் கிரகம் சம்பந்தப்பட்ட நாள் என்பதோடு புத்திசம்பந்தப்பட்ட நாளாகவும் புதனைக் கருதலாம். பிரஹஸ்பதி என்ற தேவர்களின் குருவை வியாழன் என்கிறோம். சுக்கிரன் என்ற அசுரர்களின் குருவை வெள்ளி என்கிறோம். சனி சூரியனின் மகனாகக் கருதப்படுகிறான். ஆக, இந்திய கிழமைப்பெயர்கள் எல்லாமே சூரியன் என்ற நட்சத்திரமும் (இதுவும் பழங்காலத்தில் கிரகம் என்றே கருதப்பட்டது) பிற ஆறு கிரகங்களும் கொண்ட பெயர்கள். ஆனால் ஆங்கிலத்தில் அப்படியில்லை.

ஆங்கிலத்தில் வெட்னஸ்டே என்பது ஓடியனின் தினம் என்ற பொருள்படும் சொல்லிலிருந்து வருகிறது. ஓடியன் என்பவன் ஸ்காண்டிநேவியக் கடவுள்களில் முதன்மையானவன். தர்ஸ்டே என்பது தாரின் தினம். தார் என்பவன் ஸ்காண்டிநேவியப் போர்க் கடவுள். ஃப்ரைடே என்பது ஃப்ரேயாவின் தினம். ஃப்ரேயா என்பவள் ஓடியனின் மனைவி. வீனஸ் போன்ற பேரழகி. மீண்டும் சேடர்ன்(சனி) என்பதுதான் கிரகம்.

இப்படி எல்லா நாடுகளிலும் கிழமைப் பெயர்கள் புராணக்கதைகளோடும் கிரகங்களோடும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இந்தப் புராணக்கதைகளைப் பார்த்தால் இன்னும் தலை சுற்றும்.

இந்துப் புராணங்கள்படி, ஞாயிறு அல்லது சூரியன், ஏழு குதிரைகளைப் பூட்டிய தேரில் காலை முதல் மாலைவரை பிரயாணம் செய்பவன். இவனுடைய சாரதி அருணன். அருணன் தோன்றினால் சூரியன் வரப்போகிறான் (உதிக்கப் போகிறது) என்றுதானே அர்த்தம்? திருவண்ணாமலைக்குப் பெயர் அருணாசலம்.

அருணன்+அசலம், அதாவது சூரியன் உதயமாகின்ற (கிழக்கு) மலை என்று அர்த்தம். இந்த சூரியனுக்குப் பல மனைவியர். அதில் முதன்மையானவள் அஸ்வினி. அவளுக்குப் பிறந்தவர்கள்தான் யமன் (இறப்புக் கடவுள்), யமுனா நதி ஆகியோர். அஸ்வினி தேவர்களும் இவளுக்குப் பிறந்தவர்களே.

சந்திரன், 'ரஜினிகாந்த்'. (ரஜினி என்றால் இரவு, காந்த் என்றால் கணவன். இரவின் கணவன் சந்திரன் அல்லவா?) வெறுமனே 'ரஜினி' என்றால் ராத்திரிதான். சந்திரனுக்கு இருபத்தேழு மனைவிகள். (இருபத்தேழு நட்சத்திரங்கள். அஸ்வினி, பரணி, கிருத்திகை தொடங்கி ரேவதி வரையிலான நட்சத்திரங்களின் பெயர்கள் எல்லாம் பெண்பெயர்கள்தான். இவர்கள் எல்லாம் சந்திரனின் மனைவியர் என்கிறது இந்துப்புராணம்.) இந்த இருபத்தேழு நட்சத்திரங்களும்

தட்சனின் பெண்களாம். இவர்களில் ரோகிணி ஒருத்தியின்மீது மட்டும் சந்திரன் அதிகக் காதல் கொண்டிருந்ததால், பிற பெண்கள் எல்லாம் முறையிட, தட்சன் நீ தேயக் கடவாய் என்று சாபம் இட்டுவிட்டானாம். சந்திரன் தேய்ந்துதேய்ந்து மூன்றாம் பிறையாகும் சமயத்தில் சிவபெருமானின் காலில் ஓடிப்போய் விழ, அவர் அருள் கொடுத்து, தன் ஜடாமுடியிலும் தூக்கி வைத்துக்கொண்டதாகவும், இனி வளரக்கடவாய் என்று அருள்புரிந்ததாகவும் புராணக்கதை.

நீங்கள் வானத்தை கவனித்துக்கொண்டே வந்தால், சந்திரனின் உதய நேரம் மாறிக்கொண்டே வருவதைப் பார்க்கலாம். அமாவாசை அன்றுதான் நிலவும் ஞாயிறும் ஒரேசமயத்தில்-காலையிலேயே உதயமாகி மாலை மறையும். அதனால் ஞாயிறும் நிலவும் சேர்ந்தால்-சூரிய சந்திரர் இணைந்தால் அமாவாசை என்பது இந்துப் புராணம். இதை மகாபாரதத்தில் அருமையாகக் கிருஷ்ண பகவானின் கபடநாடகத்துக்குப் பயன்படுத்தியிருக்கிறார்கள்.

சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகிக்குத் திருமணம் ஆனவுடனே அவர்கள் சூரியனும் சந்திரனும் அருகருகில் இருப்பதுபோல (கதிர் ஒருங்கிருந்த காட்சிபோல) இருந்தார்களாம். இது இளங்கோவடிகளின் குறும்பு. சூரியனும் சந்திரனும் சேர்ந்தால் ஒளிமிகாது, மாறாக இருள்தான் (அமாவாசை). ஆகவே கோவலனும்

கண்ணகியும் சேர்ந்தது இருளை அளிப்பதாக இருக்கப்போகிறது என்கிறார் இளங்கோ.

இந்தக் கதைகள் தொடரும். புராணக் கதைகளை அறிந்துகொள்ளுங்கள். ஆனால் தயவு செய்து நம்பாதீர்கள். நம்பினால், கடைசியில் இலங்கைத்தீவுக்கு இராமன் பாலம் கட்டினான் அதுதான் இப்போது இருக்கிறது என்று ஒரு கட்சிக்காரர்கள் சொல்வதுபோல முடியும். (வால்மீகி ஒரு வடநாட்டு வேடன். அவருக்கு இலங்கைத் தீவு பற்றி ஒன்றும் தெரியாது. அவர் சொல்லும் இலங்கை என்பது தண்டகாரண்யத்துக்கு அருகில், இப்போதுள்ள விசாகப்பட்டினத்தின் அருகிலுள்ள தீவு என்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். ஆனால் புராணத்தை நம்புபவர்களுக்கும் ஆராய்ச்சிக்கும் ஏழாம் பொருத்தம். ஆமாம், ஏழாம் பொருத்தம் என்றால் என்ன?

ஏழாம் பொருத்தம் என்றால் களத்திரப் பொருத்தம் அல்லது கணவன் மனைவிப் பொருத்தம் என்று ஒரு அர்த்தம். ஆண் அல்லது பெண் ஜாதகத்தில் அந்த நபரின் லக்கினம் இருக்கும் ராசிக்கு ஏழாம் ராசியைப் பார்ப்பார்கள். அதுதான் அவரின் கணவன் அல்லது மனைவிக்குரிய இடம். கணவனும் மனைவியும் ஒரேமாதிரிச் சிந்திக்க மாட்டார்கள், சண்டையிடுவார்கள் என்று நினைத்து இப்படிச் சொல்லி வைத்திருக்கிறார்கள்.

மகாபாரதக் கதையில் தான் போர்தொடங்குவதற்கான பூஜைசெய்ய ஒரு அமாவாசை நாளைத் தேர்ந்தெடுக்கிறான் துரியோதனன். (சூரியனும் சந்திரனும் சேர்வதால் அதை நிறைந்த நாள் என்பார்கள். நல்ல நாள்.) அதைக் கிருஷ்ண பகவான் தொடங்கிவைக்கவேண்டுமென்றும் வேண்டிக்கொண்டான், அவனும் இசைந்து விட்டான். இந்நிலையில் பாண்டவர்களின் பின்புத்திக்கு இப்போதுதான் அதைவிட்டால் தங்களுக்கும் நல்லநாள் இல்லை என்ற ஞானம் உதயமாகிறது. என்ன செய்வது? இருக்கவே இருக்கிறான் ஆபத்பாந்தவன், அநாத ரட்சகன், கிருஷ்ண பகவான். யுதிஷ்டிரர் (தருமர்) சரணடைந்தவுடனே, அதெல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன் என்று சொல்லிவிட்டான்.

கௌரவர்களின் பஞ்சாங்கப்படி அமாவாசை கணித்ததற்கு முன்நாளே கிருஷ்ணன் பாண்டவர்களை வரச்சொன்னான். கூடவே சூரிய சந்திரர்களையும் வரச்சொன்னான். இருவரும் ஒன்றாக வந்து எதிரே நின்றுகொண்டிருக்கிறார்கள். கிருஷ்ணன் "பூஜையைச் செய்" என்றான். "இன்றைக்கு அமாவாசை இல்லையே" என்றான் தருமன். "இதோ எதிரிலே பார். சூரியனும் சந்திரனும் ஒன்றாக நிற்கிறார்களா?" என்று கேட்டான் கிருஷ்ணன். "ஆமாம்". "அப்புறம் என்ன? இது தான் அமாவாசை-நடத்து" என்று சொல்லிவிட்டான். வழக்கம்போல துரியோதனன் ஏமாந்தான். "கதிர் ஒருங்கிருந்த காட்சி"க்கு இப்படி ஒரு கதை.

இது ஒரு பக்கம். கிழமைகள் பெயர்களைப் பார்த்தோம். மாதங்கள் பெயரைப் பார்க்கலாமே? நாம் தமிழ் மாதம் என்று சொல்பவை தமிழ்மரபுப்படி மாதங்களோ என்னவோ, ஆனால் அவற்றின் பெயர்கள் நிச்சயம் தமிழ் அல்ல. அவையெல்லாம் பன்னிரண்டு நட்சத்திரங்களின் பெயர்கள்தான்.

சந்திரனை அடிப்படையாக வைத்துக் காலத்தைக் கணக்கிடுவது சந்திர மானம். சூரியனை அடிப்படையாக வைத்துக் காலத்தைக் கணக்கிட்டால் சௌரமானம். நட்சத்திரங்களை அடிப்படையாக வைத்துக் காலத்தைக் கணிப்பதும் உண்டு. (இதுதான் துல்லியமானது.)

சௌரமானப்படி, சூரியன் ஒவ்வொரு ராசியிலும் ஒவ்வொருமாதம் தங்குகிறான். பிறகு அடுத்த ராசிக்கு மாறுகிறான். மொத்தம் பன்னிரண்டு ராசிகள். ஆக பன்னிரண்டு ராசிகளிலும் தங்க, பன்னிரண்டு மாதங்கள். ராசியின் பெயரைச் சொல்லு என்றால் மேஷம், ரிஷபம், மிதுனம் என்று அடுக்குவார்கள். அதற்கு பதிலாக அந்தந்த ராசியிலுள்ள முக்கியமான நட்சத்திரப் பெயரை மாதங்களுக்கு வைத்திருக்கிறார்கள். சித்திரை என்பது சித்திரை நட்சத்திரத்தைக் குறிக்கும் பெயர்தான். வைகாசி என்பது வைசாகி (ஒலி இடம் மாறி வைகாசி ஆகிவிட்டது)-அதாவது விசாகம் என்று அர்த்தம். ஆனி என்பது அனுஷ நட்சத்திரம். ஆடி என்பது ஆஷாடம். அதாவது பூராடம். பூர்வ ஆஷாடம் என்பது தமிழில் பூராடம்

ஆகிவிட்டது. ஆவணி என்பது திருவோண நட்சத்திரம். புரட்டாசி என்பது பூரட்டாதி நட்சத்திரம். ஐப்பசி என்பது அசுவினி நட்சத்திரம். கார்த்திகை அல்லது கிருத்திகை என்பது அதேபெயருடைய நட்சத்திரம்தான். மார்கழி என்பது மிருகசீரிஷ நட்சத்திரம். தை என்பது புஷ்ய நட்சத்திரம் (பூசம்). மாசி என்பது மக நட்சத்திரம் (மாக நட்சத்திரம்). பங்குனி என்பது பால்குன மாதம் (உத்தரம்). தைக்குச் சரியான மூலம் தெரியவில்லை. ஆக, பன்னிரண்டு நட்சத்திரப் பெயர்களை வடமொழியில் மாதங்களுக்கு வைக்க, அதை "ஒருமாதிரி" யாக-ஹியரிங் என்ற ஆங்கில வார்த்தையை ஈரங்கி என்று தமிழ்ப்படுத்திக் கொண்டதுபோல-தமிழ்ப்படுத்திக் கொண்டார்கள். அப்படியானால் தமிழர்களுக்கென்று மாதப்பெயர்கள் இல்லையா? இருந்திருக்கலாம். இப்போது இல்லை.

இதில் விசேடம் என்னவென்றால், ஒவ்வொரு மாதம் குறிக்கும் நட்சத்திரத்தன்றுதான் அந்த மாதப் பவுர்ணமி வரும். அன்றைக்குச் சிவன் கோவில்களில் பிரமாதமான பூஜை நடப்பதைப் பார்க்கலாம். அதாவது சித்திரை மாதம் என்றால் சித்திரை நாளன்று பவுர்ணமி. தை என்றால் பூசத்தன்று. மாதப் பெயர்களே தமிழாக இல்லாதபோது தொடக்கம் சித்திரையானால் என்ன, தை ஆனால் என்ன? எல்லாம் ஒன்றுதான். ஜனவரி பிறந்த பதினாலாம் நாள் தை பிறக்கிறது என்பதனால் ஒருவேளை ஒப்புக்கொள்ளலாம். அப்போதும் கணக்கு

ஒத்துவராது. சரியாக ஆங்கில மாதங்களின் பாதியில்தான் தமிழ்மாதங்கள் பிறக்கும்.

ஆங்கில மாதங்களின் பெயர்கள் இப்படி நட்சத்திரத்தை அடிப்படையாக வைத்து அமையவில்லை. கடவுள் பெயர், அரசன் பெயர் என்று எல்லாம் அதில் இருக்கிறது. பெரும்பாலும் ரோமானியப் பெயர்கள்.

மார்ச் மாதம்தான் முதல்மாதமாக இருந்தது. மார்ஸ் (செவ்வாய்) என்ற போர்க்கடவுளுக்கு அர்ப்பணிக்கப்பட்டதால் அதற்கு மார்ச் என்று பெயர். ஏப்ரல் என்பது ஏப்ரிலிஸ் (இது வீனஸ் தேவதையின் பெயராம்) என்பதிலிருநது வந்தது. மே என்பது வசந்தகாலக் கடவுளான மையா என்பவள் பெயரால் அமைந்தது. ஜூன் என்பது, கடவுளர்களின் ராணியான ஜூனோ என்பவள் பெயரால் வந்தது. இது நான்காவது மாதம்.

ஜூலை, ஆகஸ்டு இரண்டும் ஜூலியஸ் சீஸர், அகஸ்டஸ் சீஸர் என்ற அரசர்கள் பெயரால் அமைந்தன. ஆகஸ்டு ஆறாவது மாதம்.

செப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் நான்குமே ஏழாவது (செப்டம்), எட்டாவது (ஆக்டோ), ஒன்பதாவது (நோவோ), பத்தாவது (டெசிம்) என்ற எண் பெயர்கள் அடிப்படையிலே அமைந்தவை. பதினொன்றாம், பன்னிரண்டாம் மாதங்களாக இருந்தவை பின்னால்

முதலிரு மாதங்கள் ஆக்கப்பட்டன. ஜேனுவரி(ஜனவரி) என்பது ஜேனஸ் என்னும் திறப்புக்கடவுள் பெயரால் அமைந்தது. ஜேனஸ் என்ற கடவுளுக்கு எதிர்எதிராக இரண்டு முகங்கள். ஒன்று சென்ற ஆண்டைப் பார்ப்பதாகவும், இன்னொன்று வரும் ஆண்டைப் பார்ப்பதாகவும் கருதப்பட்டது. பெப்ருவரி என்பது தூய்மைப்படுத்தும் சடங்கான பெப்ருவா என்ற சொல்லிலிருந்து வந்தது என்கிறார்கள்.

ஏன் பிப்ரவரி மாதத்திற்கு 28 நாட்கள் இருக்கவேண்டும்? ஏன் வருடத் திற்கு பதின்மூன்றோ பத்தோ மாதங்கள் இருக்கலாகாது? ஏன் இப்போது 2012 ஆம் ஆண்டுதான் நடக்கவேண்டும்? இதற்கெல்லாம்கூட விடை தேவைப்படலாம். மேலும் நமது சகாப்தங்கள் வேறு, ஆங்கில (கிரகேரியன்) கேலண்டர் வேறு. கிரகேரியன் நாட் காட்டி முறையை நோக்கினால் இவற்றிற்கு விடை கிடைக்கும். எப்படியிருந்தாலும் அஸ்ட்ரானமி (வானியல்) என்பது மிகவும் சிறந்ததொரு துறைதான். அன்புகூர்ந்து வானியலைப் படியுங்கள். சற்றே கணித அறிவு அதற்குத் தேவைப்படும்.

# 23. காலமும் கட்டுக்கதைகளும்- 2

எனக்கு இப்போது வயது இரண்டு நடக்கிறது. இரண்டுதான் சார், ஏதோ மாதிரிப் பார்க்க வேண்டாம்.

நமது இந்தியக் காலக்கணக்கின்படி, காலம் சுழற்சியில் வருவது. நான்கு யுகங்கள் என்று பிரித்தார்கள் அல்லவா? கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்பவை அவை- கேள்விப்பட்டிருப்பீர்கள். இவை சுழற்சியில் வருகின்றன. இப்போது கலியுகம் நடக்கிறதாம். கலியுகம் முடிந்தபிறகு மறுபடியும் கிருதயுகம். பிறகு திரேதாயுகம், துவாபரயுகம், மறுபடியும் கலியுகம். இப்படியே. ஏறத்தாழ இதனுடன் ஒப்புமையுடையது மேற்கத்தியவர்களின் காலப்பகுதிகள். அவர்கள் golden age, silver age, brass age, iron age (பொற்காலம், வெள்ளிக்காலம், வெண்கலக்காலம், இரும்புக்காலம்) என்று பிரித்தார்கள். இப்போது நாம் கலியுகம் சீரழிகிறது என்று சொல்வதைப் போலவே அவர்கள் இரும்புக்காலம் நடக்கிறது என்கிறார்கள். நமது கிருதயுகம் போலவே அவர்களுக்கு golden age- பொற்காலம். ஆனால் ஒரு வித்தியாசம், இரும்புக் காலம் போனபிறகு மறுபடியும் பொற்காலம் வராது. அதாவது அவர்கள் காலத்தைச் சுழற்சியாகப் பார்க்கவில்லை.

ஒரு சரணம் என்பது சூரியமானப்படி 4,32,000 வருடம். கலியுகத்திற்கு ஒரே ஒரு சரணம்தான்-அதாவது கலியுகம் 4,32,000 வருடம்தான். துவாபர யுகத்திற்கு இரண்டு சரணங்கள் (அதாவது 8,64,000 வருடம்.) திரேதா யுகத்திற்கு மூன்று சரணங்கள். கிருத யுகத்திற்கு நான்கு சரணங்கள். இந்த நான்குயுகங்களும்-பத்து சரணங்களும் கழிந்தால் ஒரு மகாயுகம். 71 யுகங்கள் சேர்ந்தால் ஒரு மன்வந்தரம். ஒவ்வொரு மன்வந்தரத்திற்கும் ஒரு மனு ஆட்சி செய்வானாம்.

ஒரு மன்வந்தரம் முடிந்தால் யுகசந்தி. அதாவது எல்லாம் பிரளயத்தில் அழிந்துவிடும். இந்தப் பிரளயத்திலும் தான் அழியாதவன், ஆனால் பிறவற்றை அழிப்பவன் தானே கடவுளாக இருக்கமுடியும்? அதனால், அழிப்புக்கடவுளான சிவன்தான் ஒரே கடவுள் என்பார்கள்.

யுகங்களை மட்டும் நாம் சுழற்சியாகப் பார்க்கவில்லை. ஆண்டுகளையும் அப்படித்தான் பார்க்கிறோம். உதாரணமாக, இப்போது கர ஆண்டு நடக்கிறது. அடுத்த ஆண்டு (ஏப்ரல் 14 அன்று, சித்திரை முதல்நாள் தொடங்குவது) நந்தன ஆண்டு. இப்போது பிறந்த ஒருவர் அடுத்த கர ஆண்டை அடையும்போது அவருக்கு அறுபது முடிந்துவிடுகிறது. ஏனென்றால் நமக்கு ஆண்டுகள் அறுபதுதான். நந்தன ஆண்டிற்குள் அவர் காலடி எடுத்துவைக்கும்போது-அறுபத்தொன்று நடக்கத் தொடங்கும்போது அவருக்கு ஒரு வயதுதானே முடிகிறது? அந்தப்படியாக எனக்கு

இப்போது 60+2 அதாவது இரண்டாம் வயது. அறுபது வயதில் ஒரு சுழற்சி முடிந்துவிட்டது.

ஏன் அறுபது ஆண்டுகளை ஒரு சுழற்சி என்று வைத்தார்கள்? பழைய காலத்தில் அறுபது வயதுதான் சராசரியாக இந்தியாவில் மனிதன் வாழ்ந்திருப்பான் என்று தோன்றுகிறது. எண்பது வயது (எண்பது வயதுக்கு 960 மாதம், ஆனால் சில மாதங்களில் இரண்டு பவுர்ணமிகள் கூட வரும்-அது சந்திரமானக் கணக்கு) ஆகும் போது ஒருவர் ஆயிரம் பவுர்ணமிகளைக் கடந்திருப்பார். அதனால் ஆயிரம் பிறை கண்டவர் என்பார்கள். (எங்கே பார்த்திருக்கப்போகிறார்? நம் வாழ்நாளில் ஒரு பிறையைக்கூடப் பார்க்காதவர்களைப் பார்த்திருக்கிறோம். பிறையை ஓடி ஓடி வருடத்தில் ஒருமுறையாவது தேடுபவர்கள் முஸ்லிம்கள்தான். ரம்ஜான் கொண்டாடியாக வேண்டுமே?)

இந்துக்களுக்கும் (அதாவது இந்து மேல்ஜாதியினர்) பிறை முக்கியம்தான். சந்திரயானக் கணக்கின்படி, திதி என்று வகுத்தார்கள். ஒரு திதி என்பது சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையில் தீர்க்கரேகையில் 12 டிகிரி (பாகை) கடக்கும் நேரம். இது இரண்டுக்கும் இடையிலுள்ள கோணத்தைப் பொறுத்து, 19 மணிநேரம் முதல் 26 மணி நேரம் வரை இருக்கக்கூடும். அமாவாசைக்கு மறுநாள் பிரதமை (முதல்)திதி. அடுத்தநாள் துவிதியை (இரண்டாம் திதி, இரண்டாம்

பிறை). மூன்றாம் நாள் திருதியை, நான்காம் நாள் சதுர்த்தி, ஐந்தாம் நாள் பஞ்சமி, ஆறாம் நாள் சஷ்டி, ஏழாம்நாள், சப்தமி (ஏழாம் பிறை, ஏறத்தாழப் பாதிச் சந்திரன்), எட்டாம் நாள் அஷ்டமி (எட்டாம் பிறை), ஒன்பதாம் நாள் நவமி, பத்தாம் நாள் தசமி, பதினொன்றாம் நாள் ஏகாதசி, பன்னிரண்டாம் நாள் துவாதசி, பதின்மூன்றாம் நாள் திரயோதசி, பதினான்காம் நாள் சதுர்த்தசி, அடுத்தநாள் பௌர்ணமி. பௌர்ணமி திதிக்கு மறுநாள் மறுபடியும் பிரதமை, பிறகு துவிதியை, சுழற்சிதான். இதில் ராமன் பிறந்தது நவமி. அதனால் ராமநவமி கொண்டாடுவர்கள். கிருஷ்ணன் பிறந்தது அஷ்டமி. எனவே ஜன்மாஷ்டமி, கிருஷ்ண ஜயந்தி என்று கொண்டாடுவார்கள். முருகனுக்கு உகந்தது சஷ்டியாம். கந்த சஷ்டிவிழா திருச்செந்தூரில் சிறப்பானது.

இந்தத் திதிக் கணக்கில் தவறில்லை. ஆனால், நல்ல காரியங்களுக்கு அஷ்டமி நவமி ஆகாது (கிருஷ்ணனும் ராமனும் பிறந்ததனாலா?) இப்படியெல்லாம் சில (மூட)நம்பிக்கைகள்.

திதியைப் பெரும்பாலும் சிரார்த்தம் (திவசம், திதி-அதாவது இறந்த நினைவுநாள்) நடத்தத்தான் பெரும்பாலும் கணக்கிடுவது வழக்கம். என் தந்தை தசமி திதியன்று இறந்துபோனார் என்றால் அடுத்த ஆண்டு அதேமாதம் தசமி திதி வரும்போது தலைதிவசம். பிறவற்றிற்குப் பார்ப்பதில்லை.

ஆனால் நல்ல விஷயங்களுக்கு நட்சத்திரம் பார்ப்பார்கள். முன்பே 27 நட்சத்திரங்கள் இருக்கின்றன என்று பேசினோம் அல்லவா? ஒவ்வொரு நாளும் சூரியன் உதிக்கும்போது கூடவே எந்த நட்சத்திரம் உதிக்கிறதோ, அதுதான் அன்றைய நட்சத்திரம். உதாரணமாக இன்று அனுஷம் என்றால், சூரியனுடன் அனுஷ நட்சத்திரக்கூட்டம் உதயமாகி இருக்கிறது என்று அர்த்தம். பல நட்சத்திரங்களைத் திருமணத்திற்கு உதவாதவை என்று தள்ளிவிடுவார்கள். சில கிரஹப் பிரவேசத்திற்கு உதவாது. இந்தமாதிரி 'நல்ல நாட்களைக்' கணக்கிட்டு வைத்திருக்கிறார்கள்.

பழைய காலத்தில் வாழ்ந்தவர்களுக்கு ஜாலிதான். ஏதாவது வேலை என்றால், இன்றைக்கு திதி சரியில்லை, திதி சரியாக இருந்தாலும் நட்சத்திரம் சரியில்லை, நட்சத்திரம் திதி எல்லாம் சரியாக இருந்தாலும், கரணம், யோகம் சரியில்லை, இதெல்லாம் இருந்தாலும் அது கரிநாள், அல்லது என் நட்சத்திரத்திற்குச் சந்திராஷ்டம தினம், (சந்திரன் எட்டில் இருக்கிறானாம்), நாளெல்லாம் சரியாக இருந்தாலும் நான் போகவேண்டிய இடம் இன்றைக்கு வாரசூலை-இப்படிச் சொல்லியே வருடத்திற்கு 365 நாட்களும் லீவு எடுத்துக்கொள்ளலாம்!

அப்புறம் நல்லநாளிலும் இராகுகாலம், எமகண்டம் இத்தியாதிகள் இருக்கவே இருக்கின்றன. இந்தியாவைப் பொறுத்தவரை, இந்தியாவில் இத்தனை கட்டுப்பாடுகளுக்கு இடையில் எப்படி

வேலை நடந்தது (எந்த வேலையானாலும்) என்பது ஆச்சரியம்தான். இத்தனை அசுப நாட்கள், நேரங்கள் இருந்தாலும் இதற்கிடையில் குழந்தை உண்டாக்கும் செய்கைக்கு மட்டும் எந்த நேரமும் தேவையில்லை!

குழந்தை உருவாக்கம் என்கிறபோது ஞாபகம் வருகிறது. பலபேர் பூர்வ ஜென்மம், அடுத்த ஜென்மம் என்பதையெல்லாம் நம்புகிறார்கள். ஒரு மனிதன் அடுத்த பிறவியிலும் மனிதனாகவே பிறப்பான் என்றால் உலகத்தில் மக்கள் தொகைப்பெருக்கம் எப்படி ஏற்படும்? ஒருவேளை அதிகப்படி மக்கள் எல்லாம் அடுத்த ஜென்மத்தில் கரப்பான் பூச்சியாகப் பிறப்பார்கள் போலிருக்கிறது (அதைத்தான் அழிக்கவே முடியாது என்கிறார்கள், பெருகிக்கொண்டே போகிறது). பல கோடிக்கணக்கான ஆண்டுகளாக மனிதனுக்கு முன்னாலிருந்தே வாழ்ந்துவரும் ஜந்து அதுதான்.